'மாறன்' அவர்களின் உயர்ந்த சிறுகதைகள் 'ஆனந்த விகடன்,' 'கல்கி' முதலிய பத்திரிகைகளில் தமிழ் மக்கள் படித்து ரசித்திருக்கிறார்கள். அவர் எழுதிய இந்தப் புதுமுறை நாவலையும் படித்துப் பாருங்கள்.



---

ரூபாய் : மூன்று

(தபால் செலவு தனி)

# வளர் பிறை

நவீனம்



ஆசிரியர் :

'மாறன்'





கார்த்திகேயினி பிரசுரம்

இராமச்சந்திரபுரம் :: புதுக்கோட்டை ஸ்டேட்

தமிழின் மறுமலர்ச்சிக்கு வழிவகுத்த
உலக மகாகவி சுப்பிரமணிய பாரதிக்கு இந்நூல்
சமர்ப்பணம்.

# நன்றியுரை

இந்த நவீனத்தை எழுதுகையில் அவ்வப்போது ஆலோசனைகள் கூறி எனக்கு ஊக்கமளித்த திரு. கே. பி. ரங்காச்சாரி எம். ஏ. அவர்களுக்கும் இது புத்தகமாக வெளிவருவதில் ஆர்வம் காட்டிய எனது நண்பர்களுக்கும், பிரசுரகர்த்தருக்கும் எனது மனமார்ந்த நன்றி. இதை வரவேற்கும் வாசகர்களுக்கும் எனது அன்பு.

"மாறன்"

# பதிப்புரை

தமிழில் நாவல்கள் இப்பொழுதுதான் வரத் துவங்கி யுள்ளன. இதைக்கருதி தமிழில் வெளியாகும் எந்த நாவலும் வரவேற்கப்படவேண்டியதுதான். அதுவும் நாவல் மொழிபெயர்ப்பாகவும் இல்லாமல், புது முறையில், இதுவரை அதிகமாகக் கையாளப்படாத விஷயம் பற்றி இருந்தால் அதைக் குதூகலத்துடன் வரவேற்கவேண்டும்.

இன்றைய இலக்கியத்தின்போக்கு — இங்கு குறிப் பிடப்படுவது, தமிழ் இலக்கியம் மட்டுமல்ல — சம்பவங் களையும் சந்திப்புக்களையும்விட பாத்திரங்களின் மனநிலைக் கும் எண்ண—உணர்ச்சி மாறுதல்களுக்கும் முக்யத்துவ மளிக்கிறது. இதனுல்தான் நாவல்களிலும் கதையைவிட பாத்திரங்களின்மனதைப் படம்பிடித்துக்காட்டுவதிலேயே ஆசிரியர்கள் தங்கள் கவனத்தையும், மேதையையும் செலுத்துகிறுர்கள். கதையில்லாமல் நாவல் இருக்கமுடி யாதுதான். ஆனுல் சம்பவங்கள் கதாபாத்திரங்களின் மனதை விளக்கவே உபயோகப்படுகின்றன. அல்லது சம்பவங்கள் எப்படி கதாபாத்திரங்களின் மனநிலையின், மனப்போக்கின், சுபாவத்தின் விளைவு என்பது சித்திரிக்கப் படுகிறது. இதற்கு ஆசிரியர், தாமே கதையைச்சொல் லாமல், கதாபாத்திரங்களே கதையைச் சொல்வதுபோல் எழுதுவது நல்லவழி. இன்னும், ஆசிரியர் தைரியமாக பாத்திரங்களே கதையைச் சொல்ல வைக்காமல், அவரவர் மனதில் வந்துசெல்லும் எண்ணங்களை அவரவர் "உரக்க நினைக்கும்படி" செய்வது ஒரு சிறந்த உத்தி. ஆனுல் ஜாக் கிரதையாக, திறம்படக் கையாளவேண்டும்.

மேலும், கதை ஒரு வெறும் நிகழ்ச்சித்தொடராக இருந்தால் என்ன பயன்? படிக்க ரஸமாக இருக்கலாம். ஆனுல் நாவல் இலக்கியாம்சம் பெறுது. இன்று நாம் ரஸிக்கும்படி ஒரு நாவல் எழுதப்படவேண்டுமானுல்,

ஆசிரியர் நிகழ்ச்சிகளை, கதையின் சம்பவங்களைத் துணையாகக்கொண்டு ஒரு பாத்திரத்தின் பரிணாம வளர்ச்சியைச் சித்திரிக்கவேண்டும்; அல்லது ஒரு தத்துவத்தை விளக்க வேண்டும், ஒரு கருத்தை ஆராயவேண்டும். சம்பவங்கள் கதை இவையெல்லாம் சட்டம், காகிதம், வர்ணம், அவ்வளவுதான்; சித்திரமாகாது.

'வளர் பிறை' யின் கதை என்ன? அது சாரதாம்பாளின் கதையல்ல; அவளது மகளின் வாழ்க்கைவரலாறு அல்ல; மோகனாவின் ப்ரச்னையுமல்ல; 'வளர் பிறை'யின் கதை கலையின் கதை. தாமரை சேற்றில் பூக்கிறது. ஆனால் சேற்றில்தான் தாமரை மலருமா? மலரவேண்டுமா? இதுதான் 'வளர் பிறை'யின் கதை. பாத்திரங்களை மறந்துவிடுங்கள்; சம்பவங்கள் வேண்டாம். இவை நீங்கள் நடந்துசெல்லும் வழி; நீங்கள் போய்ச்சேரவேண்டிய கோவிலல்ல. மோகனா முடிவுக்குவந்த தீர்மானம் சரியோ, தவறோ, நமக்கு அக்கரையில்லை. வேலாயுதம் சின்னத்தனமாக நடந்துகொண்டானா? அல்லது அதுதான் பெரிய மனுஷத்தனமா என்பது ப்ரச்னையல்ல. 'வளர் பிறை' யின் கதை இரு கேள்விகளில் அடங்கியுள்ளது.

பொதுவாக சீர்திருத்தமென்றால் ஒரு ஆபத்து உண்டு. சீரற்றிருக்கும் சமூகத்திலும் ஒரு சில உயர் குணங்கள், சிறந்த அம்சங்கள் இருக்கத்தான் செய்கின்றன. அம்மாதிரி ஒரு சமூகத்தைச் சீர்திருத்த முயலும்போது குறைகள் மறையஆரம்பிக்குமுன் அந்த ஒரு சில நல்ல அம்சங்கள்தான் மறைகின்றன. 'வளர் பிறை' நம்மைக்கேட்கும் முதல்கேள்வி: சமூகத்தின் ஒரு பகுதியின் சீரற்ற நிலையைத்திருத்த அப்பகுதியில் உதித்து வளர்ந்துவரும் சிறந்த அம்சங்களைப் பலியிடவேண்டியது தானா? சிறந்தவற்றை வைத்துக்கொண்டு குறைகளை விலக்குவோம் என்ற நப்பாசைவேண்டாம். அது முடியாது. கலைக்கும் நன்னடத்தைக்கும் ஏனோ பொருத்தமில்லை.

இரண்டாவது கேள்வி: கலைக்குடும்பத்தில் பிறந்த ஒருத்தி குடும்பத்தின் சூழ்நிலையை வெறுக்கும்வேகத்தில் கலையை மறக்கிறாள். அழகு வேண்டாமென்று அந்தஸ்தை நாடுகிறாள். மூன்றும் தலைமுறையிலும் அக்கலைக் குடும்பத்தின் கலையுணர்ச்சி சந்ததியார் ரத்தத்தில் ஓடுகிறது. நிர்ப்பந்தமாக வெளிவரத்துடிக்கிறது. அக்கலை வெளி வந்தால் குடும்பத்தின் சூழ்நிலை மீண்டுமொருமுறை மாறலாம். அழகுவர அந்தஸ்து போகலாம். "கலைஞன் சாதாரண மனிதனைப்போலல்ல; அவன் ஆசாரம் வேறு; நம் ஆசாரம் வேறு; கெட்டதும் நல்லதும் நமக்குத்தான், அவனுக்கு அழகும் கோரமும்தான் உண்டு" என்று பயமின்றி ஒத்துக்கொள்ளப்போகிறோமா? இல்லை, கட்டுப்பாடு என்ற வேலிகட்டி, கலையை விலங்கிட்டுச் சிறையில் வைக்கப்போகிறோமா?

இக்கேள்விகளுக்கு ஆசிரியர் பதில்கூற முடியாது. அது வாசகரின் பொறுப்பு.

# வளர் பிறை

## 1 சாரதாம்பாள்

இந்தப் பெண் சுந்தரி என்ன இப்படிப் பைத்தியம் பிடித்ததுபோல எப்போதும் மாடி ஜன்னலின் பக்கமே போய் 'உம்'மென்று உட்கார்ந்திருக்கிறாள். என்ன சொன்னாலும் இவளுக்குக் காதில் ஏறமாட்டேனென்கிறதே. நான் இவளைக் கஷ்டப்படுத்தவா செய்கிறேன்? ஒரு சீமான் வீட்டுப் பெண்ணைக்கூட இவ்வளவு செல்லமாக வளர்க்கமாட்டார்கள். நான் இவளுக்கு என்ன குறை வைத்திருக்கிறேன்? என்ன குறை என்று என்னிடம் சொன்னாலாவது பரிகாரம் தேடலாம்.

ஒரு வேளை காத்துக்கருப்பு ஏதாவது அவளைப் பிடித்திருக்குமோ? பூசாரியைக் கூப்பிட்டுப் பார்க்கச் சொல்ல வேண்டும்.

ஒரு திருப்தி! சுந்தரி நாட்டியக் கலையை நன்றாகப் பயின்றுகொண்டாள். ஆனால்! அதை அபிவிருத்தி செய்யமாட்டாள் போலிருக்கிறதே. அரங்கேற்றத்தன்று எவ்வளவு கும்பல்! எல்லா ஜனங்களும் இவளுடைய ஆட்டத்தைக் கண்டு அப்படியே சொக்கிப்போய் விட்டார்களே! அதனால் என் மனம் எவ்வளவு பூரிப்படைந்தது! என் கலை, வாழையடி வாழையாகத் தழைத்தோங்கி வருகிறதென்பதை நேரில் காண்பதைவிட வேறு என்ன வேண்டும் எனக்கு!

அன்று, நாட்டியத்தின் முடிவில், சுந்தரி ஏன் அப்படி முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டிருந்தாள்? ஏதோ

சபைக்கூச்சம் என்றுதான் முதலில் நினைத்தேன். ஆனால் அப்படி சபைக்கூச்சம் இருந்தால் நாட்டியத்தின்போதே ஜதி பிசகியிருக்குமே. எதற்காக சுந்தரி இப்படி ஏறு மாறாக இருக்கிறாள் என்று என்னால் கண்டுபிடிக்கவே முடியவில்லை. எப்படிப்பட்ட 'கடோற்கஜன்'களுடைய மனதையெல்லாம் நான் ஆழம்பார்த்திருக்கிறேன். என் மகளுடைய மனதை மட்டும் என்னால் அறிய முடிய வில்லையே. இவள் என்னிடம் ஏதாவது விரோதமாக நடந்துகொள்கிறாளா? அதுவும் இல்லை. பருவத்துக்குரிய மோகம், காதல், வேட்கை இவற்றினாலும் இவள் வருந்து வதாகத் தெரியவில்லை. ஆண்களைக் கண்டாலே வெறுக் கிறாளே! நமது குலத்துக்கு இந்தக்குணம் இருக்கலாமா?

வீட்டில்வைத்து, சுந்தரி என்ன அழகாக வீணை வாசிக்கிறாள். ஒரு சபையில் போய்க் கச்சேரி செய்யென் றால், உடனே இவள் முகம் கோணுகிறதே. ஏன்? நாலு சபைகளில் போய்ப் பாடிக்கொண்டிருந்தாலல்லவா பெயர் பிரபலமாகும். இவளுடைய அழகிற்கு, கோதண்டரா விடம் சொன்னால், சினிமாவில்கூட நடிக்க ஏற்பாடு செய்ய லாம். ஆனால், இந்தப் பெண்ணின் குணம் இரண்டுங் கெட்டானாக இருக்கிறதே. பண்ணையார் வீட்டுக் கலியா ணத்திற்குப் போய் இரண்டு நலுங்குப் பாட்டுப் பாடிவிட்டு வா, என்றால் இவளுக்கு வெட்கமாக இருக்கிறதாமே! தாசிப் பெண் வெட்கப்படலாமா? சங்கம்பட்டி மைனரை ஒரு நாள் விருந்து சாப்பிட வரவழைக்கலாமென்றால், சுந்தரி அன்று பார்த்து 'உம்'மென்று உட்கார்ந்து விடுவாளே அதற்கென்ன செய்வது? மெள்ள மெள்ளத் தான் இவள் மனதைச் சரிப்படுத்த வேண்டும்.

சாப்பிடுவதில்கூட இவளுக்குக் கவனமில்லையே. வயிற்று வலிக்காரிபோல இரண்டு உருண்டை சாப்பிடு கிறாள். ஒருவேளை உடம்பில் உள்ளூர ஏதாவது பரம்பரை வியாதி இருந்து தொல்லை கொடுக்கிறதோ? ஓயாமல் படிப்பு என்ன வேண்டியிருக்கிறது இவளுக்கு? பொழுது

விடிந்தால் பத்திரிகைதான் இவள் கையில் இருக்கிறது. மாலை வேளையில் முகமினுக்கி, மையிட்டுப் புன்னகை யோடு வீட்டிலிருந்தாலல்லவா லக்ஷ்மீகரம் கூடிவரும். இந்த அசட்டுப் பெண் மாடி ஜன்னலின் எதிரே போய் உட்கார்ந்து எதையோ பறிகொடுத்தவள்போலக் கவலைப் பட்டுக் கொண்டிருந்தால் என்ன கிடைக்கும்.

ஒரு சபையில் போய் நாட்டியமாடவோ, பாடவோ வெட்கமாயிருக்கிறதென்று சொல்கிறவள், எங்கேயாவது பிரசங்கம் என்றால் உடனே கேட்கப் புறப்படுகிறாளே! இவளுடைய எண்ணம்தான் என்ன? இப்படிப் பிரசங் கம் கேட்டுக்கொண்டும் பத்திரிகை படித்துக்கொண்டுமே தன் வாழ்நாள் முழுவதையும் கழித்துவிடலாமென்று பார்க்கிறாளா? அட பைத்தியக்காரப் பெண்ணே! உலக முன்னேற்றத்திற்காக ஒவ்வொரு ஜீவனுக்கும் உழைப்பு உண்டு. தன் பங்கு வேலையைச் செய்யாமல், உலகம் தரும் உணவை உண்டு காலம் போக்குவது பாவம்! கலை வாழ்வு எவ்வளவு மேன்மையானது. நமது குலம் செய்த பாக்யத்தினால்தான் அரிய கலைகளான சங்கீதமும் நாட்டிய மும் நம்மிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. இதற் காக நாம் எவ்வளவு பெருமைப்படவேண்டும்! மேலும், பெண்மையின் முழு வசிகர சக்தியும் நம்மிடமல்லவா அமைந்திருக்கிறது. பெரிய பெரிய உத்தியோகஸ்தனும், பணக்காரனும் நம்மிடம் வந்து தெண்டனிட்டுக் காதல் பிச்சை கேட்கிறார்களே! இதெல்லாம் தெரிகிறதா இந்தப் பெண்ணிற்கு!

நமது குலத்துப் பெண்ணுக்குக் கொஞ்சம் முக வெட்டும், நளினமான பேச்சும் இருந்துவிட்டால் லக்ஷ லக்ஷமாகப் பணம் குவிக்கலாமே. என் மங்கைப் பரு வத்தில் நான் எவ்வளவு மிடுக்காக வாழ்ந்தேன்! சுந்தரி யைப் போலவா அழுது வழிந்து கொண்டிருந்தேன்? நான் போகுமிடங்களெல்லாம் முகங்கள் திரும்புமே! நேரத்திற்கொரு உடை உடுப்பேன். வேளைக்கொரு நகை

அணிவேன். என் வீடு முழுதும் கூட்டமும் குதூகலமுமாக இருக்குமே. அந்தக் காலத்தையும் இந்தக் காலத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால்! அட அநியாயமே! சுந்தரி வயதடைந்து இரண்டு வருஷமாயிற்றே! இதுவரை ஒரு செப்புக்காசு வரும்படி உண்டா! சுந்தரியின் அழகிற்கும் கலைக்கும், இந்த இரண்டு வருஷத்திற்குள், நான் சம்பாதித்ததைவிட இரண்டு மடங்கு செல்வம் சம்பாதித்திருக்கலாமே! உம்.......இதன் தலை விதி எப்படி எப்படி இருக்கிறதோ!

வைத்தியம் பண்ணிப் பார்க்கலாம் அல்லது குறி கேட்டுப் பார்க்கலாம் என்றால், இவள் ஒன்றுமே வேண்டாமென்கிறாளே! இப்படியும் ஒரு பைத்தியம் உண்டா? சிறு வயதில் எவ்வளவு சூடிகையாக இருந்தாள்! எவ்வளவு லகுவாக நாட்டியமும், சங்கீதமும் கற்றுக்கொண்டாள். இப்பொழுதுதானே இப்படி அசமந்தமாகி விட்டாள்.

இவளைக் கோபிக்கவோ, திட்டவோ எனக்கு மனம் வரமாட்டேனென்கிறது. என்னதான் குற்றம் செய்கிறாள்! ஒன்றும் இல்லை. எதற்கெடுத்தாலும் வெட்கமாயிருக்கிறதென்கிறாள். இவள் மனசு இப்படி இருக்கும் போது, இவளை நான் பயமுறுத்தித் திருப்ப முடியுமா? நான் பயமுறுத்தினால் இவள் யாரிடம் போய் ஆறுதல் பெறமுடியும்? ஒரே பெண்! எவ்வளவோ செல்லமாக வளர்த்துவிட்டேன். ஆகையால் அதன் போக்குப்படியே போய்த்தான் திருப்ப வேண்டும். புதுக்குதிரைகளை வண்டியில் பூட்டியவுடன் மிரளத்தானே செய்கிறது. கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அதன் மருட்சியைப் போக்க வேண்டும். இவளுடைய அழகும் பருவமும் வீணாகக் கழிகிறதே! பருவகாலத்தைத் தவறவிட்ட விவசாயிக்கு நல்ல மாசூல் கிடைக்குமா?

நான் தேடிவைத்திருக்கும் பணத்தைக்கொண்டே இவள் சுகமாக ஜீவிக்க முடியும். ஆனாலும் இந்தச் சோம்பேறி வாழ்க்கை நமக்கு உதவுமா? இவளே இப்படி இருந்தால் இவளுக்குப் பிறக்கும் பெண் இதைவிடச் சோம்பேறியாகவல்லவா போய்விடும். எங்கள் பரம்பரையிலேயே இல்லாத புது தினுசாக அல்லவா இருக்கிறது இந்தப் பெண்ணின் குணம்! என் போதனைகள் இவளுக்கு வேம்பாகப்பட்டால் இவள் எப்படி சந்தோஷமாக வாழ்வது? எப்படிப் பணம் சேர்த்து நாலு தாசிகளைப் போலப் பெயரெடுப்பது?

குஞ்சரத்தின் மகள் என்ன சுந்தரியைப்போல் அவ்வளவு லக்ஷணமா? சங்கீதமும் ஏதோ 'கன்னுப்பின்னு' என்று பாடுகிறுள். அவளுக்கு எவ்வளவு பவிசு வந்து குவிகிறது. குஞ்சரம் அதையெல்லாம் பார்க்கக் கொடுத்து வைத்த பாக்யவதி. நான் இந்தப் பைத்தியத்தை வைத்துக்கொண்டு கவலைப்படவேண்டிய அபாக்யவதி! நான் யாருக்கு என்ன பிழை செய்தேனே! எனக்கு இப்படிப் பட்ட பெண் வந்து வாய்த்திருக்கிறது. நான் அடிக்கடி தூண்டிக்கொண்டிருக்கவில்லையானல், சங்கீதத்தையும், நாட்டியத்தையும்கூட இவள் அடியோடு விட்டுவிடுவாள். என்ன வாய்ப்பான சாரீரம். உலகத்தில் நன்ருக சோபிக்கக்கூடிய சங்கீத ஞானமும் லகுவாக அமைந்துவிட்டதே. இவளுக்குள்ள சங்கீத ஞானத்தில் அரைக்கால்வாசி இருந்தால், குஞ்சரத்தின் மகள் இந்த ஊரில் பாதியை விலைக்கு வாங்கி விடுவாளே!

பிரகதீஸ்வரா! நீதானப்பா சுந்தரிக்கு நல்ல புத்தியைக் கொடுக்க வேண்டும். கோவில் பட்டர் அருமையாகப் பிரசாதம் கொண்டுவந்து கொடுத்தால், இவள் அன்போடு வாங்கிக்கொண்டாலல்லவா நன்மைகளெல்லாம் கிடைக்கும். தலையைக் குனிந்து கொண்டே, வேண்டா வெறுப்பாகக் கடவுள் பிரசாதத்தை வாங்கினுல் திருவருள்

கிடைக்குமா? பட்டர்தான் இதற்கு எவ்வளவு கேலி பண்ணினுர்!

வீட்டுக்கு ஒரு மனிதர் வந்தால் இரண்டு நிமிஷமாவது அவரோடு அன்பாகப் பேசினுல் அல்லவா நன்ருக இருக்கும். ஆண் பிள்ளைகளைக் கண்டால் பேய்களைக் கண்டது போலப் பயந்து ஓடுகிருளே! நமக்கு வரவேண்டிய பண மெல்லாம் இந்த ஆண்களிடம் சிக்கியிருக்கிறதென்பதை இவள் உணரவில்லையே. சம்பாத்தியம் என்பதில் இவளுக்குச் சிறிதுகூட அக்கரை இல்லை.

இனியும் இப்படியே விட்டுவிட்டால் குடிகெட்டுப் போய்விடும். கொஞ்சம் கண்டிப்பாக இருந்தால்தான் சரிப்பட்டு வருவாளோ என்னவோ! நயமாகச் சொன்னுல் ஏருது. ஆனுல் ஒரு வேளை இவள் என்னையே எதிர்த்துப் பேச ஆரம்பித்து விட்டால்! பிறகு அதுவே வழக்கமாகப் போய்விடும். அப்புறம் இவளோடு சதா தகராறு பண்ணிக்கொண்டிருக்க வேண்டியதுதான். நாலு பேர் பார்த்தால் சிரிப்பார்கள். அதற்கும் இடம் கொடுத்து விடக்கூடாது. மெட்டும் தட்டுமாகப் பழகித்தான் இவள் மனதைத் திருப்பவேண்டும். எதற்கும் குறிகாரப் பொன்னனிடம் போய்க் கேட்டுப்பார்க்கலாம். ஏதோ கிரகசாரம் தான் இவளை முன்னேற விடாமல் இப்படி வைத்திருக்கிறது. பரிகாரம் ஏதாவது செய்துவிட்டால், கிரகதோஷம் தீர்ந்துவிடும். பாடவைத்துப் படிக்கவைத்துப் பலனில்லாமல் போய்விட்டால் என்னசெய்வது? நாளைக்கு எனக்கல்லவா அவமானம்.



## 2 சுந்தரி

இந்த மாடி ஜன்னல் எனக்கு எவ்வளவு ஆறுதல் அளிக்கிறது! தனிமைக்கே ஒரு சுகம் உண்டுதான். உள்ளே உறைந்துகிடக்கும் எண்ணங்களையெல்லாம் புரட்டிப் புரட்டிக் கொடுக்கலாம். அதோ அந்தப் பனைமரத்தின் ஓலைகள் எப்பொழுதும் 'சல சல' வென்று கதறிக்கொண்டேயிருக்கிறதே! அதற்குக்கூட என்னைப்போன்று ஓயாக் கவலைகள் உண்டோ என்னவோ!

அன்று என் காலில் குத்தியிருந்த கண்ணாடிச் சில்லை இந்த ஜன்னல் வழியாகத் தூர வீசியெறிந்தேன். அது போல என் மனதைக் குத்திக்கொண்டேயிருக்கும் எண்ணக் குமுறல்களையெல்லாம் வீசி எறிவதற்கும் இதுபோல ஒரு சாளரம் இருந்தால் எனக்கு எவ்வளவு நிம்மதியளிக்கும்! என் கவலைகளையெல்லாம் மறக்கவேண்டுமென்று எத்தனை தடவை முயற்சிக்கிறேன்! ஆனால் அவைகள் பழையபடி பழையபடி கடிகார முட்களைப்போல என் நெஞ்சிலேயே சுழன்றுகொண்டிருக்கின்றனவே!

துக்கத்தையும் கவலைகளையும் பிறரிடம் சொன்னால் சிறிது ஆறுதல் கிடைக்குமென்று சொல்வார்கள். என் மனக்கஷ்டத்தை யாரிடம் சொல்வது? சொன்னால் சிரிக்கவல்லவா செய்வார்கள்.

என் தாய் சாரதாம்பாளுக்கு என்னைப்பற்றி, நான் அவள் மகள் என்பதைத்தவிர வேறு என்ன தெரிகிறது! அவளுக்குச் சொன்னால் புரியப்போவதில்லை. தனிமையிலேயே புலம்பிக்கொண்டும் கவலைக்கு ஒரு முடிவு காணாமலுமே என் வாழ்க்கை முழுதும் பாழாகிவிடுமோ?

நான் ஏன் இந்தத் தாசிக் குடும்பத்தில் பிறந்தேன்? சே! நான் சொல்வது தவறு. பிறந்தது என் குற்றமல்ல.

இந்தச் சமூகத்தின்பேரில் ஏற்றப்பட்டிருக்கும் அவமானத்தைக் களைந்தெறிய நான் முயற்சிசெய்யவேண்டும். ஆனால் எங்கோ ஒரு மூலையில் இருக்கும் நான் மட்டும் முயற்சிசெய்தால் என்ன பயனிருக்கிறது? நூலைக்கட்டித் தேரை இழுத்துவிட முடியுமா?

மற்றச் சமூகங்களெல்லாம் கற்புடன் வாழ்வதற்கு எங்கள் சமூகம் கெட்டுப்போகவேண்டுமாம். ஜனசமுதாயத்தின் அமைப்பு என்ன அழகாக இருக்கிறது! குடும்பப்பெண் கற்புநிலை தவறினால் ஜனங்களுக்கு எவ்வளவு ஆத்திரமுண்டாகிறது! எங்களுக்கு விபசாரமே தொழிலாம்! இந்த (அ)நீதி ஆதிகாலம்தொட்டு வாழையடி வாழையாகத் தழைத்து வந்திருக்கிறது! ஏன்? எங்கள் தாசி வகுப்பினரும்கூட இந்த வாழ்க்கையையே விரும்பி வாழ்ந்து வருகிறார்கள். ஆண்களை அடிமைப்படுத்துவதில் பெண்மைக்குக் கிடைக்கும் வெற்றியைக் கண்டு அவர்கள் மகிழ்கிறார்கள். ஆனால் மற்றச் சமூகங்களின்முன் தங்கள் கௌரவம் எந்த நிலையில் இருக்கிறதென்பதை அடியோடு மறந்து விடுகிறார்கள்.

அன்று சபையில் என் நாட்டியத்தைப் பார்த்துக் கொண்டிருந்த அத்தனை ஆண்களும் எனது கலையழகையா மதித்தார்கள்? இந்த ஆண்கள் என் உடலைக் கண்டு என்ன மோகம் கொள்கிறார்கள்! அகத்திலுள்ள காமப் பேயின் ஆட்டத்தை அவர்களுடைய முகங்கள்தான் காட்டி விடுகின்றனவே! ரொம்பக் கௌரவமான உடைகளை அணிந்துகொண்டு உட்கார்ந்து விடுகிறார்கள். அவர்கள் மனமல்லவா கௌரவமாக இருக்கவேண்டும்!

நாட்டியம் பார்ப்பவர்களைக் குறை சொல்லி என்ன பயன்? நான் நாட்டியம் ஆடினால் அவர்கள் ஏன் பார்க்கக்கூடாது? எப்படி வேண்டுமானாலும் பார்க்கலாம்தான். ஆடவைத்துப் பார்க்கவேண்டுமென்றே எங்கள் சமூகத்தின்மீது விதித்துவிட்டதே ஜன சமுதாயம்! எனக்குப்

பொது மடந்தையென்று சமூக நாமம்! அப்பப்பா! இந்தப் பெயரைச் சொல்லக்கூட எனக்கு அவமானமாக இருக்கிறது!

எங்கள் வீடுகூட்டும் வேலைக்காரிகூட சமுதாயத்தின் முன் கண்யமானவளாக மதிக்கப்படுகிருள். ஆனால் நானே! என்னை யாரும் தீண்டலாம்! அது குற்றமில்லை யாம்! இம்மாதிரியான ஒரு சமூகத்தை நிர்மாணித்த வர்கள் வெறும் காமுகர்களாகவே இருந்திருக்கவேண்டும்.

என் தாயைப்பற்றி நினைத்தால் எனக்கு வருத்தம்தான் உண்டாகிறது. கோபமே வரவில்லை. அவள் என்ன செய்வாள்! சிறந்த நாட்டியக்கலை அவளிடமிருக்கிறது. சாரதாம்பாளின் நாட்டியமென்ருல் நாடு முழுவதும் சொல்லுமே! பரம்பரையான கலை நன்கு தழைத்து வளரவேண்டுமென்றே அவள் இதில் எனக்கு நன்ருகப் பயிற்சி கொடுத்திருக்கிருள். நாட்டியத்தில் தனக்கு மேலாக நான் புகழ் பெறுவேனென்ற நம்பிக்கையும் அவளுக்கு இருக்கிறது. கலைக்காகப் பணிசெய்ய நான் தயார் தான். ஆனல் இந்தப் பருவத்தில் பணம் திரட்டவேண்டு மென்று அடிக்கடி அவள் போதனை செய்கிருளே, அது தான் எனக்குப் பிடிக்கவேயில்லை. பாவம்! என் மனதி லிருப்பதை அவள் எப்படி அறிய முடியும்! கற்புடன் வாழப்போகிறேன் என்ருல் அது அவளுக்கு ஏதோ தென்னை மரத்தில் வாழைக்காய் காய்ப்பதுபோல் விபரீத மாகப்படும்.

பண்ணையார் மகனுக்குக் கலியாணமென்ருல் எனக் கென்ன? நான் போய் நலுங்குப் பாட்டுப் பாடி சன் மானம் வாங்கிக்கொண்டு வரவேண்டுமாம். கலியாண வீட்டிற்கு வந்திருக்கும் விருந்தினர்களைத் திருப்திப்படுத்த நான் போய்ப் பாடவேண்டுமாம். என்னேடு படித்த பெண்களெல்லாம் அங்கே நாணிக்கோணிக் கொண்டு கதவுப் பக்கம் நின்றுகொண்டிருப்பார்கள். நான் மட்டும்

. .

லஜ்ஜையில்லாமல் சபை நடுவில் உட்கார்ந்து பாட்டுப் பாடவேண்டுமாம். சபையிலுள்ள எல்லோரும் என்னைப் பார்த்து இளிக்கவேண்டும்! "சோடா வேண்டுமா?" என்று ஒருவன் வருவான். "சுந்தரிக்கு வெத்திலை கொடுடா முதல்லே" என்று இன்னொருவன் உபசாரம் பண்ணுவான். என் மீது ரொம்ப அபிமானம் காட்டுகிறானும் அவன்! சமுதாய வழக்கமல்லவா அவனுக்கு என்மீது அவ்வளவு உரிமை கொண்டாட வசதியளித்திருக்கிறது. சமுதாயத்தில் நான் கௌரவமாக—ஒருவனுடைய மனைவியென வாழ முடியாதா? என் மீது அபிமானம் காட்டும் இந்த ஆண்களின் கூட்டத்தில் ஒருவனாவது துணிந்து என்னைத் தன் மனைவியாக ஏற்றுக்கொள்வானா? மாட்டான். எல்லோரும் வேஷக்காரர்கள் வஞ்சகர்கள்.

தாசிகளை நரகத்திற்கும் சிலந்திப் பூச்சிக்கும் ஒப்பிட்டுப் பேசும் ஆண்கள், தாங்கள் ஆஷாடபூதிகளாக வாழ்வதை எடுத்துக் காட்டுவதேயில்லை. தங்கள் சுகத்துக்கென்று ஒரு சமூகத்தை நிறுவித்து, அதைப்பற்றித் தாழ்வாகப் பேசுவது; எழுதுவது! ஆனால் இரகசியத்தில் எங்கள் காலடியில் வந்து விழுவது. என்ன கபட நாடகம்! பெரிய சீர்திருத்தவாதிகள் போல, எங்கள் குலத்தினால் சமுதாயத்திற்கு ஏற்பட்டுவரும் கெடுதல்களை அடுக்கு கிறார்களே, அவர்களுடைய சொந்த நிலைமையை நான் நன்றாக அறிவேன். எங்களுடைய ஒரு புன்னகையில், ஒரு கண் வீச்சில், அவர்களுடைய லட்சியங்களெல்லாம் காற்றாய்ப் பறந்துவிடுகிறது. உலகம் உள்ளளவும் இந்தச் சீர்திருத்தப் பேச்சும் இருந்துகொண்டேதான் இருக்கும். கண்ணகியையும் மாதவியையும் சிருஷ்டித்த கதாசிரியன் என்ன நினைத்திருப்பான்! கண்ணகியின் கற்புத்திறமை உலகத்தில் என்றென்றும் பிரகாசிப்பதற்காகவே மாதவி யென்ற ஒரு கதாபாத்திரத்தையும் அருகிலே வைத்திருக் கிறான். கண்ணகியும் பெண். மாதவியும் பெண். கண்ண

கிக்கு உயர்வு கொடுக்கிறார்கள். மாதவியைத் தாசியென்று இகழ்கிறார்கள். மாதவி தன் குலத் தொழிலைத்தானே நடத்தினாள். சமுதாயம்தானே அவளைத் தாசியாக்கியது! அதே சமுதாயம், தன் கடமையைச் செய்த அவளை இகழ்கிறது! எச்சில் தம்பலத்தைத் தன் உடையிலேயே துப்பிக் கொண்டு பிறகு அதைப் பார்த்து அசிங்கப்படுவதுபோல இருக்கிறது இந்தப் பைத்தியக்காரச் செய்கை!

சங்கீதக் கலையையும், நாட்டியக் கலையையும் சமுதாயம் எங்களிடம் ஒப்படைத்துவிட்டது. கலை, கலைக்காகத் தானே! நாங்கள் நடத்திவரும் ஈனத் தொழிலுக்கு விளம்பரம் போலவா கலையை வளர்ப்பது? ஆண்டவன் சந்நிதானத்தில் பக்தி பரவசத்தை வெளியிடுவதற்காக ஏற்பட்ட எங்கள் கலைகளை மிகக் கீழ்த்தரமான ரசனையோடு காண ஆசைப்படுகிறார்கள் காமப்பித்தர்கள். எங்கள் கலையும், எங்கள் கௌரவமும் உயர்வடையக் காலதேவன் அருள்புரிவானா?

எனக்கு மட்டும் இத்தகைய உணர்ச்சி உண்டாவதற்குக் காரணம் என்ன? என்னைப்போன்ற தாசிகள் எத்தனையோ பேர் இருக்கிறார்களே. அவர்கள் எல்லோரும் இதைப்போல ஏன் எண்ணவில்லை? அவர்களும் இப்படி உணர்வார்களானால் எவ்வளவு சீக்கிரமாக எங்கள் குலத்திற்கு மேன்மை கிடைக்கும்! அது எந்தக்காலத்தில் நடக்குமோ? ஜனசமுதாயம் எத்தனையோ வழிகளில் முன்னேறிக்கொண்டு போகிறது. காலச்சுழலில் எத்தனை எத்தனை மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன! நான் விரும்பும் இந்த மாறுதலும் ஏன் ஏற்படக்கூடாது? சீர்திருத்தம் செய்யப் பறக்கிறவர்களுக்கு தியாகபுத்தி, சகிப்புத் தன்மை என்ற சிறகுகள் வேண்டும். வீடுவாசல், தாய், சொத்து, சுகம் இவைகளையெல்லாம் என் லட்சியத்திற்காக விட்டுச் செல்லவேண்டியிருக்கலாம். எத்தனையோ இன்னல்கள் எதிர்ப்படும். அவைகளைக் கண்டு மலைத்தால்

என் லட்சியம் சித்தியாகாது. அவ்வளவு துணிவு என்னிடம் இருக்கிறதா? ஏன் இல்லை? கடலைக்கடக்க வேண்டுமென்ற இலட்சியம் தோன்றினாலே அதற்குச் சாதனமாகிய கப்பலைச் செய்வதற்கு, அறிவு தீவிரமாக முயற்சிசெய்கிறது. இலட்சிய வேகத்திற்கு ஏற்றபடி அறிவு தீவிரமாகத் துணை செய்யும். நான் செய்யும் முயற்சி இன்று பலனளிக்காவிட்டாலும், பின் சந்ததியாரின் லட்சியப் பாதைக்கு நான் ஒரு தூண்டுகோலாகவாவது இருக்கமாட்டேனா! பார்க்கலாம்.

எனக்குக் காதல் வேண்டாம்; கல்யாணம் வேண்டாம். என்னைத் தன் மனைவியென்று ஒப்புக்கொண்டு என்னோடு குடும்பம் நடத்தக்கூடிய தைரியசாலி ஒருவனைத் தேடிப் பிடிக்க வேண்டும். அவனே என் வாழ்க்கைத் துணைவன்; என் கணவன். அப்படி வருபவனுடைய நலத்தை நான் கவனிக்கவேண்டும். அவன் அழகனாகவும் குணசாலியாகவும் இருந்தால் நல்லது. இத்தனை அம்சங்கள் அமைந்திருந்தால் போதுமானது. எந்த ஜாதியைச் சேர்ந்தவனாக இருந்தாலும் சரி. எனக்குத் தெரிந்தவர்களில் இப்படிப் பட்டவன் யாராவது இருக்கிறானா?

என்னோடு பள்ளிக்கூடத்தில் படித்தானே பூக்கார வடிவேலு, அவன் ஏழைதான். ஆனாலும் நல்ல குணம். என் மனதிற்குகந்த அழகன்தான். கலியாணம் முடிந்து இரண்டு வருஷத்திற்குள் மனைவியை இழந்துவிட்டு வருந்துகிறான். தன்னுடைய குழந்தையை வளர்க்க முடியாமல் வேறு திண்டாட்டம் ஏற்பட்டிருக்கிறது அவனுக்கு. அவனுக்கு நான் மனைவியானால் அனாதரவான அவன் குழந்தையை வளர்த்த பலனும் எனக்குக் கிடைக்கும். சதா மனக் குமுறல்களையே நினைத்து ஏங்கிக் கொண்டிருக்கும் எனக்குக் குழந்தைப் பராமரிப்பு மிகவும் ஆறுதலளிக்கும்.

நான் எப்படியெல்லாமோ மனக்கோட்டை கட்டுகிறேனே! வடிவேலு இந்த ஏற்பாட்டிற்குச் சம்மதிப்பானோ

என்னவோ தெரியவில்லையே! பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது அவன் என் மீது மிகவும் பிரியமாக இருந்தான். வயது வந்தபிறகு அவன் என்னோடு அவ்வளவாகப் பேசுவதே இல்லை. இப்பொழுது அவனுடைய மனநிலை எப்படியெல்லாம் மாறியிருக்கிறதோ? தினமும் மாலையில் இந்தப் பாதையாகத் தானே வருவான். இன்று அவனோடு பேச்சுக்கொடுத்துப் பார்க்கலாம்.

"சுந்தரி! சுந்தரி!"

அம்மாவின் குரல்தான். அம்மாவிற்கு என்மீது எவ்வளவு வாஞ்சை! இவளுடைய இஷ்டத்திற்கு விரோதமாக நடக்கவே எனக்கு என்னவோபோலிருக்கிறது. நான் ஒரே மகள்தானே இவளுக்கு! நான் இவளுடைய கொள்கைக்கு எதிரிடையாகக் கிளம்பிவிட்டால் இவளுடைய மனம் என்ன பாடுபடும்! தியாக புருஷர்கள் எவ்வளவோ பேர் உற்றார் உறவினர்களை விட்டுவிட்டுத்தானே செல்கிறார்கள்! தாயின் அன்பைவிட சமூகசேவையே மேல். அதையே நான் துணிந்து செய்யத் தீர்மானித்து விட்டேன். ஆவது ஆகட்டும்.



# 3 வடிவேலு

என் வாழ்க்கையில் எவ்வளவு பெரிய மாறுதல் ஏற்படப்போகிறது! என்னால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை! தகப்பனார் வைரவப் பண்டாரம் இருந்த காலத்தில் பூந்தோட்டத்திலிருந்து ஏராளமாகச் செல்வம் குவிந்துகொண்டிருந்தது. எவ்வளவு சிறப்பாக எனக்குக் கல்யாணம் நடத்தினார்.

என்னை நன்றாகப் படிக்கவைத்துவிடவேண்டுமென்று தகப்பனார் எவ்வளவோ முயற்சி செய்தார். ஆனால் எல்லாம் கொடுத்துவைத்தால்தானே கிடைக்கும்! படிப்பில் எனக்கு மனமே செல்லவில்லை. ஏதோ ஆறாவது வகுப்போடு படிப்பையும் நிறுத்தினேன். எங்கள் தோட்டத்தை மேல்பார்வை பார்த்துக்கொண்டிருந்தேன். புஷ்ப வியாபார நுணுக்கங்களை நான் நன்றாக அறிந்துகொள்வதற்குள் தகப்பனார் இறந்துவிட்டார். இந்த நிலைமையில் வேலையாட்கள் என்னை ஏமாற்றாமலிருப்பார்களா? ஏதோ தங்கள் கையில் அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டார்கள்.

நல்ல வேளையாகத் தகப்பனார் என்னை நல்ல பிள்ளையாகவே வளர்த்துவிட்டார். அதனால் வீண் செலவுகள் செய்து நான் ஏழையாகிவிடவில்லை. பிறர் செய்த நம்பிக்கை மோசத்தினால் என் தகப்பனார் தேடிவைத்த பணத்தில் கொஞ்சம் போய்விட்டது. அதனாலென்ன? என் சாமர்த்தியத்தைக்கொண்டு நான் பொருள் தேட முடியாதா என்ன?

பூ வியாபாரம் பழையபடி நன்றாக நடக்கவேண்டுமென்பதற்காகப் பல முயற்சிகள் செய்துகொண்டு வந்தேன். அந்தச் சமயத்தில் மனைவியின் பிரசவம் வந்து சேர்ந்தது. சேச்சே! திரும்பத் திரும்ப அவள் நினைவே

தான் மனதில் வட்டமிடுகிறது. எனக்குச் சகல செல்வமும் அவளாகவே இருந்தாள். எமனுக்கு இது பொறுக்கவில்லையே! எனக்கு ஆறுதலுக்காக ஒரு ஆண் குழந்தையை மட்டும் விட்டுவிட்டுப் போய் விட்டாள். குழந்தையைப் பார்க்கும்போதெல்லாம் அவள் நினைவுதான் வருகிறது.

என் அக்காள்வீட்டில் அவளுக்குள்ள தொல்லைபோதாதென்று என் குழந்தையையும் கொண்டுவிட்டிருக்கிறேன். அக்காள் எவ்வளவுதான் அருமையாகப் பார்த்தாலும், இதற்கென்று தனியாகக் கவலை எடுத்துக்கொள்ள முடிகிறதா? அவளுக்கும் ஐந்து பிள்ளைகள். அவள் கணவனும் கொஞ்சம் கோபக்காரர். ஏதோ நடந்தவரையில் நடக்கட்டும் என்றுதான் இருக்கிறேன். நான் இந்தக் கவலைகளோடு புஷ்ப வியாபாரத்தைக் கவனித்து வருகிறேன். ஆனால் மனம் எங்கெங்கோ வட்டமிட்டுச் சுழலும்போது சரீரம் தளர்ச்சியடையத்தானே செய்கிறது. மனைவி இறந்த துக்கம், செல்வம் போயிற்றே என்ற ஏக்கம், குழந்தையைப் போஷிக்கவேண்டுமென்ற பொறுப்பு, ஜீவனத்துக்குப் பொருள் தேடவேண்டுமென்ற கவலை எல்லாமாகச் சேர்ந்து என்னை எப்படி உருக்கிவிட்டது. மற்றக் கவலைகள் தீர்ந்தாலாவது வயிற்றுக் கவலைக்காகத் தீவிர முயற்சி செய்யலாம்.

என் கவலையைப் பார்த்துவிட்டு எனக்கு வெகு சீக்கிரமே இரண்டாந்தாரமாக ஒரு பெண்ணைத் தாலிகட்டி வைத்துவிட வேண்டுமென்று என் அக்காள் முயற்சிக்கிருள். கலியாணமாம்! முதல் மனைவி இறந்த துக்கம் ஆறுவதற்குள், கலியாணம் என்ற பேச்சை எடுக்க எப்படித்தான் இந்த ஜனங்களுக்கு மனம் துணிகிறதோ தெரியவில்லை. அவள் போன பிறகு, உலகில் ஒன்றுமே நிலையில்லை என்ற வேதாந்தம் எனக்கு நன்ருகப் பதிந்துவிட்டது. ஆனல் அவளுடைய ஞாபகமாக இருந்துவரும் குழந்தையைப்

பாதுகாக்க ஒரு தாய்மை அன்பு வேண்டுமே! அதற்காகவாவது திரும்பவும் கலியாணம் செய்துகொள்ளவேண்டியதுதான் என்று எனக்குத் தோன்றுகிறது.

வரப்போகும் அம்மணி என் முதல் மனைவியைப்போல் உடலழகும் குண அழகும் பெற்றிருப்பாள் என்று என்ன நிச்சயம்? எனக்கு அதிர்ஷ்டச் சக்கரம் சுழன்று அடித்துக் கொண்டிருந்த காலத்தில், கலியாணச் சந்தையில் எதிர்பாராமல் கிடைத்த யோகப்பரிசு அவள். ஆனால் இப்பொழுதோ! நான் இருக்கும் நிலமை என்ன? என்னை மதித்துக் கல்யாணம் செய்துகொள்ளப்போகிறவள் முதல் மனைவிக்கு ஒப்பாக இருக்க முடியாதென்பது நிச்சயம். ஏதோ ஒரு பெண்ணை இரண்டாவது தாரமாகத் தாலி கட்டினேம் என்றுதான் கலியாணத்தை முடிக்கவேண்டும். என் குழந்தை முருகன் அதிர்ஷ்டமுள்ளவனானல் அவனை நன்ருகக் கவனிக்கக்கூடியவள் எனக்கு மாலையிடவேண்டும். பத்துப்பதினைந்து நாளாக எனக்கு இதுதான் கவலை.

நேற்றுமாலை நடந்த சம்பவம் உண்மையாக இருக்குமா! அல்லது என் ஆசைகளின் அபூர்வத் தோற்றங்கள்தானா? சுந்தரி எவ்வளவு செல்வாக்குடையவள்! எவ்வளவு அழகி! அவளுடைய கடைக்கண் பார்வைக்காக எத்தனை பணக்காரர்கள் ஏங்கி நிற்கிருர்கள்! அப்படியிருக்க பணமற்ற, அழகற்ற என்னை அவள் அன்பாகக் கூப்பிட்டு எவ்வளவு நேரம் பேசிக்கொண்டிருந்தாள். அவளோடு கொஞ்சகாலம் படித்தேன் என்பதைத் தவிர எனக்கும் அவளுக்கும் வேறு தொடர்பே கிடையாதே! பாடசாலையை விட்டபின் இதுவரை அவள் உலகம் வேறு; என் உலகம் வேறு என்ருகிவிட்டதே. இப்பொழுது திடீரென்று அவளுக்கு என்மீது மட்டும் இவ்வளவு அன்பு ஏற்படக் காரணம் என்ன? நினைக்க நினைக்க இது ஒரு கனவு போலல்லவா தோன்றுகிறது! பாலைவனத்தில் நீர் தேடித் தவித்த மானுக்குத் திடீரென்று பசுமையான புல்தரையும்,

நடுவே தெள்ளிய தடாகமும் அகப்பட்டதுபோல் அல்லவா, சுந்தரியின் வார்த்தைகள் எனக்கு ஆறுதல் அளிக்கின்றன. புண்பட்ட மனதுக்கு அமிர்தம் வர்ஷித்தாளே சுந்தரி! அவள் சொல்வதுபோல் நடந்துவிட்டால் என் வாழ்க்கையில் மறுமலர்ச்சி தோன்றுமென்பதில் ஐயமில்லை. ஆஹா! அவளோடு சம்பாஷித்துக்கொண்டிருந்ததே எவ்வளவு இன்பமாக இருந்தது :—

"வடிவேலு, வடிவேலு" சுந்தரியின் இன்பக்குரல். நான் மாடி ஜன்னலை ஏறிட்டுப் பார்த்து சந்தேகத்துடன், "என்னையா அம்மா கூப்பிடுகிறாய்?" என்றேன்.

"ஆமாம். இங்கே வாருங்கள்"

"ஏது புஷ்பம் வேண்டுமா?"

"புஷ்பம் இருக்கட்டும். உங்களோடு ஒரு விஷயம் பேசவேண்டியிருக்கிறது.

எனக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. தாசியின் வீடு. ஏதாவது குற்றேவல் செய்வதற்காகக் கூப்பிடுகிறாளோ? சுந்தரி என்னை அவ்வளவு கேவலமாகவா எண்ணிவிட்டாள் என்று சிறிது தயங்கினேன். எதற்கும் போய்ப்பார்ப்போம் என்று வேகமாக நடந்தேன். ஆத்திரத்தோடு வீட்டுக்குள் புகுந்தேன். அவள் மிகுந்த அன்போடு உபசரித்து நாற்காலியைக் கொண்டுவந்து போட்டு அதில் என்னை உட்காரச்சொன்னாள். என் கோபமெல்லாம் பறந்துவிட்டது. ஆனால் புதிய அலை ஒன்று தாக்கியது. தாசி தன் மோக வலைக்குள் சிக்கவைக்க முயற்சிக்கிறாளோ என்ற சந்தேகம்தான். தாசிகளுக்குப் பணத்தின்மீதுதானே மோகம். என்னிடம் பணம் ஒன்றும் கிடையாதென்பதை ஒருவேளை அவள் தெரியாமலேயே, தன் சாகசத்தைக் காட்டுகிறாளோ என்றும் நான் திகைத்தேன். இந்த சந்தேகத்தையும் அவளே போக்கிவிட்டாள்.

"வடிவேலு, உங்களுக்குத் தொடர்ந்து வந்த தொல்லைகளை யெல்லாம் நான் கேள்விப்பட்டேன். மனதுக்கேற்ற மனைவியும்,செல்வமும் போன பிறகு உங்கள் மனம் மிகவும் உடைந்துபோயிருக்கும்."

எனது துக்கத்திற்காக வருந்தி, எத்தனையோ பேர் எனக்கு ஆறுதல் சொன்னார்கள். ஆனால் சுந்தரி சொன்ன ஆறுதலைப்போல வேறு ஒன்றுமே என் மனதைக் குளிர வைக்கவில்லை. எனக்கு அழுகையே வந்துவிட்டது. அழுகையோடு அத்தனை துக்கமும் கரைந்து வெளிவந்து விட்டதுபோன்ற உணர்ச்சி உண்டாயிற்று. சட்டென்று ஏதோ நினைத்துக்கொண்டவன்போல "உன் அம்மா எங்கே,சுந்தரி ?" என்று கேட்டேன்.

"அம்மா எங்கேயோ கோடாங்கியிடம் குறி கேட்கப் போயிருக்கிறாள். அவள் இப்போதைக்கு வரப்போவதில்லை. அதிருக்கட்டும், நான் உங்களிடம் மிக முக்கியமான விஷயத்தைப்பற்றி ஆலோசிக்கவே உங்களைக் கூப்பிட்டேன்" என்றாள்.

ஆலோசனை செய்வதில் நான் என்ன அவ்வளவு கெட்டிக்காரனா என்று எனக்குச் சந்தேகமுண்டாயிற்று. அதைக் காட்டிக்கொள்ளாமல் "என்ன விஷயத்தைப்பற்றி ஆலோசனை செய்யவேண்டும் ?" என்றேன்.

"உங்கள் குழந்தை இப்பொழுது உங்கள் அக்காள் வீட்டில் வளர்ந்து வருகிறதென்பதையும், நீங்கள் அதன் நன்மைக்காகத் திரும்பவும் கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானித்திருக்கிறீர்கள் என்பதையும் நான் கேள்விப்பட்டேன்."

"உனக்கு ஜோசியம்கூடத் தெரியுமா, சுந்தரி ?"

"அருமையான மனைவியை இழந்துவிட்டீர்கள். அவள் விட்டுப்போன குழந்தையை வளர்ப்பது உங்கள் கடமை

இல்லையா? இதைச் சொல்வதற்கு ஜோசியம் வேறு தெரியவேண்டுமா?"

"நீ சொல்வது உண்மைதான். படிக்கும் போதே நீ யூகசாலியாக இருந்தாயே! இப்பொழுது கேட்பானேன்."

"பெண் பார்த்தாய்விட்டதா உங்களுக்கு?"

"அக்காள் அநேக இடங்களில் பார்த்துக்கொண்டிருக்கிருள். இதுவரை ஒன்றும் அமையவில்லையாம்."

"ஏன் அமையவில்லை?"

"எனக்குச் சொத்து சுகம் இருந்தால்தானே பெண் கொடுப்பார்கள்?"

"நீங்கள் இதற்காக வருத்தப்படவேண்டாம். சொத்து சுகத்தில்தாஞ வாழ்க்கை அடங்கியிருக்கிறது? யோக்கியதையும் உழைப்பும்தானே சிறந்த செல்வம். அது உங்களிடம் இருக்கிறதே!"

"யோக்கியதையும் உழைப்பும் உலகில் தகுந்தபடி மதிக்கப்படவில்லையே!"

"உலகம் மதித்தால் என்ன; மதிக்காவிட்டால் என்ன? ஆத்ம திருப்தி கிடைக்கிறதே! அது போதாதா?"

"ஆத்ம திருப்தியினுல் வயிறு நிறைந்துவிடுமா, சுந்தரி?"

"நான் வளைத்து வளைத்து எதையோ பேசிக்கொண்டு போகிறேனே. தாயார் வருவதற்குள் நான் தீர்மானித்த விஷயத்தைச் சொல்லி விடுகிறேன்."

"என்ன விஷயம்?"

"நேரடியாகச் சொல்லி விடுகிறேன். உடலை விற்கும் தாசியாக இருக்க நான் விரும்பவில்லை."

"அப்படியானல்?"

"நான் இந்தத்தாசி வாழ்க்கையை விட்டு வெளியேற விரும்புகிறேன்."

"நீ சொல்வது விபரீதமாக இருக்கிறதே."

"ஆமாம். விபரீதம்தான். எத்தனையோ ஆயிர வருஷ காலமாக எங்கள் சமூகத்தில் ஏற்படாத ஒரு மாறுதலைச் செய்ய நான் துணிந்திருப்பது விபரீதமாகத்தான் படும்."

"உன் தாயார் இதை அறிந்தால்!"

"அவளைப்பற்றி இனி எனக்குக் கவலையில்லை!"

"நீ என்ன செய்ய உத்தேசித்திருக்கிருய்?"

"மற்றச் சமூகத்திலுள்ள பெண்களைப்போல ஒருவனுடைய மனைவியாக வாழ விரும்புகிறேன் நான்."

"அந்த ஒருவன் உனக்குக் கிடைக்கவேண்டுமே!"

"அந்த ஒருவர் நீங்களாக இருக்க முடியாதா என்பதைக் கேட்கவே உங்களை நான் இங்கு அழைத்தேன்."

"நானு? சுந்தரி.........!"

"என்ன திகைக்கிறீர்கள்?"

"திடீரென்று ஒரு ஏழைக்கு முன்னல் லக்ஷம் பவுனும் பின்னல் ஒரு இடியும் விழக் காத்திருப்பதுபோல இருக்கிறது நீ சொல்வது! சுந்தரி, நீ என் மனைவி என்ருல் அதைவிட வேறு பாக்யமே எனக்கு உலகில் இல்லை. ஆனல்! ஆனல், சமூகம் என்னை இதற்காக எவ்வாறு தூற்றுமென்பதை எண்ணிப் பார்த்தால்—எண்ணிப்பார்க்கவே முடியவில்லை. சுந்தரி, இதற்கு முதலில் உன் தாயின் சம்மதம்; பின்பு என் அக்காளின் சம்மதம்..........."

"வேண்டாம். உங்கள் சம்மதம் ஒன்றே எனக்குப் போதுமானது. சமூகத்தின் கண்ணில் மண்ணைத் தூவ நான் வழி சொல்கிறேன்."

"சுந்தரி, உன்னை மனைவியாக ஏற்றுக்கொள்ள நான் மறுப்பேனா? ஆனால் சமூகத்தின் பழிச் சொல்லுக்குத் தப்புவது எப்படி?"

"நாம் இருவரும் நம் குழந்தையுடன் வேறு எங்காவது போய்ப் பிழைத்துக்கொள்ளலாம்."

"சுந்தரி, உன் அன்பே அன்பு. 'நம் குழந்தை' என்றாய். நீயே நமது குழந்தையை நன்றாய்க் கவனிக்க முடியும். நீ சொல்கிறபடி நான் செய்யக் காத்திருக்கிறேன்."

"நான் இங்கிருந்து கொஞ்சம் பணம் எடுத்துக் கொண்டு வருகிறேன். நாம் போகுமிடத்தில் கௌரவமாக ஏதாவது ஒரு தொழில் நடத்திக்கொண்டு குடும்பம் நடத்தலாம்."

"குடும்பம் நடத்தலாம் என்றால் முதலில் கலியாணம் செய்து கொள்ள வேண்டாமா?"

"ஏது ஏது? பத்திரிகைகூட அச்சடிக்கவேண்டுமென்று சொல்வீர்கள் போலிருக்கிறதே! அதெல்லாம் எதற்கு? கடவுள் முன்னிலையில் நாம் இருவரும் கணவன் மனைவி. இதுவே போதும். நாம் போய்க் குடியேறும் இடத்தில் நீங்கள் எல்லோருமறிய என்னை மனைவியென்று சொல்லவேண்டும் அவ்வளவுதான்."

"உன் இஷ்டப்படியே செய்வோம்"

"நமது சந்ததியிலிருந்தாவது சம்பிரதாயப்படி பலரறிய மணம் செய்துகொள்ளும் வழக்கம் ஏற்படுமல்லவா?"

"சுந்தரி, நீ இந்த நிமிஷம்முதல் என் மனைவி! கடவுள் சாட்சியாக நீ என் மனைவி! உன் ஆவலை நான் தெரிந்து

கொண்டேன். எனக்கும் சரியான துணை கிடைத்துவிட்டது. நாம் எப்பொழுது இங்கிருந்து புறப்படுவது? எங்கே போவது?"

"இனி அந்தப் பொறுப்பு என்னுடையதல்ல! என் கணவராகிய உங்கள் பொறுப்பு. உங்கள் சொற்படி நடக்கக் கடமைப்பட்டவள் நான்."

"கணவனுக்கு மந்திரிபோல நீ ஆலோசனை சொல்ல வேண்டுமல்லவா? அந்த முறைபற்றிக் கேட்கிறேன் உன்னை! தெற்கில் நான் சிறுவயதில் சுற்றிப் பார்த்திருக்கிறேன். நாகர்கோவில் நல்ல இடம். அங்கே போய் வசிக்கலாமென்று எண்ணுகிறேன். நாம் அங்கே போய்விட்டால் நம்மை ஒருவரும் கண்டுபிடிக்க முடியாது. அங்கு போவோமா?"

"நாகர் கோவிலுக்கே போவோம். எப்போது இங்கிருந்து புறப்படுவது?"

"அதைத்தான் யோசிக்கிறேன்."

"இனி யோசிப்பதற்கே நேரமில்லை. அந்தத் தீர்மானமும் இப்போதே முடிவு கட்டப்பட வேண்டும். நீங்கள் ஒன்றுக்குமே யோசிக்க வேண்டியதில்லை. அக்காளிடம் ஏதாவது சாக்குச்சொல்லி நமது குழந்தையை எடுத்துக்கொண்டு நாளை இரவு ஒன்பது மணிக்கு என் வீட்டுக்குப் பின்புறமாக வாருங்கள். நான் பணம் நகைகளோடு அங்கு தயாராகக் காத்திருப்பேன். தவறுமல் வரவேண்டும். தாயார் வரும் நேரமாகி விட்டதே! நீங்கள் இங்கிருந்து போய்விடுங்கள். உங்கள் மனம் மாறி விடக் கூடாது. நம் குழந்தையுடன் நாளை இரவு நிச்சயமாக நாம் இங்கிருந்து ரயிலேறிவிட வேண்டும்."

"சரி, நான் நிச்சயமாக வருகிறேன்" என்று சுந்தரியிடம் விடை பெற்றுக்கொண்டு வெளியே வந்தேன்.

எனக்கு உலகமே தலைகீழாகப் புரள்வது போலத் தோன்றியது. ரதி போன்ற சுந்தரி எப்படி என் மனைவிஆகச் சம்மதித்தாள்! திடீரென்று அதிர்ஷ்டம் வந்தால் மனதில் அதிர்ச்சிதான் ஏற்படுகிறது. எவ்வளவு பெரிய மாறுதல் எனக்கெதிரே இருக்கிறது. நானும் சுந்தரியும் உற்றார் உறவினர் யாவரையும் மறந்துவிட்டு ஒரேயடியாகப் போய் விட வேண்டும். போகிற இடத்தில் என்னென்ன நடக்குமோ! மனிதன் மாறுதல்களை விரும்புகிறான். ஆனால் மாறுதல்களைக் கண்டு மலைக்கவும் செய்கிறான். சுந்தரியே அவ்வளவு தைரியமாக என்னுடன் வரச் சம்மதிக்கையில் நான் மலைப்பதா? நாளை இரவு ஒருவருக்குத் தெரியாமல் இந்த ஊரை விட்டுப்பிரிய வேண்டியதுதான். எதிர்காலம் இன்பகரமான ஒரு வாழ்க்கையுடன் காத்திருக்கிறது. அதில் நான், சுந்தரி, முருகன் மூவரும் திளைத்திருப்போம்.



## 4 சுந்தரி

எந்தக்காலத்திலும் துணிவு இருந்தால் அதிர்ஷ்டம் தானுகவே வந்துவிடுகிறது. வடிவேலுவின் மனம் எப்படி எப்படி இருக்கிறதோ, அவனிடம் இந்த விஷயத்தை எப்படித் தெரிவிப்பதென்றெல்லாம் எவ்வளவு நாளாகக் கவலைப்பட்டுக்கொண்டிருந்தேன். ஆனுல் அவனிடம் துணிந்து கேட்டவுடன் அவன் சரியென்று சம்மதித்துவிட்டானே. இனி நான் வடிவேலுவை அவன் இவன் என்று பேசக் கூடாது. அவர் என் கணவர். அவருடைய கவலைகள் என் கவலைகள். அவருடைய இன்பமே என் இன்பம். நல்ல கட்டழகு வாய்ந்தவர். மிகவும் புத்திசாலி. இளகிய மனசு. நல்ல குணம். நல்ல சுபாவத்தினுல்தானே தன் உடமைகளை யெல்லாம் அவர் இழந்தார். விதியும் இதுவரை அவரைக் கொடுமைக் கரங்களால்தான் அணைத்தது. இனிமேல் நான் அவருக்குத் துணை. அவருக்குக் கஷ்டம் வந்தால் அதைப் பகிர்ந்துகொள்ளவும், இன்பத்தைப் பெருக்கவும் நான் உதவுவேன்.

இரும்புப் பெட்டியிலிருந்து தாயாருக்குத் தெரியாமல் இரண்டாயிரம் ரூபாய் எடுத்து வைத்திருக்கிறேன். இதைக்கொண்டு ஒரு வியாபாரம் ஆரம்பித்தால் வாழ்க்கைக்கு அவசியமான அளவு வரும்படி கிடைக்காதா? அவர்தான் நல்ல உழைப்பாளியாயிற்றே. இந்தப் பணத்தை ஒன்று பத்து நூருகப் பெருக்கிப் பெரிய தனவந்தர்களாகக்கூட ஆகிவிடலாம். மனக்கோட்டை பெரிதாகத்தான் இருக்கிறது. மனக்கோட்டை நிஜ உருவம் பெறுவதற்கு அதிர்ஷ்டம் வேண்டும். கடவுள் அருள் செய்வார்.

நாளை இரவு 10 மணி வண்டிக்குப் புறப்பட்டால் நாளைநின்று மாலையில் நாகர்கோவிலுக்குப் போய்விட

லாம். அங்கே வீடு அமர்த்திக் குடும்பம் ஆரம்பிக்க ஒரு வாரமாவது பிடிக்கும். அப்புறம் இன்ப வாழ்க்கைதான்! வடிவேலு வியாபாரம் பண்ணப் போய்விடுவார். நான் என் குழந்தை — இனி அது என் குழந்தைதானே—முருக னுடன் கொஞ்சிக் குலாவிக்கொண்டிருப்பேன்.

புது உறவு. புது வாழ்க்கை. துன்பத்திலிருந்து என் இலட்சிய இன்பத்திற்கு ஒரே பாய்ச்சல்! புது வாழ்க்கை யில் நான் எவ்வளவு கஷ்டப்பட்டாலும் சரி. நான் தாசி வாழ்க்கை வாழாமல் ஒருவனுடைய மனேவியென்று வாழ் வதே போதுமானது. வடிவேலுவுக்கும் எனது லட்சியம் நன்ருகப் புரிந்துவிட்டது. நான் அவருக்குக் கிடைத்தது இந்தச் சமயத்தில் பெரும் பாக்கியமென்றே கருதுகிருர். என் தாயார் இந்த ஏற்பாட்டிற்குச் சம்மதித்தால் எவ்வ ளவு நன்ருக இருக்கும்! அவள் மனது பரம்பரைக் குணத் தில் தோய்ந்து உறைந்துபோய்விட்டது. அதை என் பக்கம் திருப்புவது என்பது முடியவே முடியாது. அவளே ஏமாற்றிவிட்டுப் போவதைத் தவிர வேறு வழியில்லே.

தாயாரை ஏமாற்றுவதென்ருல் மனது என்னவோ பண்ணுகிறது. தாய்க்கு என்மீது எவ்வளவு வாத்ஸல்யம்! நான் சுகமாக வாழவேண்டுமென்றுதான் அவளும் கவலேப் படுகிருள். ஆனல் அவள் வழி வேறு. அகழியிலேயே கிடக்கும் முதலேக்கு அதுதானே சொர்க்கம்! அதுபோல் அவளுக்குத் தாசி வாழ்க்கையே நல்லதென்று படுகிறது. இதை நான் குற்றமென்று சொல்ல முடியுமா? பல சமூ கங்களில் நடந்துவரும் பலவிதப் புரட்சிகளேக் கண்டு கண்டு என் மனம் புதுவழியில் செல்ல முனேந்து நிற்கிறது. புரட் சியின் ஆரம்பம் விபரீதமாகத்தானே இருக்கும். ரயில் வண் டித் தொடர்கூட ஒரு தண்டவாளத்திலிருந்து வேருெரு பாதைக்குப் பிரியும்போது 'தடதடா' என்று முழங்கு கிறதே! அதுபோல் மாறுதலின் ஆரம்பத்தில் மனம் 'கடபுடா' என்று புரளத்தான் செய்யும். போகப் போக எல்லாம் சரியாகிவிடும்.

நான் இங்கிருந்து போய்விட்டால் அவள் என்னை ஓயாது நினைத்து வருந்துவாள். அவளுக்கு ஆறுதல் சொல்லக்கூட யாருமில்லையே. சிறு வயது முதல் என்னைச் செல்லமாக வளர்த்தாள். மிக அரிய கலைகளான நாட்டியமும் சங்கீதமும் கற்றுக்கொடுத்தாள். ஆடையாபரணங்களையெல்லாம் எனக்குப் பூட்டி அலங்கரித்தாள். அவளுக்கு நான் செய்யும் பிரதியுபகாரம் என்ன? பிரதியுபகாரம் கருதியா தாய் குழந்தையை வளர்க்கிருள்? தாயின் கடமையை அவள் செய்தாள். நான் சமூகத்தின் உயர்வுக்கான என் கடமையைச் செய்யப் போகிறேன். ஒரு லட்சியத்தை நாடிப் போகும்போது தாயின் பாசத்தையெல்லாம் மறக்கவேண்டியதுதான். தாயின் பாசத்தைவிட என் லட்சியத்தின் பாசமே மேலானதாகத் தோன்றுகிறது. என் தாய்க்குக் கலையின் மீது மோகம் அதிகம். தன் நாட்டியத்திறமையும், தன் சங்கீதவழியும் சந்ததியோடு தழைக்கவேண்டும் என்ற ஆவல் உடையவள். அதற்காகவே எனக்கு நன்ருகப்பயிற்சி கொடுத்து அதில் வெற்றி கண்டு ஆனந்தமடைந்தாள். நான் இவ்வாறு ஓடிப்போவதனுல் அவள் தாயுள்ளம் பரிதவிப்பதோடு பன்னெடுங்காலமாக வேரூன்றியுள்ள அவள் கலையுள்ளம் தன் செல்வத்தையே பறி கொடுத்துவிட்டதுபோலத் துடிதுடிக்கும். ஐயோ பாவம்!

என்னைத் தேடுவதற்காக எவ்வளவோ முயற்சி செய்வாள். காணுவிட்டால் ஒருவேளை அவளுக்குப் பைத்தியமே பிடித்துவிடுமோ! நானும் வடிவேலுவும் குழந்தையோடு போய்விட்டால், அதிலிருந்தே அவள் என் நோக்நோக்கத்தை அறிந்துகொள்ளமாட்டாளா? ஏது? ஊஹூம். அவளுக்கு என் லட்சியம் புரியாது. பொல்லாத வடிவேலுவுடன் கள்ளத்தனமாக ஓடிப்போய்விட்டாள் என்றுதான் நினைத்துக்கொள்வாள். தன் கலை தன் பரம்பரையோடு அழிந்துவிடுகிறதே என்றும் வருந்துவாள். ஆனுல் என்ன செய்வது?

வடிவேலுவின் அக்காள் நாளை, என்னைப்பற்றியும் தன் தம்பியைப்பற்றியும் என்ன நினைப்பாள்! மிகவும் யோக்கியமாக இருந்த தன் தம்பி என்னால் கெட்டுப்போய் என்னோடு ஊரைவிட்டே ஓடிப்போய்விட்டான் என்று தான் நினைப்பாள். வடிவேலுவின் அக்காள் மட்டும் என்ன? இந்த ஊர் முழுவதுமே எங்கள் இருவரையும் தூற்றத்தானே செய்யும்! தூற்றினால் என்ன? வரப் போகும் என் சந்ததிகள் மற்றச் சமூகத்தினரைப்போல குடும்ப வாழ்வு வாழ்வார்கள் என்ற நம்பிக்கை எனக் கிருக்கிறது. அந்த வெற்றியின்முன் இந்தத் தூற்றல் எம் மாத்திரம்!

நாளை இரவு எப்பொழுது வருமோ? நாம் அவசரப் படும்போதுதான் நேரமும் ரொம்ப மெல்ல நடக்கிறது. வடிவேலு இப்பொழுது என்ன எண்ணிக்கொண்டிருக் கிறாரோ தெரியவில்லை. கடவுள்தான் என் லட்சியம் நிறை வேறுவதற்குத் துணைசெய்யவேண்டும்.



## 5 வடிவேலு

நாகர்கோவிலுக்கு வந்து சேரும்வரை என் மனம் எப்படி 'திக் திக்' கென்று அடித்துக்கொண்டது. ரயிலில்வைத்து எங்களை யாராவது தெரிந்தவர்கள் பார்த்துவிட்டால் என்ன செய்வதென்று கவலைப்பட்டுக்கொண்டேயிருந்தேன். அதிர்ஷ்டவசமாக நாங்கள் அப்படி ஒருவர் கண்ணிலும் படவில்லை. எங்கள் ஊர் ரயில்வேப் போர்ட்டர் என்னைமட்டிலும் பார்த்தான். வடக்கே மாயவரம்வரை போவதாக அவனிடம் சொல்லி ஏமாற்றிவிட்டேன்.

ரயில் பிரயாணத்தின்போது சுந்தரி எவ்வளவு அன்போடு நடந்துகொண்டாள். என் முதல் மனைவியின் அன்பைவிட இவள் காட்டும் அன்பு அதிகமென்றே சொல்லவேண்டும். குழந்தை முருகனைத் தன் சொந்தக் குழந்தையாகவே பாவிக்கிறாள்! அந்தப் பயலுக்கும் இதற்குள் சுந்தரியின்மீது எவ்வளவு பிரியம் உண்டாய்விட்டது. அவளைவிட்டுப் பிரியமாட்டேனென்கிறானே! நான் எதிர்பார்த்ததைவிட மேலான பாதுகாப்பு அவனுக்குக் கிடைத்துவிட்டது! அவனுக்கு மட்டுமென்ன? என் வாழ்வில் மறுமலர்ச்சி ஏற்படுத்துகிறவள் சுந்தரிதான். தான் கொண்டுவந்திருந்த இரண்டாயிரம் ரூபாயையும் என் கையிலேயே கொடுத்துவிட்டாளே; இங்கு வந்தும் ஒருவாரமாயிற்று. புஷ்பத் தோட்டங்களை அமர்த்திவிட்டேன். வியாபாரம் தொடங்கவேண்டியதுதான்.

வியாபார உலகில் போட்டாப்போட்டிதான் அதிகமாயிருக்கிறது. பணத்தை ஏராளமாக அள்ளிக் கொட்டினால்தான் சரியானபடி வியாபாரம் நடத்த முடியும். குறைந்தது ரூபாய் ஆயிரமாவது இப்போது முதல் போடவேண்டும்.

தோட்டக்காரனுக்கு 200 ரூபாயாவது முன் பணம் கொடுத்தால்தான் என் கடைக்குத் தினமும் பூ அனுப்ப முடியும் என்கிறுன். அவர்களை நம்பிப் பணத்தை எப் படிக் கொடுப்பது? நம்பித்தான் ஆகவேண்டியிருக் கிறது. இல்லாவிட்டால் என் கடைக்குப் பூ எப்படி வரும்? முன்பணமாக நானூறு போயிற்று. ஒப்பந்தப்படி பூ அனுப்பவில்லையானுல் தோட்டக்காரர்களுடன் சண் டையிட்டுக்கொண்டிருக்கவேண்டியதுதான்.

இங்கு பூக்கடைகளும் ஏராளமாகத்தான் இருக்கின் றன! இந்தக் கூட்டத்தோடு நானும் போட்டியிட்டால் என்ன ஆகுமோ! வியாபாரத்தில் லாபமும் வரலாம் நஷ்டமும் வரலாம். அதை எண்ணிக்கொண்டிருந்தால் தொழில் நடத்துவது எப்படி? தைரியமாக இறங்க வேண்டியதுதான். இவ்வாறு துணிந்து தோட்டங்களுக்கு முண்பணம் கொடுத்துவிட்டு ஒரு கடையை உயர்ந்த வாடகையில் அமர்த்தினேன்.

நான் பூக்கடை முதலாளி ஆனதுபற்றி சுந்தரிக்கு ரொம்ப சந்தோஷம். தினமும் அவளுடைய அழகிய கூந்தலை அலங்கரிக்கப் புஷ்பம் கொண்டுபோய்க் கொடுப் பேன். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அழகுடன் பிரகா சிப்பாள். அண்டை அயலில் உள்ளவர்கள் சுந்தரியைப் போற்றிப் புகழ்வார்கள். "புருஷன் மனைவியென்ருல் இப் படியல்லவா ஒற்றுமையாக வாழவேண்டும்." என்றுகூட அநேகர் சுந்தரியின்காதில் விழும்படி சொல்லிக்கொண் டார்களாம்.

அன்று, என் முதல் மனைவியையும் ஆஸ்தியையும் இழந்துவிட்டு இருந்த நிலமை என்ன! இன்று, சுந்தரி யின் கணவனுக சகல சம்பத்துடன் முதலாளி ஸ்தானத் தில் அமர்ந்திருக்கும் நிலமை என்ன! ஏதோ ஒரு பூகம்ப அதிர்ச்சியினுல் மடு இருந்த இடத்தில் மலை தோன்றியது

போல அல்லவா இருக்கிறது என் வாழ்க்கையில் நடந்த மாறுதல்.

நல்ல வளமுள்ள சீமைக்குத்தான் வந்திருக்கிறேன். முருகன் "அப்பா, அம்மா" என்றுகூடப் பேச ஆரம்பித்து விட்டான். சுந்தரி இதற்குள்ளாகவே அவனுக்குச் சங்கீதம் கற்றுக்கொடுக்க முயற்சிக்கிருள். என் வாழ்க்கை இன்பப் பொழிலாகவே இருக்கிறது. சுந்தரி என் சௌகர்யத்துக்காக எவ்வளவு கவலைப்படுகிருள். சில வேளைகளில் எனக்குக் கோபம்கூட வந்துவிடுகிறது அவள்மேல்! "வேர்க்கடலைப் பண்டம் சாப்பிடக்கூடாது, தண்ணீரில் குளிக்கக்கூடாது" என்று டாக்டர் மாதிரிச் சொல்லிக் கொண்டிருந்தால் நான் என்ன செய்வது?

* * *

வியாபாரத்தில் அதிக லாபம் ஒன்றும் வரவில்லை. புஷ்பங்கள் ஏராளமாக வந்து குவிந்துகொண்டிருந்தன. பாதி தான் விலைபோகிறது. பாதி அப்படியே வீணய்விடுகிறது. நான் கடை ஆரம்பித்த சமயம் புஷ்பத்தின் விலை மலிவாகவே இருந்தது.

புஷ்ப வியாபாரம் இன்னும் ஆறு மாத காலம் வரை இப்படித்தானிருக்குமென்று அனுபவப்பட்டவர்கள் சொன்னர்கள். நானும் ஆறுமாதம் பொறுத்துப் பார்த்தேன். வியாபாரம் அதிகரித்தது. ஆனல் தோட்டங்களிலிருந்து ஒப்பந்தப்படி பூக்கள்வந்து சேரவில்லை. இம்மாதிரி இடைஞ்சல்கள் தொடர்ந்துகொண்டேயிருந்தன. நானும் எவ்வளவோ பிரயாசைப்பட்டுப் பார்த்தேன். புஷ்ப வியாபாரம் செய்வதைவிட பூந்தோட்டம் வைத்துப் பயிர் செய்வது லாபகரமாகத் தோன்றியது. தோட்டப்பயிரில் எனக்குச் சிறிது அனுபவமும் உண்டு. ஆரம்பத்திலேயே ஒன்றிரண்டு தோட்டங்களை வாங்கிப் பயிர் செய்திருந்தால் இதற்குள்ளாக எவ்வளவோ பணம் சேர்த்திருக்கலாம்.

நடந்துபோனதைப்பற்றி யோசித்து என்ன பயன்? இனி நடக்கப்போவதையல்லவா யோசனைசெய்யவேண்டும்.

பூந்தோட்டம் வைப்பதுதான் எனக்குப் பிடித்திருக்கிறது. ஆனால் கடையை யார் வாங்குகிறார்கள்! இதன் மூலம் கொஞ்சம் நஷ்டம் ஏற்படுகிறது. தோட்டம் அகப்படுவதும் கஷ்டம்தான். இந்தக் கஷ்டங்களையெல்லாம் சுந்தரியிடம் சொல்லி அவளையும் வருத்தப்படும்படி செய்யக்கூடாது. கடையைவிடத் தோட்டத்தில் அதிக லாபம் வருமென்றுதான் சொல்லவேண்டும். வாழ்க்கைக்கு ஒரு பிடிமானம் இல்லாமல் பணம் மட்டும் கரைந்துகொண்டு போவதைப் பார்த்தால் ஒரு விதத்தில் எனக்குக் கவலையாகத்தானிருக்கிறது.

இதுவரையில் எங்கள் இருப்பிடத்தைச் சுந்தரியின் தாயாரோ என் அக்காளோ கண்டுபிடிக்கவில்லை. கண்டுபிடிக்க முடியவா போகிறது! அதைப்பற்றி நான் கவலைப்படப் போவதில்லை. என் குடும்பத்தைப்பற்றிய கவலை சுந்தரியின் துணையினால் அடியோடு நீங்கிவிட்டது. அதைப், பாதுகாக்கும் வழியைத்தான் நான் நன்றாக ஆராயவேண்டும்.

தோட்டப்பயிர் செய்யப்போகிறேன் என்றால் சுந்தரி வருத்தப்படுவாள். நான் கஷ்டப்பட்டு உழைப்பேன் என்றால் அவளுக்கு மனம் கேட்காது. ஆகையால் தோட்டம் வாங்கி ஆட்களை வேலைக்கமர்த்திப் பயிர் செய்யப்போகிறேனென்று அவளிடம் ஒரு பொய் சொல்லவேண்டும்.

நாளைக்கே இதற்கான முயற்சிகளைச் செய்யவேண்டும். எதிர்காலம் விதியின் கையில் அல்லவா சிக்கியிருக்கிறது.



## 6 சாரதாம்பாள்

இப்படியும் ஒரு பெண் உண்டா? எத்தனை அருமையாக வளர்த்தேன். எவ்வளவு கஷ்டப்பட்டு அவளுக்கு நாட்டியமும், சங்கீதமும் கற்றுக் கொடுத்தேன். ஐயோ! என் முயற்சியெல்லாம் விழலுக் கிறைத்த நீராகி விட்டதே! என் பெற்ற மனம் எப்படித் துடிக்கிறது.

சுந்தரி, உன் மனதிலுள்ளதை நான் அறிய முடியாமல் போய் விட்டதே. கேவலம் ஒரு காசு பெறாத அந்த வடிவேலுவுடனா நீ ஓடிப்போக வேண்டும்! ஆஹா! நான் எவ்வளவு மதிப்புடன் வாழ்ந்து வந்தேன். எனக்கா இந்த அபகீர்த்தி வரவேண்டும். "சாரதாம்பாளின் மகள் சுந்தரி அற்பன் வடிவேலுவுடன் ஓடிப்போய் விட்டாள்" என்று ஊரார் பேசிக்கொள்வதை என் காதுகள் கேட்கும்படி காலம் வந்துவிட்டதே! என் விதிதான்.

தனிமை! தனிமையிலேயே நான் ஏங்கி ஏங்கிச் சாக வேண்டியதுதானா? எத்தனையோ பேர் வந்து இதைப் பற்றித் துக்கம் விசாரித்து விட்டுப் போய்விட்டார்கள். இதனாலெல்லாம் ஆறிவிடுமா என் மனப்புண்?

"சுந்தரியை நான் தேடிக்கொண்டு வருகிறேன்" என்று அநேகம்பேர் பணத்தை வாங்கிக்கொண்டு போனார்கள். அவர்களெல்லாம் திரும்ப வந்து கையை விரித்து விட்டார்கள். சுந்தரியை இனி நான் காணமுடியுமென்று எனக்கு நம்பிக்கையே இல்லை.

வடிவேலுவை அடையவேண்டுமென்ற கவலைதானா அத்தனை நாளாக அவளை வாட்டிவந்தது? இந்த விஷயம் தெரிந்திருந்தால் வடிவேலுவை என் வீட்டிலேயே அவளுக்குப் பணியாளாக அமர்த்தியிருப்பேனே! ஜமீன்தார்

மக்களெல்லாம் சுந்தரியின் கடைக்கண் பார்வைக்காகத் தவம் செய்துகொண்டிருக்கையில் இந்த வடிவேலுவைப் பணிய வைப்பதுதானு பெரிய காரியம்! ஐயோ பைத்தியக்காரப் பெண்ணே! உன்மனம் போனபடியெல்லாம் இங்கு சுதந்திரமாக வாழ்வதைவிட்டு ஒரு கேடுகெட்டவன் பின் ஓடினுயே! உன் காலாலிட்ட வேலையை இரண்டு கைகளாலும் செய்வதற்கு எத்தனை பேர் காத்திருக்கிருர்கள். நீ எங்கு சென்று அவனேடு கஷ்டப்படுகிருயோ! தவளை பாம்பின் வாயைச் சரணடைந்தது போலல்லவா இருக்கிறது உன் செய்கை. நீ எவ்வளவு புத்திசாலியாக இருந்தாய்! உன் புத்தி இப்படி விபரீதமாக ஏன் திரும்பியது? வடிவேலு இங்கு எப்படி வந்தான்? என் சுந்தரியின் மனதை எப்படிக் கலைத்தான்? இதையெல்லாம் என்னுல் யூகிக்க முடியவில்லையே! நெடுநாளைய ஆலோசனையின் பேரில் புறப்பட்டார்களோ? அல்லது அவன் திடீரென்று என் மகளின் மனதைத் திருப்பி விட்டானு? வடிவேலு பலமான திட்டம் போட்டுக்கொண்டுதான் தன் குழந்தையையும் எடுத்துக் கொண்டு போயிருக்கிருன்.

பெண்டாட்டியை இழந்தவன். பணமும் போய்விட்டது. யோக்கியன் போலத்தான் நடித்துக் கொண்டிருந்தான். சுந்தரியைப் பிடித்தால் பணக்காரனுகிவிடலாமென்று அவனுக்குத் தோன்றியிருக்கும். என் வீட்டிலேயே வந்து தங்கிவிட எண்ணியிருப்பான். சுந்தரியிடமும் கேட்டிருப்பான். நான் இதற்குச் சம்மதிக்க மாட்டேனென்று சுந்தரி சொல்லியிருப்பாள். அதன்மேல் இந்த மாதிரிப் பணத்தோடு ஓடிப்போகும் நாசகார யோசனையை அவன் வெளியிட்டிருப்பான். இந்தப் புத்தி கெட்ட பெண் அவன் பேச்சில் மயங்கிப்போய் ஓடியிருக்கிருள்.

அவன்தான் சொன்னுன்; இந்த சுந்தரிக்குத் தன் தாயைப்பற்றிக் கொஞ்சம்கூட எண்ணமில்லையா? நான்

உன்னை நம்பி உயிர் வாழ்ந்தேனடி! இனி உன்னை மறந்து நான் எப்படி உயிர்வாழ்வது? சாப்பாடு என்று சரியாகச் சாப்பிட்டு எவ்வளவு காலமாயிற்று. இன்னும் நான் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேனே! எதற்கு? உன்னையே நினைத்து நினைத்து ஏங்குவதற்குத்தானா? நான் எப்படியெல்லாம் மனக்கோட்டைகள் கட்டினேன். அத்தனையும் தகர்ந்து பாழாய் விட்டதே!

குஞ்சரத்தின் வீடு மூன்று மாடி உள்ளதுதானே! உன் காலத்தில் அவளுக்கு மேலாக நான் கடுக்கு மாடி வீடு கட்டி அதில் நீ ஒய்யாரமாக வாழ்வதை நான் கண்ணாரக் காண நினைத்திருந்தேனே! அதற்கா இப்படிச் செய்தாய்? உனது நடனத்தைப்பற்றி நாடு முழுவதும் புகழவேண்டுமென்று நான் கனவு கண்டு கொண்டிருந்தேனே! அதற்கா என்னை இப்படித் தவிக்கவிட்டிருக்கிறாய்? ஒரு வேளை கடவுளுக்கே என் பேராசைகளைக்கண்டு கோபம் ஏற்பட்டு விட்டதோ! நான் பேராசை ஒன்றும் படவில்லையே! ரூப சௌந்தர்யத்தையும், கலைத் திறமையையும் கடவுள் என் மகளுக்குப் பரிபூரணமாகக் கொடுத்திருந்தார். இதன் காரணமாக நான் எவ்வளவோ ஆசைப்படலாமே!

பொறாமைக்காரிகள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்! "உனக்கென்னம்மா! சுந்தரியை வைத்துக்கொண்டு லக்ஷ லக்ஷமாய் சம்பாதித்து விடுவாய்" என்றாளே குஞ்சரம். நான் அன்று அதைக் கேட்டுப் பெருமையல்லவா அடைந்தேன். எத்தகைய பொறாமையோடு அவள் இந்த வார்த்தைகளைச் சொல்லியிருக்க வேண்டும். சுந்தரிக்குத் திருஷ்டி தோஷம் வந்துவிடக்கூடாது என்று தாயத்துக்களெல்லாம் மந்திரித்துக் கட்டியிருந்தேனே! அன்று சபையில் எத்தனையோ பாவிகள் நினைத்திருப்பார்கள் "சாரதாம்பாளைப்போல யோகக்காரி கிடையாது; சுந்தரியின் மூலம் அவள் எவ்வளவோ மேன்மையடைவாள்" என்று. அந்தப் பாவிகளின் எண்ணத்தினால்தானோ என்னவோ

நான் சுந்தரியையே இழந்து தவிக்கிறேன். குஞ்சரத்திற் கெல்லாம் இப்பொழுது மனம் ரொம்ப நிம்மதியாக இருக் கும். சுந்தரியைப் பதினைந்து வயதுவரை அருமையாக வளர்த்தும் அதன் பலனை அடைய முடியாது போயிற்று. முன் ஜென்மத்தில் நான் இம்மாதிரி யாரையாவது தவிக்க விட்டிருப்பேன்.

காரணத்தைக் கண்டுபிடித்து விட்டால் கவலை ஒய்ந்து போகிறதா? உடம்புதான் தேய்ந்துகொண்டே வருகிறது. கிழக்கட்டை இனி எப்படி இருந்தால் என்ன? எப் பொழுதாவது சுந்தரி மனமிரங்கி என்னைக்காண வரமாட் டாளா? வருவாளென்ற நம்பிக்கையில்லை. இருந்தாலும் ஆசைக்கயிற்றில் மனம் ஊசலாடுகிறது. எத்தனைதான் கஷ்டங்கள் வந்தாலும் இந்த ஊருக்குப் பழையபடி திரும்புவாளா அவள்? ரொம்ப மானமுடைய பெண் ணுச்சே! பாவி வடிவேலு அவளை என்ன பாடு படுத்து கிருனே! பணத்தைப் பறித்துக்கொண்டு அவளை எங்கா வது பரதவிக்க விட்டு விட்டானே என்னவோ!

முந்தாநாள் ஒரு பிச்சைக்காரி தன் கதையைச் சொல்லிக்கொண்டிருந்தாள். யாரோ ஒரு காதலனுடன் வீட்டிலிருந்து ஓடிவந்துவிட்டாளாம். நடுவழியில் அவளை ஏமாற்றிவிட்டு அவன் எங்கோ ஓடிப்போய் விட்டானும். அதிலிருந்து அவள் நிர்க்கதியாக எங்கெங்கோ வேலை செய்து பிழைத்தாளாம். கடைசியாக உடம்பில் வலுவில் லாமல் பிச்சையெடுக்க வந்துவிட்டாளாம். தன் சொந்த ஊருக்குப்போக மனம் வரவில்லையாம் அவளுக்கு. இந்த மாதிரியான வரலாறுகளை நான் எத்தனையோ பிச்சைக்கா ரர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆனல் முந்தா நாள் அந்தப் பிச்சைக்காரி சொல்லிய சம்பவங்கள் என் மனதில் என்னென்னவெல்லாமோ கற்பனைகளைக் கிளறிவிட்டது.

எங்கோ ஒரு ஊரில் வடிவேலு என் மகள் சுந்தரியை விட்டுவிட்டு ஓடிவிடுகிருன். சுந்தரி அவனைக் காணுது

தேடியலேகிருள். பழையபடி ஊருக்குவர வெட்கப்பட்டு அங்கேயே ஒரு சோற்றுக்கடையில் வேலே பார்க்கிருள். பலர் அவளே ஏமாற்றிக் கெடுக்க முயற்சிக்கிறார்கள். அதைக்கண்டு சுந்தரி அங்கிருந்து ஓடுகிருள். வயிற்றுப் பசியினுல் அழகையும் இழந்து வருந்திப் பிச்சை எடுக்கிருள். எங்கோ ஒரு வீட்டில் தன் கதையைச் சொல்லிப் பிரலாபிக்கிருள். அந்த வீட்டம்மாள் கொஞ்சம் சோறு போடுகிருள்......! இப்படியெல்லாம் என் கற்பனைச்சுழல் போய்க்கொண்டே இருந்தது. நல்லவிதமான கற்பனைகளின்படி காரியம் நடப்பது அபூர்வம். கெட்டவிதமாகக் கற்பனை செய்தால் அது பலித்தேவிடுகிறது. நான் சுந்தரியின் தற்போதைய வாழ்க்கையைப்பற்றிக் கற்பனை செய்தது உண்மையாகவே நடந்திருந்தால்! ஏன்தான் நான் இப்படியெல்லாம் கற்பனை செய்து வருந்தவேண்டும்! சுந்தரியின் விதி அப்படியிருந்தால் அதை நான் தடுத்து நிறுத்த முடியுமா? பெற்ற மகள் என்ற பாசம் என்னை எவ்வளவு வாட்டிவிட்டது!

பாசம் ஒருபுறமிருக்கட்டும் பரம்பரையாக வளர்த்து வந்த கலே என்னேடு முடிந்துவிடுமே! சுந்தரி கற்றுக் கொண்ட கலே இனி அபிவிருத்தியடையவா போகிறது? அவள் வழியே வேருகப் போய்விட்டதே! என் கலேத்திறமையைப் பின்வரும் சந்ததிகள் அடையமுடியாமல் செய்துவிட்டாள் மகள் என்னும் பாவி! என் கலேயின் பரம்பரைத்தொடர் அறுந்துவிட்டது. வேறு புத்திரிகள் இருந்தாலாவது கலேயைப்பற்றி ஒருவித ஆறுதல் எனக்கிருக்கும். ஒரே மகளுக்கு என் திறமை அத்தனேயையும் காட்டிப் போதித்தேன். சுந்தரி இப்படி வியர்த்தமாக்குவாள் என்று தெரிந்திருந்தால் நான் அவ்வளவு சிரத்தையுடன் அவளுக்கு நாட்டியம் கற்பித்திருப்பேனு? எத்தனேயோ நாட்டியக்காரிகள் முயன்று முயன்று தோல்வியைக் கண்டிருக்கிருர்கள். ஆனுல் சுந்தரிக்கு நாட்டியமும் சங்கீதமும் எவ்வளவு எளிதாக வந்துவிட்டது. அவளும் அசட்

டையில்லாமல் கலையைப் போற்றிவந்தாளே! சுந்தரி, கலைப்பணி செய்வதற்காகவாவது நீ இங்கிருக்கக்கூடாதா? கலையோடு கலந்த வாழ்வு உனக்கு அதிர்ஷ்ட வசத்தால் கிடைத்தது. நீ அதை உதறித் தள்ளிவிட்டு அற்ப வாழ்வு வாழப் போய்விட்டாய்! கலை போயிற்று. நம் கௌரவம் போயிற்று. இனி என் வாழ்வு அவல வாழ்வுதான்! என் உயிருள்ளவரை சுந்தரியைப்பற்றிக் கவலைப்பட்டுக்கொண் டேயிருக்கவேண்டியதுதான். என் சொத்து, சுகம் எல் லாம் என்னோடு பாழாகிவிடும். என் சந்ததி என்னோடு அற்றுப்போய்விட்டது. இப்பொழுது வாழ்க்கையில் எனக்கு நிம்மதி ஒன்று மட்டும் கிடைத்தால் போதுமென்று ஏங்குகிறேன். துக்கக்கடலில் ஆழ்த்தப்பட்டிருக்கும் எனக்கு நிம்மதி என்னும் கரை தென்பட எவ்வளவு காலம் ஆகுமோ! அல்லது கரையே தென்படாது போய்விடுமோ என்னவோ!



## 7 சுந்தரி

நான் இப்பொழுது குழந்தை முருகனுடன் விளையாடிக்கொண்டு சந்தோஷமாக இருக்கிறேன். இந்தச் சமயத்தில் என் தாயார் எப்படிக் கவலைப்பட்டுக்கொண்டிருக்கிருளோ; என்னைப்பற்றி அவள் என்ன நினைத்துக்கொண்டிருப்பாளென்பதை அறிய ஆவலாக இருக்கிறது! இதைத் தெரிவது எப்படி? அவள் இருக்குமிடத்துக்கும் இந்த நாகர்கோவிலுக்கும் நடுவே 250 மைல்களல்லவா குறுக்கே மறைத்துக்கொண்டு இருக்கிறது. பாண்டவர்கள் ஒரு வருஷம் அஞ்ஞாதவாசம் செய்தார்கள்! நானும் என் கணவரும் எங்கள் வாழ்க்கை முழுதும் பந்துக்கள், சொந்த ஊரார் முகத்தில் விழிக்காமல் இப்படியே வாழவேண்டியிருக்குமோ என்னவோ!

அப்படி இருந்துவிட்டால்தான் என்ன? என் லட்சியம் கைகூடிவிட்டது. நாகர்கோவிலுக்கு வந்து இந்த நான்கு வருஷகாலத்திற்குள், நான் தாசி சாரதாம்பாள் மகள் என்பதையே மறந்துவிட்டேன். அது மட்டுமா? தாசிகள் என்ருலுமே எனக்கு வெறுப்பு உண்டாகிறது. பூக்கட்டும் பண்டார ஜாதிக்காரியாகிவிட்டேன் நான். நாகர்கோவில் ஜனங்கள் என்னை வடிவேலுவின் மனைவியென்பதை ஒப்புக்கொண்டாகிவிட்டது. வாழ்நாள் முழுதும் இதே தோரணையில் இருந்துவிட்டால் போதுமானது.

என்னுல் முடிந்தவரையில் வடிவேலுவின் மனம் கோணுமல் நடந்துவருகிறேன். குழந்தையின்மேல் அவருக்கு எவ்வளவு பாசம்! அவனை நன்ருகப் படிக்கவைத்துவிடவேண்டுமென்று எங்களுக்கு ஆவல். ரொம்ப சூடிகையாக இருக்கிருன். இந்த வருஷமே பள்ளிக்கூடத்துக்கு அனுப்பவேண்டுமென்று இருந்தேன். எனக்கு அவனை

விட்டுப் பிரிந்திருக்கவே முடியவில்லை. கணவர் காலையில் எழுந்ததும் தன் அலுவலைக் கவனிக்கப் போய்விடுகிறார். அவர் திரும்பி வரும்வரையில் எனக்கு முருகனோடு விளையாடிக்கொண்டிருப்பதில் பொழுது போவதே தெரியவில்லை. முருகனையும் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிவிட்டால் எனக்கு நேரமே போகாது.

என் கணவர் இப்பொழுது ஆறுமாதமாக ஏதோ கவலையில் ஆழ்ந்திருக்கிறார் என்று தோன்றுகிறது. என்ன கவலையினால் அவர் முகம் இப்படி வாடியிருக்கிறதென்று அறிய முயன்றால் முடியவில்லை. கேட்டாலும் ஏதோ சொல்லி மழுப்பிவிடுகிறார். வியாபாரத்தில் நல்ல லாபம் இல்லையோ என்னவோ! கனவில்கூட வரவு செலவு கணக்குகளைப் பிதற்றுகிறார்.

அன்று நான் வியாபாரத்தைப்பற்றி விசாரிக்க ஆரம்பித்தேன். "வியாபாரம் நன்றாக நடக்கிறதே! இந்த வருஷம் ஏராளமான லாபம் கிடைத்திருக்கிறது" என்று சொன்னார். இது பொய்தானென்று எனக்கு நிச்சயமாகப் படுகிறது. ஆனாலும் இதைப்பற்றி நான் மேலும் கிளறவில்லை. அவர் ஏன் என்னிடம் இந்தவிதமாகப் பொய் சொல்லி நஷ்டத்தை மறைக்கவேண்டும்? நானும் வருத்தப்படுவேனென்றுதான் அவர் இவ்வாறு மறைக்கிறார் அவருக்குத் தெரியாத யுக்தியையா நான் சொல்லப்போகிறேன்.

அவர் ஏதோ தோட்டம் விலைக்கு வாங்கப்போகிறாரென்று வேலைக்காரப்பையன் சொல்லிக்கொண்டிருந்தான். அவர் இஷ்டப்படி என்ன வேண்டுமானாலும் செய்யட்டும். எனக்கு அதைப்பற்றி அக்கரையில்லை. கையிலுள்ள பணம் பூராவும் போய்விடக்கூடாதே என்றுதான் எனக்குக் கவலையாக இருக்கிறது. வீட்டுச் செலவை இன்னும் கொஞ்சம் சுருக்கவேண்டும். வியாபாரத்தைப்பற்றியே இனி ஒன்றும் அவரிடம் பேசக்கூடாது. பணக்கஷ்டம்

வந்தது என்று தெரிந்தால் என் நகைகளைக் கழட்டிக் கொடுத்தாவது அவர் நினைத்த தொழில் நடக்கும்படி செய்வேன். நகைகளை நேரடியாகக் கொடுத்து விற்கச் சொன்னால் அவர் சம்மதிப்பாரா? "இந்த நகை எனக்குப் பிடிக்கவேயில்லை. விற்றுவிடுங்கள்" என்றுதான் சொல்லவேண்டும். அப்புறம் பணம் வந்தபிறகு, "இந்தப் பணத்தையும் வியாபாரத்தில் போட்டு விருத்திபண்ணுங்கள்" என்று சொல்லவேண்டும்.

புருஷன் மனைவி இருவரும் அன்போடு அன்னியோன்னியமாக இருப்பதிலும் இவ்வளவு கஷ்டங்கள் இருக்கிறது! நான் அவருடைய நன்மையையே விரும்புகிறேன். அவர் என்னுடைய நன்மையையே பெரிதாக மதிக்கிறார். அன்பு காரணமாக வரும் சிறு சிறு சங்கடங்கள் இன்பந்தான் தருகின்றன. முருகன் என்ன சண்டைகள் போடுகிறான் என்னோடு! விளையாட்டாக அடிக்கக்கூடச் செய்கிறான். அந்த அடிகள் எல்லாம் புஷ்ப அர்ச்சனைகள்போல அல்லவா இன்பமளிக்கிறது எனக்கு!



# 8 வடிவேலு

"அடுத்து முயன்றாலும் ஆகு நாளன்றி எடுத்த கருமங்கள் ஆகா—" என்று நன்றாகத்தான் சொல்லியிருக்கிறார்கள் பெரியவர்கள். பூந்தோட்டம் வாங்க வேண்டுமென்று எவ்வளவு முயற்சிக்கிறேன். நாட்கள்தான் கடந்துகொண்டே போகிறது. ஐந்து வருஷ வியாபாரத்தின் மூலம் ஆயிரம் ரூபாய் வரை கையை விட்டுப் போய்விட்டது. கையில் இருப்பதைக்கொண்டு தோட்டம் வாங்காவிட்டால் இதுவும் செலவாகிவிடும்.

சுந்தரிக்கு என் பண நஷ்டம் தெரியாதபடி சமாளித்துக்கொண்டு வருகிறேன். வீட்டுச் செலவுக்குத் தாராளமாகக் கொடுத்துவந்தால் என் வியாபாரம் நன்றாக நடக்கிறதென்றுதானே அவள் எண்ணிக்கொள்வாள். தோட்டம் வாங்கி முடியும்வரைதான் பண நஷ்டம். பின்பு அமோகமாக லாபம் வருமென்பது நிச்சயம். ஆனால் நல்ல தோட்டம் கிடைக்க வேண்டும். நல்ல தோட்டங்களின் சொந்தக்காரர்கள் அவைகளை விலைக்கு விற்பதில்லை. வளமற்ற தோட்டங்கள்தான் இரண்டொன்று விலைக்குத் தருவதாகச் சொல்கிறார்கள். அதுவும் ஏகப்பட்ட விலை. நான் பிரியமாகக் கேட்பதிலிருந்து அவர்கள் விலையை அதிகமாகச் சொல்கிறார்கள். பணம் அதிகம் கொடுத்துத்தான் வாங்கவேண்டியிருக்கிறது.

கடையில் நஷ்டம்தான் ஏற்பட்டு வருகிறது. இதை எவ்வளவு சீக்கிரம் நிறுத்த முடியுமோ அவ்வளவு சீக்கிரம் நிறுத்தவேண்டும். இதை விட்டுவிட்டால் ஜீவனத்திற்கு உடனே ஏதாவது தொழில் வேண்டும். எனக்குப் புஷ்பத் தோட்ட அனுபவம் தவிர வேறு ஒரு தொழிலும் நன்றாகத் தெரியாது. ஆகையால் தோட்டப்பயிரில்தான் இறங்க வேண்டிவருகிறது. அதிலும் நஷ்டம் ஏற்பட்டால்!

யுக்தி, அனுபவம், பொருள் இவைகளைக் கொண்டு ஒரு காரியத்தை ஆரம்பிக்கலாம். ஆனால் அது வெற்றிகரமாக முடியுமா, அல்லது அதில் தோல்விதான் ஏற்படுமா என்பதை விதியல்லவா நிர்ணயிக்கிறது. பூக்கடை நன்றாக நடக்குமென்று எண்ணித்தான் ஆரம்பித்தேன். ஆனால் அது என்னை ஆண்டியாக்கப் பார்க்கிறது. பூந்தோட்டமும் இப்படியே செய்தாலும் செய்யலாம். யார் கண்டது!

நான் குடும்பத் தலைவன். எப்படியும் சம்பாதித்து ஆகவேண்டும். என் உடல் திறனுள்ளவரை எப்படியும் சம்பாதிப்பேனென்ற உறுதி எனக்கு இருக்கிறது. ஆனால் சுந்தரி சுகமாக வாழ்ந்தவள். பணக்கஷ்டம் என்பதை என்னவென்றே அறியாதவள். என் காரணமாகவே அவள் இப்பொழுது எளிமையான வாழ்வு வாழ்கிறாள். உல்லாசப் பொருள்களையெல்லாம் வேண்டாமென்று தள்ளிவிட்டாள். வீட்டுச் செலவையும் எவ்வளவோ சிக்கனமாகவே நடத்துகிறாள்.

முருகன் அவளுடைய அன்பினால்தான் வளர்கிறான். கடவுள் புண்ணியமாக இதுவரை நோய்நொடி ஒன்றும் எங்கள் குடும்பத்தில் தலைகாட்டவில்லை. சுந்தரிதான் வீடு வாசலைச் சுத்தமாக வைத்துக்கொள்கிறாளே!

முருகனைத் தன் குழந்தையென்றே பாவித்துவிட்டாள் சுந்தரி. அவனும் சுந்தரியைத் தன் பெற்றதாய் என்று தானே நினைத்துக்கொண்டிருக்கிறான். அடுத்த வருஷமாவது அவனைப் பள்ளிக்கூடத்தில் கொண்டுசேர்க்க வேண்டியதுதான். சுந்தரி இதற்குள்ளாகவே அவனுக்குத் தமிழ் எழுத்துக்களெல்லாம் போதித்துவிட்டாளே! லக்கங்களைக்கூட அவன் ரொம்பத் தெளிவாகச் சொல்கிறான். அவனுடைய ஜாதகப்படி அவன் எவ்வளவோ செல்வம் சேர்ப்பானென்று தெரிகிறது. அவன் தலையெடுக்கும்

வரை நான் சிரமப்படவேண்டும். பின்பு நான் நிம்மதி யாக வாழலாம்.

சில சமயங்களில் என் அக்காளைப்பற்றியும், சுந்தரியின் தாயாரைப்பற்றியும் நான் நினைப்பதுண்டு. அவர்களைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. 'ரொம்ப நல்லவனாக இருந்த வடிவேலு சுந் தரியைக் கூட்டிக்கொண்டு எங்கோ ஓடிப்போய்விட்டான்' என்றுதானே அவர்கள் நினைத்துக்கொள்வார்கள். ஏன்! எனக்கே என்னைப்பற்றி ஆச்சரியமாக இருக்கிறது. இவ் வளவு துணிச்சல் எனக்கு எங்கிருந்து வந்தது! சந்தர்ப் பங்களின் மூலம் மனிதன் எப்படியெல்லாம் மாறிவிடு கிறான்!

சுந்தரியோடு நாகர்கோவிலில் வந்து குடும்பம் நடத்து வேன் என்று நான் கனவுகூடக் கண்டிருக்கமாட்டேன். சுந்தரிகூட இதைப்பற்றி நினைத்திருக்க மாட்டாள். சரி யான சம்பாத்தியம் மட்டும் இருந்துவிட்டால் எனக்குக் கவலையே கிடையாது. நிரந்தரமாக ஒரு வரும்படி ஏற்படு வதற்கு நாளை எப்படியும் அந்தப் பூந்தோட்டத்தை விலைபேசி வாங்கிவிட வேண்டியதுதான்.



## 9 சுந்தரி

தான் பூந்தோட்டம் ஆரம்பித்ததில் என் கணவருக்கு ரொம்ப திருப்தி. உற்சாகமாகத் தினமும் அதைப் பற்றி என்னிடம் பேசுகிறார். முருகனை அடிக்கடி அங்கு கூட்டிக் கொண்டு போகிறார். முருகன் பள்ளிக்கூடத்திற்கும் ஒழுங்காகப்போய் வருகிறான். உபாத்தியாயர் இவன்மீது ரொம்பப் பிரியமாக இருக்கிறாராம்.

இன்னும் நான்கு மாதத்தில் முருகனுக்குத் தம்பியோ தங்கையோ பிறக்கப்போகிறது. என் கணவருக்குத் தலை கால் தெரியவில்லை. அடிக்கடி என்னைக் கேலிகூடப்பண்ணுகிறார். ஒரு தடவை என்னைத் திருவனந்தபுரத்துக்கு அழைத்துக் கொண்டு போனார். அங்கு ரமணீயமான இயற்கைக் காட்சிகளையெல்லாம் கண்டு களித்தேன். அங்கு கதகளி நடனத்தைப் பார்த்தபோது என்னையறியாமலே என் கால்கள் துடிக்க ஆரம்பித்துவிட்டன! தாளமும் சுருதியும் லயித்து விட்டால் நமது உடம்பிலுள்ள நரம்புகளெல்லாம் தன் வசமிழந்து பரவசமடைகின்றன. அதிலும் எனக்கு நாட்டியத்தில் பயிற்சி இருந்ததனால் கதகளி நடனத்தை நன்றாக அனுபவித்தேன். ஒரு சபையில் அவரோடு உட்கார்ந்து ஒரு காட்சியைக் காண்பதென்றால் இன்பமாகத்தான் இருக்கிறது. ஒரு கணவனோடு வாழும் மகிமையே மகிமை! எனது அன்பு முழுவதையும் அவர் மீது செலுத்தமுடிகிறது. ஒருவர்க்கு மற்றவர் துணை. எவ்வளவு ஐக்கியம் ஏற்பட்டுவிடுகிறது தம்பதிகள் என்ற பந்தத்தினால்! தாசி வகுப்பினர்கள் இந்த சுகத்தை அறியாமல் நரக வாழ்க்கை வாழ்கிறார்களே! குதிரை தன் வாயில் போட்டிருக்கும் கடிவாளத்தை ஆபரணமென்று நினைத்தால் எப்படியிருக்குமோ அப்படித்தானிருக்கிறது தாசிகள் தங்கள் பிழைப்பை உயர்வாக எண்ணிக்கொள்வது.

நல்ல வேளையாக நான் அந்த அசிங்கமான வாழ்க்கையில் புகுந்துவிடாமல் தப்பித்து என் மனதைப் பரிசுத்தப் படுத்திக்கொண்டேன். அதுமட்டுமல்ல, என் குலத்தவர்களுக்கு நான் ஒரு வழிகாட்டியாக இருக்கிறேன் மற்றத் தாசிப் பெண்களும் என்னைப் போலவே ஒரு கணவனோடு வாழ்வதென்று தீர்மானித்து வாழ்க்கை நடத்த ஆரம்பித்து விட்டால் தாசிக்குலம் என்பதே நாளடைவில் இல்லாமல் போய்விடும். அப்படி ஒரு காலம் வருமா?

மனித லட்சியங்களுக்கு எல்லையே கிடையாது. போகப்போக அடிவானத்தைப்போல எட்டிப் போய்க் கொண்டிருக்கிறது. சமூகச் சீர்திருத்தத்திற்கு அஸ்திவாரம் போட்டுவிட்டதாக நான் எண்ணி மகிழ்ந்து கொள்கிறேன். என் மட்டில் பார்க்கப்போனால் என் லட்சியம் கைகூடி விட்டதென்றுதான் நினைக்கிறேன். எனக்கு இன்னும் நான்கு மாதங்களில் பிறக்கப்போகும் குழந்தை, பெண் குழந்தையாக இருந்தால், அது தாசியாக வாழ முடியாது. குடும்ப வாழ்க்கையில் தாய் தந்தையருடன் இருந்து வளரும் குழந்தை இதுபோன்ற வாழ்க்கையைத்தானே விரும்பும். எனக்கு ஏற்பட்டதுபோன்ற மனக் குழப்பமும் எதிர்ப்பும் அதற்கு இருக்காது. எங்கள் பரம்பரையாகிய இந்த ரயில்வண்டித்தொடர் தாசிக்குலம் என்ற பாதையை விட்டு விலகி விட்டது. இந்தச் சந்ததிக்கும் தாசிக் குலத்திற்கும் இனி யாதொரு சம்பந்தமும் கிடையாது.

தனக்குத் தம்பியோ தங்கையோ பிறக்கப்போகிறது என்று முருகன்கூட ஆனந்தக் கூத்தடிக்கிறான். அவனுக்கு என்ன தெரிகிறது! அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் வேடிக்கையாகச் சொல்வதை வைத்துக்கொண்டு அவனும் "அம்மா, எனக்குத் தம்பி பிறந்தா நானும் அவனும் ஒண்ணாகவே பள்ளிக்கூடத்துக்கு போவோம். ரெண்டு பேரும் ஒண்ணாகவே விளையாடுவோம்!" என்று அழகிய மழலையில் சொல்கிறான். குழந்தைகளின் மழலை மொழி

களைக் கேட்டுக்கொண்டே யிருக்கவேண்டும் போலிருக்கிறது. இனிமையான சங்கீதத்தைக் கேட்கும் சுகம் குழந்தைகளின் மழலை மொழியிலும் இருக்கிறது.

முருகனுக்கும், பிறக்கப்போகும் என் குழந்தைக்கும், நன்ருக சங்கீதப் பயிற்சி கொடுக்கவேண்டும். என்னிடமுள்ள நாட்டியக்கலை வீணுகி விடக்கூடாது. நான் குடும்பப் பெண் ஆன பிறகு வீட்டில் வைத்துக்கூட நாட்டியம் ஆட வெட்கமாக இருக்கிறது. அடாடா! நாட்டியம் என்று எண்ணியவுடனே என் பழைய வாழ்க்கை ஞாபகத்திற்கு வந்துவிடுகிறது. கணவரின் திருப்திக்காகவாவது ஒருநாள் எனது நாட்டியத் திறமையை அவரிடம் காட்டவேண்டுமென்றிருக்கிறது. ஆனுல் நான் நாட்டியமாடுகின்றேன் என்று இங்கு அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் யாராவது அறிந்து விட்டால் நான் தாசிக் குலத்தைச் சேர்ந்தவளோ என்று அவர்கள் சந்தேகப்பட நேரிடும். இவ்வளவு அரிய கலையை ஒரு அவமானச் சின்னத்தோடல்லவா இணைத்துவிட்டார்கள். எந்தக் குலத்தவரும் நாட்டியக்கலையைப் பயிற்சி செய்யலாம் என்ற காலம் சீக்கிரம் வரவேண்டும். எது எப்படியிருந்தாலும் என் குழந்தைகளுக்கு நான் நிச்சயமாக நாட்டியக்கலையில் பயிற்சி கொடுக்கப்போகிறேன். பரம்பரையாக எங்கள் குடும்பத்தில் தழைத்துவரும் இந்தக் கலாபொக்கிஷம் என்னுல் வியர்த்தமாகிவிடக்கூடாது.

என் மனதில் என்னென்ன எண்ணெங்களெல்லாம் கிடந்து குமைகின்றன. தாசிப் பெண் குடும்பப்பெண்ணுக மாறினுல் இவ்வளவு மனோ வேதனை ஏற்படத்தான் செய்யும்போலிருக்கிறது. நான் என் குலத்தை மறைப்பதற்காக எப்படியெல்லாமோ பேசவேண்டியதிருக்கிறது. குடும்ப வாழ்க்கையைச் சிறு வயதுமுதல் நன்ருகப் பார்த்து அனுபவிக்காததால் நான் சரியான மனைவியாக நடப்பது எப்படி என்பதைப் பற்றியெல்லாம் ஒவ்வொன்ருகத்தான்

கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது பக்கத்து வீட்டு மரகதம் அடிக்கடி தன் கணவனுடைய வீரச் செயல்களையெல்லாம் சொல்வாள். அம்மாதிரியே நானும் என் கணவரைப்பற்றி அன்று அவளிடம் இரண்டொரு கற்பனைச் சம்பவங்களைச்சொல்லிப் பெருமையடித்துக்கொண்டேன். அவளும் "சரி சரி" என்று கேட்டுக்கொண்டிருந்தாள்.

எதிர் வீட்டுக்காரி ஒரு உத்தியோகஸ்தரின் மனைவி. அவள் கணவர் ரொம்பக் கண்டிப்பாக இருப்பார். அவள் அதைப்பற்றி என்னிடம் ஆவலாதிகள் சொல்வாள். என் கணவரும் ரொம்பக் கண்டிப்புக்காரர்தான் என்பதைக் காண்பிக்க இரண்டொரு கற்பனைச் சம்பவங்களை அவளிடம் அள்ளி வீசினேன். அவள் கேலியாகச் சிரித்தாள். "ஏன் சிரிக்கிருய்?" என்று நான் கேட்டேன். "உங்கள் வீட்டில் உன் கணவர் ஒரு வார்த்தைகூட அதட்டிப் பேசியதே கிடையாதே! அப்படியிருக்கும்போது நீ அவரைப்பற்றி இப்படியெல்லாம் பொய் சொன்னுல் நான் எப்படி நம்புவது?" என்று கேட்டுவிட்டாள். எனக்கு மிகவும் வெட்கமாகப் போய்விட்டது. எதற்காக இந்த மாதிரிப் பொய் சொல்லி அகப்படவேண்டும்.

அண்டை அயலிலுள்ள பெண்களுக்கெல்லாம் என் மேலும் முருகன்மேலும் மிகவும் பிரியம். விசேஷ நாட்களில் அவர்கள் வீட்டிற்குத் தின்பண்டங்கள் அனுப்பி வைப்பேன். அவர்களும் அடிக்கடி ஏதாவது கொண்டு வந்து கொடுப்பார்கள். என் வீட்டுக்கு யார் வந்தாலும் அவர்களை நான் சும்மா அனுப்புவதே இல்லை. புஷ்பம், காபி, பலகாரம் இவைகளைக் கொடுத்து உபசரிப்பேன். குடும்பப் பெண் என்ருல் இப்படியெல்லாம் இருக்கவேண்டுமல்லவா?

ஒரு நாள் அடுத்த வீட்டு மரகதம் என் தாயார் தகப்பனுர், மாமனுர் மாமியாரைப்பற்றி விசாரிக்க ஆரம்பித்து

விட்டாள் எனக்குப் பரம சங்கடமாகப் போயிற்று. எல்லோரும் காலமாகிவிட்டார்கள் என்றுதான் பொய்சொல்ல வேண்டியிருந்தது. உயிரோடிருக்கும் என் தாயாரைக் கூடச் சமீபத்தில் இறந்துபோனுள் என்று துளிக் கண்ணீர் வடித்தேன். அப்பப்பா! குலம்விட்டுக் குலம் தாவுவதற்குத் தான் மனச்சாட்சியை எப்படியெல்லாம் கொலே பண்ண வேண்டியிருக்கிறது. இதுபோல இன்னும் ஐந்தாறு வருஷம் கழிந்துவிட்டால் எல்லாமே சகஜமாய்ப் போய்விடும். என் குழந்தைகளும் என் பழைய கவலேகளே அடியோடு மறக்கச்செய்து விடுவார்கள். இதே நாகர்கோவிலில் என் குழந்தைகளுக்கு நல்ல இடத்திலிருந்து சம்பந்தம் கொண்டு விடவேண்டும். காலத்தின் வேகத்தில் எத்தனேயோ மாறுதல்கள் ஏற்படலாம். இதுவும் ஏன் நடக்காது?



## 10 முருகன்

வீட்டைவிடப் பள்ளிக்கூடம் எனக்குச் சந்தோஷ மாக இருக்கிறது. சேர்ந்து விளையாடுவதற்கு நிறையப் பிள்ளைகள் இருக்கிறார்கள். என் சட்டையையும் பூட்ஸை யும் பார்த்து அநேக பிள்ளைகள் என்கூட ரொம்ப சிநேக மாகிவிட்டார்கள். நான் தினமும் ஏதாவது தின்பண்டம் கொண்டுபோவேன். அதற்காகப் பல பையன்கள் என் பின்னாலேயே சுற்றுவார்கள். விளையாட்டுக்களில் அடிக் கடி நான்தான் தலைமை வகிக்கிறேன். வாத்தியார் என்னை அடிப்பதே இல்லை. நான் தப்பிதம் செய்தாலும் அதட் டவேமாட்டார். எப்பொழுதும் பள்ளிக்கூடத்திலேயே இருந்துவிடலாம்போல் இருக்கிறது.

பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிவரக் கொஞ்சம் நேர மாகிவிட்டால் அம்மா பள்ளிக்கூடத்துக்கு ஆள் அனுப்பி விடுவாள். எனக்கு லேசாக உடம்பு சுட்டால் உடனே டாக்டரைக் கூட்டிக்கொண்டு வருகிறாள். என்னை யாரா வது தொட்டால் போதும். உடனே அவர்களோடு பேசக் கூடாது என்று எனக்குப் புத்திமதி சொல்வாள். என் சட்டை கொஞ்சம் அழுக்காகிவிட்டால் உடனே வெளுத்த சட்டை போட்டுவிடுவாள் எனக்கு.

என்னைக் கடைத்தெருவிற்கும், பூந்தோட்டத்திற்கும் அழைத்துப்போவதில் என் அப்பாவிற்கு மிகவும் இஷ்டம். பூந்தோட்டத்தில் அப்பாவே கஷ்டப்பட்டு வேலை செய் வார். நானும் வேலை செய்வதைக் கண்டு அவர் சந்தோஷ மடைவார். தோட்டத்திற்குள் போனவுடன் ஒரு ரோஜாப் பூவைப் பறித்து என் சட்டையில் சொருகிவைப்பார். பிறகு தோட்டத்திற்கு, வேலையாளோடு தண்ணீர் பாய்ச்சு வார். மண்ணைக் கொத்திக்கொடுப்பார். பூக்களைப்பறித்துக்

கூடையில் போட்டு வேலையாளைக் கடைத்தெருவுக்கு அனுப்பிவிட்டு நானும் அவரும் வீட்டுக்கு வருவோம்.

அம்மா, "நீங்கள் ரொம்பக் களைப்படைந்திருக்கிறீர்களே! தோட்டத்தில் ஏதாவது வேலை செய்தீர்களா?" என்று அப்பாவைப் பார்த்துக் கேட்பாள். "அதெல்லாம் ஒன்றுமில்லையே. அங்கிருந்து நடந்துவந்ததுதான் கொஞ்சம் களைப்பாயிருக்கிறது" என்று அம்மாவிடம் பொய் சொல்லுவார். பொய் சொல்லக்கூடாது என்று எனக்குப் புத்திமதி சொல்பவர் தான்மட்டும் ஏன் இப்படிப் பொய் சொல்லவேண்டும்? எனக்கு இது புரியவில்லை.

இன்னும் சிலநாளில் எனக்குத் தம்பியோ தங்கையோ பிறக்கப்போகிறது! எனக்கு வீட்டில் விளையாட ஆள் கிடைத்துவிடும்.



# 11 வடிவேலு

பூந்தோட்டம் வாங்கி ஆறுமாதமாயிற்று. அதில் என் முழு உழைப்பையும் காட்டிவருகிறேன். இருந்தாலும் மாதம் இருபது இருபத்தைந்துக்குமேல் அதில் வரும்படி கிடைக்கவில்லை. மண்ணிலுள்ள வளமெல்லாம் போன பிறகுதான் நான் அதை வாங்கியிருக்கிறேன். உரம் போட்டு நிலத்தைச் செழுமையாக்கிவிடலாமென்று பார்த்தால் இன்னும் ஐநூறு ரூபாயாவது வேண்டியிருக்கும். பணம் போனாலும், அதற்குப் பதிலாக நிலமாவது கையில் தங்குமே என்று கையிலிருந்த பணத்தைக் கொடுத்துத் தோட்டத்தை வாங்கினேன். வாங்கி என்ன செய்வது! பலனில்லா நிலம்!

மாதம் இருபது இருபத்தைந்து சம்பாதிப்பதற்காக இவ்வளவு முதல்போட்டு இப்படிக் கஷ்டப்படவேண்டியதில்லை. இதெல்லாம் சுந்தரிக்குத் தெரிந்தால் மனம் வருந்துவாள். வருமானத்தை அதிகப்படுத்துவதற்காக நான் எவ்வளவோ முயற்சிக்கிறேன். ஆயினும் எடுத்ததெல்லாம் வீணுகிறதே!

பெண்குழந்தை வேறு பிறந்திருக்கிறது. சுந்தரியின் பிரசவத்திற்காக நிலத்தின்மீது இருநூறு ரூபாய் கடனும் வாங்கியாயிற்று. கடனைத் திரும்ப எப்படி அடைப்பதென்பதைப்பற்றி இப்பொழுது யோசிக்கக்கூட எனக்கு அவகாசமில்லை. ஓயாது உழைத்து உழைத்து என் உடல் வலுவிழந்துவிட்டது. சிறிது காலம் ஓய்வெடுக்க ஆவலாயிருக்கிறது. ஆனால் இப்பொழுது வீட்டுச் செலவுக்குப் பணம் வேண்டுமே!

முதலிலேயே ஆடம்பரமான செலவுடன் எங்கள் குடும்பம் ஆரம்பித்துவிட்டது. செலவுகளைக் குறைக்க

வேண்டுமென்றால் கஷ்டமாகத்தானிருக்கிறது. நான் பணத்திற்காகக் கஷ்டப்படுவதை அறிந்தே சுந்தரி வீட்டுச் செலவுகளைக் குறைத்துக்கொண்டாள். எப்படியானாலும் வரவைவிடச் செலவு அதிகப்படியாகத்தான் ஆகிறது.

பாடப் புஸ்தகம் வேண்டுமென்று முருகன் எத்தனையோ நாளாகக் கேட்டுக்கொண்டிருக்கிறான். அன்றாடம் பூவிலிருந்து கிடைக்கும் முக்கால் ரூபாய், ஒரு ரூபாயைக் கொண்டு வீட்டுக்கு அவசியமான சாமான்களை வாங்குவதா? முருகனுக்குப் புஸ்தகம் வாங்குவதா? எனக்கு நல்ல வேஷ்டிகள் ஒன்றுமில்லை. சுந்தரிக்கும் துணிமணிகள் எடுக்கவேண்டும். அதைப்பற்றி அவள் ஒன்றுமே என்னிடம் கேட்டதில்லை. நாலைந்துநாள் வருமானத்தைச் சேர்த்துவைத்து அவளுக்கு ஒரு சேலை வாங்கவேண்டுமென்றால், தினமும் இப்படியேதான் கழிந்துகொண்டிருக்கிறது. யோசித்து யோசித்து என் மூளையும் என் தோட்டம்போலவே வரண்டுவிட்டது. சுந்தரி என்கையில் ஒப்படைத்த இரண்டாயிரம் ரூபாயும் கரைந்துபோய்விட்டது. அதைப்பற்றியும் பிரசவச் செலவுக்காகக் கடன்வாங்கியிருப்பதைப்பற்றியும் நான் சுந்தரியிடம் சொல்லவே இல்லை. சொன்னால் அவள் என்ன நினைத்துக்கொள்வாளோ! பேதைப்பெண் என்னை நம்பிவந்ததோடு, தன் பணத்தையும் என் கையில் ஒப்படைத்தாள். என் வாழ்க்கையைப் புதுப்பிக்க வந்தாள்; நான் அவளைக் கஷ்டதசையில் கொண்டுவந்துவிட்டேன். ஆனால் நான் வேண்டுமென்று அவளுக்கு ஒரு தீங்கையும் நினைக்கவில்லை. விதிதான் என்னை இப்படிச் சோதிக்கிறது. என் சம்பாத்தியக் குறைவினால் எத்தனை பேருடைய வாழ்க்கை பாதிக்கப்படுகிறது. சுந்தரியின் உடம்பு வரவர மிகவும் இளைத்துக்கொண்டே வருகிறது. முருகனுடைய படிப்புக் கெடுகிறது. கைக்குழந்தை தாயைப்போலவே மிக அழகாக இருக்கிறது. குழந்தைக்கு எவ்வளவோ நகைபோட்டுப் பார்க்கவேண்டுமென்று ஆவலாக இருக்

கிறது. ஆவல் மட்டும் இருந்தால் போதுமா? பணம் வேண்டுமே!

அக்கம் பக்கத்திலுள்ள பெண்கள் சொந்த உறவினர்கள் போல வந்து சுந்தரிக்கு உதவுகிறார்கள். அந்த மட்டிலும் நான் மிகவும் பாக்யசாலிதான். சுந்தரியின் அன்பினால் எத்தனையோ பெண்கள் அவளுக்கு உயிர்த் தோழிகளாக ஆகிவிட்டார்கள். எவ்வளவுதான் பணத்தை அள்ளிக் கொடுத்தாலும் இத்தனை அன்பான உதவிகளை எதிர்பார்க்க முடியாது. பணத்தினால் செய்யமுடியாததை அன்பினால் செய்யமுடியும் என்பதைச் சுந்தரி எனக்கு நிதரிசனமாகக் காட்டிவிட்டாள்.

முருகனுக்குத் தாயைப்போலவே நல்ல பழக்கங்களெல்லாம் அமைந்துவிட்டன. எல்லோரும் அவனிடம் பிரியமாக இருக்கிறார்கள். முருகன் பிறரிடம் அன்பாகவும் பணிவோடும் பேசுகிறான். எதிர்காலத்தில் அவன் மிகவும் கண்ணியமாகவும், யோக்கியமாகவும் வாழ்க்கை நடத்துவான் என்று எனக்கு நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. விளையும் பயிர் முளையிலேயே தெரியுமல்லவா! அவனுடைய படிப்புத்தான் எப்படி நடக்குமோ தெரியவில்லை. மேல் படிப்பெல்லாம் படிக்கவைக்க வேண்டுமென்று எனக்கும் சுந்தரிக்கும் எண்ணம்.

வருகிற வருமானத்தைப்பார்த்தால் சாப்பாட்டுச் செலவுக்கே போதாமலிருக்கிறது. வரும்படியை அதிகப்படுத்த மார்க்கமுமில்லை. இம்மாதிரியே எவ்வளவு காலம்தான் காலங்கழிக்க முடியும். திடீரென்று ஒருநாள் வியாதியினால் படுத்துக்கொண்டால் செலவுக்குப் பணம் இல்லாமல் போய்விடும். சுந்தரி என்ன செய்வாள்! முருகன் என்ன செய்வான்! சம்சாரம் ஒரு சாகரமென்பது சரியாகத்தானிருக்கிறது!

எனது பொக்கிஷ நிலைமையைப்பற்றி சுந்தரியிடம் இப்பொழுதே சொல்லிவிட வேண்டியதுதான். இல்லையா

ஞல் என்னைப்பற்றி அவள் தவருக எண்ணிக்கொள்வாள். தன்னைப்போல் அழகிய பெண்குழந்தையைப் பெற்ற மகிழ்ச்சியில் சுந்தரி பூரித்துப்போய் இருக்கிருள். அவளிடம் எப்படி என் பொருளாதார நிலைமையைச் சொல்வது! எத்தனையோ தடவை அவளிடம் சொல்ல வாயெடுத்தேன். ஆனல் ஏனே என்னை அறியாமலேயே பேச்சை மாற்றி விடுகிறேன்.

குழந்தையின் சிரிப்பை நாள் முழுதும் பார்த்துக் கொண்டேயிருக்கலாம் போலிருக்கிறது. சுந்தரிக்குக் குழந்தையைத் தவிர வேறு மனிதர் உலகத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. எப்பொழுதும் குழந்தையைப் பற்றியே பேச்சு, நினைப்பு எல்லாம்! அவள் விரும்பியபடியெல்லாம் அதற்கு உடைகள், நகைகள் வாங்கினேன். எல்லாம் கடன் வாங்கித்தான். நான் கடன் வாங்கிச் செலவு செய்கிறேன் என்பதைச் சுந்தரி கண்டாளா? பூந்தோட்டம் திடீரென்று பணத்தை அள்ளிக்கொடுக்கிறது என்றுதான் அவள் நினைத்துக்கொண்டிருப்பாள். எனக்குக்கூட குழந்தையைக் கண்டவுடன் கடன் கவலையெல்லாம் பறந்து விடுகிறது.

சுந்தரி சங்கீதத்தில் லயித்தவளாதலால் மோகன ராகத்தின் பெயரையே தன் குழந்தைக்குச் சூட்டவேண்டுமென்ருள். நான் என்ன வேண்டாமென்ரு சொல்வேன். அன்று முதல் குழந்தையை மோகஞ என்றே கூப்பிட்டு வருகிறோம். சங்கீதத்தைப்போலவே குழந்தை எங்களுக்கு இன்பமளித்துக் கொண்டிருக்கிறது. பக்கத்து வீட்டுப் பெண்கள் தன் குழந்தையை எடுத்து வைத்துக்கொண்டு 'மோகஞ' என்று கொஞ்சினுல் போதும். சுந்தரியின் மகிழ்ச்சிக்கு எல்லையே காணமுடியாது.

பணத்தைப்பற்றிய கவலை ஒன்றைத் தவிர மற்றப்படி வீடு குதூகலமாக இருக்கிறது. கடன்காரர்கள் வீட்டுக்கு வந்து எங்கள் இன்ப வாழ்வைப் பாழ்படுத்திவிடுவார்

களோ என்று என் மனம் அடிக்கடி வாதிக்கும். என்னைப் பற்றிக்கூட நான் அதிகமாகக் கவலைப்படவில்லை. எப்பாடு பட்டாகிலும் என் ஜீவனத்திற்குப் பார்த்துக்கொள்வேன். பொறுமையோடு என்னைப்பற்றிய கஷ்டங்களைப் சகித்துக்கொள்வேன். ஆனால் சுகபோகத்தில் வாழ்ந்த சுந்தரியும், கவலையற்று வாழவேண்டிய இரண்டு குழந்தைகளும் பொருளாதாரக் கஷ்டத்தினால் எவ்வளவோ பாதிக்கப்படுகிறார்களே என்பதுதான் என் ஓயாக் கவலை. துன்பத்திற்கும் ஒரு முடிவு உண்டல்லவா! எப்படித்தான் என் கவலைகள் நீங்குகிறதென்று பார்ப்போம்.



## 12 சுந்தரி

என் கணவர் தன் பணக் கஷ்டத்தைப்பற்றி என்னிடம் சொல்வதற்கு எவ்வளவு தயங்கினுர். என் பணம் இரண்டாயிரத்தையும் காலிபண்ணிவிட்டதாகக் கண்ணீர் வடித்தார். எனக்கு என்னவோ போலிருக்கிறது. இதற்காக அவர் இவ்வளவு வருந்துவானேன். அவர் கெட்ட வழிகளில் ஒன்றும் பணத்தை வீணுக்கிவிடவில்லை யென்பதுதான் எனக்கு நன்ருகத் தெரியுமே! ஏதோ வியாபாரத்திலும், பூந்தோட்டத்திலும் பணம் நஷ்டமாய்விட்டது. அதனுல் என்ன? பண நஷ்டத்தைப்பற்றி அவரைப்போல் என்னுல் துக்கப்பட முடியவில்லை.

ஐநூறு ரூபாய் கடன் வாங்கியிருப்பதாகச் சொல்லி வருத்தப்பட்டார். கடன்வாங்கியது குடும்பத்திற்காகத் தானே! இந்தக்கடனை அடைக்க முடியாமலா போய்விடும். ஒருசமயம் பணத்திற்குக் கஷ்டமாக இருக்கும். எப்பொழுதும் இப்படியே இருந்துவிடுமா? ஓடுகிற காலம் ஓடினுல் கூடுகிற காலத்தில் கூடுகிறது. இந்தச் சமயத்தில் நான் அவருக்கு ஆறுதல் சொல்லாமல் அவரோடு சேர்ந்து வருத்தப்பட்டுக்கொண்டிருந்தால் அவர் மனமுடைந்துபோவார்.

என் ஒட்டியாணத்தை விற்றுக் கடனை அடையுங்கள் என்ருல் முடியவே முடியாது என்று சாதிக்கிருர். இதனுல் எனக்கு ஏதோ பெருத்த நஷ்டம் ஏற்பட்டுவிடுமென்று அவர் கவலைப்படுகிருர். அவர் நினைக்கிறபடி நான் ஒன்றும் இதைப்பற்றிக் கவலைப்படவே இல்லை. பெட்டியிலேயே பூட்டிவைத்திருக்கும் ஒட்டியாணத்தைக் குடும்பக் கஷ்டத்தை நீக்குவதற்காக விற்பதில் என்ன குற்றம்? என் பணத்தையெல்லாம் அவர் நஷ்டப்படுத்திவிட்டாராம். இன்னும் நகைகளையும் பாழாக்கிவிட

இஷ்டமில்லையாம். எப்படியாவது தான் கஷ்டப்பட்டுச் சம்பாதித்துக் கடனை அடைத்துவிடுவாராம். இவருடைய அன்பினால் வருவது கெடுதலே ஒழிய நன்மையில்லை யென்பதை நான் எவ்வளவோ சொல்லிவிட்டேன். அவர் கேட்கவே மாட்டேனென்கிறார். அவர் சொல்கிறபடி எப்படி நடக்கமுடியும்? குடும்பக்கவலை, கடனைப்பற்றிய தொந்தரவு இவைகளையே சிந்தித்துக்கொண்டிருந்தால் எப்படி ஒரு முயற்சியைச் செய்யமுடியும்! தோட்டத்தின் மூலம் இப்பொழுது கிடைக்கும் வரும்படி குடும்பச் செலவுகளுக்குப் போதாதென்று தெரிகிறது. தோட்டத்திற்குப் பணம் செலவழித்து உரம்போட்டுப் பண்படுத்தினால்தானே அது உழைப்பிற்குத் தக்க பலனைக்கொடுக்கும்! கற்பாறையில் முட்டுவதுபோல, வளம் கெட்டுப்போன வீண் நிலத்தில் பாடுபட்டு என்ன செய்வது! இவர்தான் தோட்டவேலை முழுவதையும் செய்துவருகிறாராம். பகல் முழுவதும் வியர்க்க விறுவிறுக்க உழைத்து வேலை செய்துவருவதனால் தான் அவருடைய உடம்பு இப்படி இளைத்துப் போகிறது. அவருடைய உழைப்பிற்குத் தக்கபடி ஆகாரம் உண்பதில்லை. கவலையை நாம் அடக்கி ஆளாவிட்டால், அது நம்மையே விழுங்கிவிடும் என்பதை அவர் தெரிந்துகொள்ளமாட்டேனென்கிறார். அவருடைய மனச்சாக்ஷி ரொம்பவும் பொல்லாதது. எதற்கெடுத்தாலும் தன்னையே குறை கூறிக்கொள்ளுகிறார். என்னைப் பல துன்பங்களுக்கு ஆளாக்கிவிட்டதாக அவர் எண்ணிக்கொண்டிருக்கிறார். அவருடைய இந்தப் பைத்தியக்கார எண்ணத்தை எப்படி மாற்றுவதென்றே எனக்குத் தெரியவில்லை. எனக்கு மனோ சமாதானத்தைக் கொடுத்து, என் லட்சியத்தை நிறைவேற்றிவைத்த தீர புருஷனென்று நான் எப்பொழுதும் மனதிலேயே அவரைப் போற்றிப் புகழ்ந்துகொண்டிருக்கையில் எனக்காக அவர் ஏன் இவ்வளவு துக்கப்படவேண்டும். நான் என் மனதிற்குள் அவரை வெறுக்கிறதாக அவர் நினைக்கிறாரோ என்னவோ! அவரிடம்தான் என்

உள்ளத்தைத் திறந்து சொல்லிவிட்டேனே, பணம் போனதைப்பற்றி நான் கவலைப்படவே இல்லை என்று. இதிலிருந்தாவது அவருக்குத் தைரியம் உண்டாக வேண்டாமா? நாளை எப்படியாவது என் ஒட்டியாணத்தை விற்றுக் கடனை அடைக்கும்படி அவரை வற்புறுத்தவேண்டும். அவர் இந்த ஏற்பாட்டிற்குச் சம்மதிக்கும் வரையில் நான் சாப்பிடவே மாட்டேனென்று பிடிவாதம் பண்ணப்போகிறேன். அப்படியானுல்தான் அவர் ஒட்டியாணத்தை விற்றுக் கடனை அடைப்பார்.

கடனை அடைத்த பிறகாவது கவலையில்லாது வாழலாம். முருகனுடைய படிப்புக்கூட இப்பொழுது வீணுகக் கெட்டுவிட்டது. தோட்டத்தில் போய் வேலை செய்யவும், வீட்டுச் சாமான் வாங்கவுமே அவனுக்கு நேரம் சரியாய்ப் போய்விடுகிறது. பாக்கி நேரத்தில் குழந்தையைத் தூக்கி வைத்துக்கொண்டு விளையாடுகிருன். படிப்பதே இல்லை. ஆனுல் பள்ளிக்கூடத்தில் நிறைய மார்க் எடுப்பதாக வாத்தியார் சொல்கிருர். ரொம்பப் புத்திசாலியல்லவா! வீட்டில் படிக்காமலிருந்தும்கூட வகுப்பில் கெட்டிக்காரனுக இருக்கிருன். கடவுள் அருளால் அவன் நன்ருகப் படித்துப் பெரிய உத்தியோகத்துக்கு வரவேண்டும்.

அண்ணனைப் போலவே குழந்தை மோகனுவும் ரொம்பக் கெட்டிக்காரியாக ஆவாளென்று தோன்றுகிறது. அண்ணனை விட்டுப்பிரிவதே இல்லை. அதற்குப் பிறந்தநாள் அடுத்த வெள்ளிக்கிழமை வருகிறது. மோகனுவின் பிறந்தநாள் கொண்டாட்டத்தை விமரிசையாக நடத்த வேண்டுமென்றுதான் நான் திட்டம் போட்டிருக்கிறேன். என் ஒட்டியாணத்தை விற்கும் பணத்தைக்கொண்டு கடனையும்அடைத்துக் குழந்தையின் பிறந்தநாள் விசேஷத்தையும் நடத்திவிடலாம். கோவில்களுக்கெல்லாம் அன்று சிறப்பாகச் செய்யவேண்டும். என் லட்சியத்தின் உருவமல்லவா இந்தக் குழந்தை. இவளுடைய பிறப்பு என்னு

டைய பிறப்பைப் போல இழிவானதல்லவே. எங்கள் பரம்பரையிலிருந்து விலகி நான் செல்லும் புதுப்பாதையில் எனக்குப் பின் வருவதற்கு ஒரு சந்ததி கிடைத்துவிட்டது. பிற சமூகத்தில் உள்ள குழந்தைகள்போல மோகனவும், தான் இன்னாரின் மகள் என்று துணிவுடன் கூற முடியும். இதுபோதும் எனக்கு. இதுதானே எனது லட்சியம்! லட்சியம் கைகூடிவிட்டது.

மோகனா வளர்ந்து பருவமடைந்து ஒரு புருஷனை மணந்துகொள்வதைப் பார்த்து விட்டால், என் ஆத்மா சாந்தியடைந்துவிடும். இன்னும் பதினைந்து வருஷத்தில் இது நடக்காமலா இருக்கும்! மோகனாவை மணப்பதற்கு எத்தனையோ மாப்பிள்ளை வீட்டார் வந்து கேட்பார்கள். அப்பொழுது எனக்கு எவ்வளவு பெருமையாக இருக்கும் என் தாயார் என்னோடு இருந்து இதையெல்லாம் அனுபவிக்கக் கொடுத்துவைக்கவில்லை.

எனக்கு இப்பொழுது அடிக்கடி தோன்றுகிறது இந்தக் குழந்தையுடன் போய் என் தாயாரைப் பார்த்து வரலாமென்று. ஆனல் அவள் என்னை இங்கு திரும்ப வர விடமாட்டாள். அதோடு எங்களுக்குள்ள சம்பந்தமும் இந்த ஊரிலுள்ளவர்களுக்குத் தெரிந்துவிடும். அப்புறம் நான் வெளியே தலைகாட்டவே முடியாது. தாயாரை இங்கு வரச்சொன்னலும் இதே கதிதான் ஏற்படும். ஆகையால் தாயைப் பார்க்கவேண்டுமென்ற ஆவலை நான் அடியோடு விட்டுவிடவேண்டியதுதான். ஒரு தீமையும் செய்தறியாத என் தாய்க்கு நான் துரோகம் செய்திருப்பதாகவே என் மனச்சாட்சி சொல்லுகிறது. அவளை ஒரு முறை சந்தித்தாவது திருப்திப்படுத்தலாமென்ருல் என் சமூகத்திற்காக நான் செய்யப் புகுந்திருக்கும் லட்சிய வாழ்க்கையே சிதைந்துவிடும். நான் தாசியின் மகள் என்பதை மறைப்பதற்கு எவ்வளவு சாமர்த்தியம் காட்ட வேண்டியிருக்கிறது. எத்தனை ஆவல்களை அடக்கவேண்டி

வருகிறது! ஆசாபாசங்களையெல்லாம் களையவேண்டியிருக்கிறது. எதையோ திருடியவளைப்போல் நான் சாதாரண ஜனங்களுக்குக்கூட பயப்படவேண்டியிருக்கிறது.

கொஞ்ச நாளாக இன்னொரு கவலையும் எனக்கு ஏற்பட்டிருக்கிறது. தாசிப் பரம்பரைக்கே தனி உரிமையான கொடுநோயும் என் உடலைப் பீடித்திருப்பதாகத் தெரிகிறது. எனக்குப் புதிதாக வந்துள்ள வியாதியின் குணத்தையெல்லாம் ஒரு கிழவியிடம் சொன்னேன். அவள் ரொம்ப அனுபவசாலிபோல் தெரிகிறது. இது பரம்பரையாக வரும் தொத்து வியாதியென்று உடனே சொல்லி விட்டாள். இந்த வியாதி உடலிலேயே ஒட்டியிருந்து, உடலுழைப்பு மனக்கவலை இவை அதிகமாகையில் தொந்தரவு கொடுக்குமென்று சொன்னாள். இதைப்பற்றி வேறு ஒருவரிடமும் தெரிவிப்பதில்லை என்று நான் நிச்சயித்து விட்டேன். என் கணவரிடம்கூட நான் இதைப்பற்றித் தெரிவிக்கப்போவதில்லை. இவ்வியாதி என்னோடு நிற்க வேண்டுமேயென்று நான் கடவுளை அடிக்கடி வேண்டிக் கொள்கிறேன். குழந்தை மோகனாவிற்கு வாழ்க்கையில் என்னைப்போல இத்தகைய மன உளைச்சல் இராதல்லவா! ரூபத்தில் மோகனா என் தாய் சாரதாம்பாளைப் போலவே அழகாக இருக்கிறாள். ஆகவே அவளைப் போன்று வெகு காலம் உயிரோடிருந்து என் லட்சியத்தைப் பூர்த்தி செய்வாள் என்று நம்பிக்கை இருக்கிறது. நம்பிக்கைதான் நல் வாழ்வுக்கு ஊன்றுகோல்! இந்த ஊன்றுகோலைக் கொண்டு தான் நான் சமுதாயத்தில் ஒவ்வொரு படியாக உயர வந்து கொண்டிருக்கிறேன். எல்லாம் என் லட்சியத்திற்கு அனுகூலமாகவே அமைந்து வருகிறது. மனதிற்கேற்ற கணவன், குணசாலியான மகன், தங்க விக்ரஹம் போன்ற பெண் குழந்தை, அன்போடுகூடிய தாம்பத்ய வாழ்க்கை! இது தானே நான் விரும்பியது. விரும்பியதை அடைந்து விட்டேன். இனி எனக்கு என்ன குறை இருக்கிறது. என் சமூகத்திற்கு நான் ஒரு லட்சிய விளக்கை ஏற்றி

வைத்துவிட்டேன். இருட்குகையில் போதைகொண் டிருக்கும் என் சமூகம் நான் ஏற்றிவைத்த விளக்கின் பிர காசத்தை நோக்கி முன்னேறும் காலம் வந்தே தீரும்.



## 13 வடிவேலு

சுந்தரிக்குத்தான் எவ்வளவு இளகிய மனசு. பணக் கஷ்டத்தைப்பற்றி நான் சொன்னவுடனே, ஒட்டியா யாணத்தைக் கொண்டுவந்து கொடுத்து விற்கச் சொல் கிறாளே! என் யோக்யதையில் எவ்வளவு நம்பிக்கை அவளுக்கு! நான் அனுவசியமாகச் செலவழித்துக் கடன் படவில்லையென்று சொல்கிறாளே! சுந்தரியைப்போல் ஒரு பெண் இருக்கமுடியுமா என்றே எனக்குச் சந்தேகமாயிருக் கிறது. ஒட்டியாணத்தை விற்றாலொழிய சாப்பிடமாட் டேனென்று அவள் சொன்னவுடன் எனக்குக் கண்ணீர் வந்துவிட்டது. அது ஆனந்தக் கண்ணீராகத் தானிருக்க வேண்டும்.

குழந்தையின் பிறந்தநாளும் ரொம்பச்சிறப்பாகத்தான் நடந்தேறியது. ஒட்டியாணம்விற்ற பணத்தில் கடனடைத் ததுபோகப் பாக்கி நின்றதை இந்த விசேஷத்திற்குச் செல வழித்துவிட்டேன். இனி? பழையபடி கஷ்டம்தான். தோட்டத்தோடு கஷ்டப்படுவதைத்தவிர வேறு என்ன வழி இருக்கிறது! முருகனுடைய படிப்பும் தோட்ட வேலையினால் கெட்டுவருகிறது. பத்து வயதிற்குள்ளாகவே ஆறு வகுப்புப் படித்துவிட்டான். தமிழ் எழுத வாசிக்க நன்றாகத் தெரிந்துகொண்டான். பூ வியாபாரத்திற்கு வேண்டிய கணக்கெல்லாம் அவனுக்குத் தெரியும். ஒன்று செய்தாலென்ன! எனக்கோ தோட்டவேலைக்கு உதவி யாக ஒரு கையாள் வேண்டியிருக்கிறது. பூவைக் கடைக் குக் கொண்டுபோவதற்கும், வேறு ஒரு ஆளை வைத்துச் சம்பளம் கொடுக்கவேண்டியிருக்கிறது. அந்த ஆளும் சரி யான வேளைக்கு வருவதில்லை. இந்தத் தொந்தரவுகளெல் லாம் இருக்கும்போது முருகனைத் தோட்டவேலையிலேயே பழக்கிவிட்டால் என்ன என்று தோன்றுகிறது. மேல்

படிப்பிற்கோ நம்மிடம் ஐவேசு இல்லை. அவன் அறை குறைப் படிப்போடு ஒரு தொழிலும் தெரியாமல் திண்டாடி நிற்பதைவிட என் தொழிலில் அவனை அமர்த்திவிடுவது நல்லதுதானே!

இந்த யோசனை நாளாக நாளாக வலுத்துக்கொண்டேவந்தது. சுந்தரியிடம் சொன்னேன். முருகனுடைய படிப்பை நிறுத்த அவளுக்குச் சம்மதமேயில்லை. ஆனாலும் நான் சொல்வதற்குத் தடை சொல்வானேன் என்று சம்மதித்துவிட்டாள். தோட்டவேலையில் எனக்கு ஒத்தாசை செய்வதென்றால் முருகனுக்கு எவ்வளவோ சந்தோஷம்தான். புத்திசாலியல்லவா! வீட்டு நிலைமையை நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறான். அதனால்தான் இந்த யோசனையைச் சொன்னவுடனேயே சரியென்று ஒத்துக்கொண்டு பள்ளிப் படிப்பை விட்டுவிட்டான்.

சுந்தரி வீட்டுச்செலவை இன்னும் சுருக்கிக்கொண்டாள். நானும் முருகனும் தோட்டத்தில் இயன்றவரை பிரயாசைப்பட்டு உழைத்தோம். இதனால் முன்போல அவ்வளவு பணக்கஷ்டம் தெரியவில்லை. நாங்கள் தோட்டத்திலும் கடைகளிலும் போய் எவ்வளவுதான் சிரமப்பட்டாலும் வீட்டுக்கு வந்ததும் ஆனந்தமாகவே இருந்து வருகிறோம். பணம் சம்பாதிக்கவேண்டுமென்பதில் என்னை விட முருகனுக்கு அதிக அக்கரை உண்டாய்விட்டது. பக்கத்துத் தோட்டக்காரர்களுடைய பூவையும் கடைகளில் கொண்டுசேர்த்து ஏதோ சம்பளம் வாங்கிக்கொண்டு வந்து கொடுக்கிறான்.

படிப்பிலும், விளையாட்டிலும் உற்சாகமாக ஈடுபடவேண்டிய வயதில் முருகன் கஷ்டப்பட்டுச் சம்பாத்தியம் பண்ண ஆரம்பித்துவிட்டான். இதைப்பற்றியெல்லாம் கவலைப்படக்கூட எனக்கு நேரமில்லை. சுந்தரி அடிக்கடி சொல்வதுபோல, கவலைப்படும் நேரத்தைக் காரிய முயற்சியில் செலவழித்தால் எவ்வளவோ பலனுண்டு. ஆகையால்

நான் கவலைப்படுவதையே விட்டு வருகிறேன். கவலைப்படுவதனால் காலமும் மனவலியும் வீணாவதைத் தவிர வேறு பலனொன்றும் இல்லை.

சுந்தரி எப்பொழுதும் சந்தோஷமாகவே இருக்கிறாள். தன் தாயாரைப்பற்றி அவள் என்னிடம் இதுவரை ஒன்றுமே சொல்லவில்லை. அவளுக்குத் தன் தாயாரைப் பார்க்கவேண்டுமென்றுகூட ஆசையில்லாமல் போய்விட்டது. ஆனால் சாரதாம்பாள் இப்படி இவளை மறந்திருப்பாளா! அவளுக்குத் தன் மகள்தான் உயிர்! சுந்தரியின் இருப்பிடம் அவளுக்கு எங்கே தெரியப்போகிறது! எனக்குக்கூட ஒவ்வொரு சமயம் சபலம் தட்டுகிறது ஒரு முறை ஊருக்குப்போய் எல்லோரையும் பார்த்துவிட்டு வர வேண்டுமென்று. இந்த ஆசை எப்படியெல்லாமோ சங்கடத்தில் கொண்டு மாட்டிவைத்துவிடக்கூடும். நாங்கள் எப்பொழுதுமே அவர்களைப் பாராமல் இருந்து விடுவோமோ என்னவோ! நாங்கள் நாகர் கோவிலுக்கு வந்து பத்து வருஷங்கள் ஆகப்போகிறது. இவ்வளவு காலத்திற்குள் அங்கு, நாகப்பட்டிணத்தில் என்னென்ன மாறுதல்கள் நடந்திருக்கிறதோ தெரியவில்லை. சுந்தரியின் தாய் உயிரோடிருக்கிறாளோ என்னவோ. அதுகூடத் தெரியவில்லை. அவளுக்குப் பேத்தி பிறந்திருப்பதைக் கண்டால் மிகவும் சந்தோஷப்படுவாள். பழைய கோபமெல்லாம்கூட இதற்குள் ஆறிப்போயிருக்கலாம். என் அக்காளுக்கு என்னைப் பற்றிய சேதியே தெரிந்திருக்காது. அவர்களுக்கு ஒரு கடிதமாவது போட்டுவைக்கலாமென்றால் அதிலிருந்து அவர்கள் துப்புத்தெரிந்துகொண்டு இங்கு வந்து சுந்தரியின் லட்சிய வாழ்க்கையைக் கெடுத்துவிடலாம். ஆகவே அந்த யோசனையையும் விட்டுவிடவேண்டியதாயிற்று.

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக என்று சொல்வார்களே அதுபோலக் குழந்தை மோகனாவும் தாயின் அன்பினால் வாட்டசாட்டமாக வளர்ந்துவருகிறது.

சுந்தரியைப்போலவே அதுவும் அறிவாளியாக இருக்கு மென்று தோன்றுகிறது. யாரோ சொன்னார்கள் குழந்தை பிறந்த கிரகத்தினால் எங்கள் குடும்பத்தில் இத்தனை கஷ்ட நஷ்டங்கள் வந்ததென்று. நான் இந்தக் குருட்டு ஜோசியத்தையெல்லாம் நம்புவதேயில்லை. குழந்தை என்ன செய்யும். அது பிறந்த நேரம் நல்லதாக இல்லாவிட்டால் மற்றவர்களுக்கா சங்கடம் ஏற்படும்? குழந்தை பிறந்த வேளைக்கும் குடும்பக் கஷ்டத்திற்கும் என்ன சம்பந்தமென்றே தெரியவில்லை. ஏதோ மனசை நிம்மதிப்படுத்துவதற்காகச் சொல்லிக்கொள்ளும் வார்த்தைதான் இது. இப்பொழுது கஷ்டங்கள் எல்லாம் நிவர்த்தியாய்விட்டதே! குருட்டு நம்பிக்கைக்காரர்கள் இதற்கு என்ன காரணம் சொல்வார்களோ தெரியவில்லை !

சுந்தரி என்னைவிட மனோதைரியமுள்ளவள் என்றுதான் சொல்லவேண்டும். நான் பணக் கஷ்டத்தினால் மனதைப் புண்ணாக்கிக்கொண்டேனே அப்பொழுது சுந்தரி எவ்வளவு தைர்யமாக என்னைத் தேற்றி ஆறுதல் கூறினாள். கஷ்டங்களைச் சகிக்கும் தன்மை இருந்தால் தான் மனிதன் இந்த உலகில் சுகமாக வாழமுடியும் என்பதை அவள் எனக்கு எடுத்துக் காட்டினாள்.

சில மாதங்களாக சுந்தரிக்கு உடம்பு சரியாக இல்லையென்றே எனக்குத் தோன்றுகிறது. தூங்கும்போதுகூட ஏதோ குடல்வலி உள்ளவள் போல முனகுகிறாள். முன்னைப்போல அவளால் சுறுசுறுப்பாக வேலை செய்ய முடியவில்லை. இதையெல்லாம் நான் கவனித்துக்கொண்டு தான் வருகிறேன். ஆனாலும் அவளாக வாய்திறந்து தனக்கு உடம்பு சரியில்லை என்று ஒரு நாளாவது சொன்னதில்லை. சொன்னால் நான் வருத்தப்படுவேனல்லவா ! அதற்காகத்தான் நோயைப் பொறுத்துக்கொண்டு பேசாமல் மௌனம் சாதிக்கிறாள். நானாகக் கேட்டாலும் உடம்புக்கு ஒன்றுமில்லையென்றுதான் சொல்லுவாள். நோய் வந்தால் ஆரம்பத்திலேயே கவனித்தாலல்லவா லகுவாக

இருக்கும். குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கும் அவள், தன் உடம்பையே கவனிக்காம லிருந்தால் குழந்தைகள் என்னவாகும்!

முருகன் பாடுதான் ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது. தோட்டத்தில் வேலை, அங்கிருந்து கடைகளுக்கு அலேச்சல். அங்கிருந்து வீட்டுக்கு வந்தால் தாயாருக்கு உதவிசெய்வது. இப்படியாகச் சிறுவயதிலேயே, உட்காரக்கூட நேரமில் லாமல் உழைக்கிறுன். கடவுள்தான் அவனுக்கு நல் வாழ்க்கையைக் கொடுக்க வேண்டும். தோட்டத்திற்குக் கொஞ்சம் பணச் செலவு செய்தால் வருமானமும் அதிக மாகும். சுந்தரியிடம் இதைப்பற்றிச் சொன்ஞல் இன் ஞும் ஏதாவது நகையைக் கழட்டிக் கொடுத்து விற்கச் சொல்லிவிடுவாள். ஆகையால் தோட்டத்திலிருந்து இப் பொழுது வரும் வருமானத்திலிருந்தே கொஞ்சம் மீதம் வைத்துச் சேர்த்து அதற்குச் செலவிட வேண்டும். என் தோட்டத்துப் புஷ்பங்களுக்கு நல்ல கிராக்கி ஏற்பட்டிருக் கிறது. அதோடு முருகனுடைய பூவேலைகளேயும் ஜனங் கள் அதிகமாக விரும்புகிருர்கள். முருகன் புஷ்பங்களைச் சரம் கட்டுவது மாலை தொடுப்பது போன்ற தொழில்களை நன்ருகக் கற்றுக்கொண்டுவிட்டான். கடைக்காரர்கள் இவன்மீது ரொம்பப் பிரியமாக இருக்கிருர்கள். எல்லோ ருடனும் சுமுகமாகப் பழகி எனக்கு நல்ல பேர் வாங்கிக் கொடுக்கிருன். நான் கடைத் தெருவுக்குப் போனுல் "உங்கள் மகனை வரச் சொல்லுங்கள். அருமையாகப் பூத்தொடுக்கிருனே" என்றுதான் சொல்லுகிருர்கள். இந்தச் சமயத்தில் பழையபடி பூக்கடை வைத்து அவனைக்கொண்டு வியாபாரம் நடத்தச் சொல்லலாமா என்றுகூட எனக்கு ஆசை தோன்றுகிறது. காலம் வரட்டும். பார்த்துக்கொள்ளலாம். ஜோசியர்கூடச் சொன் ஞர். அவனுக்கு இனிச் சகடயோகம்தான் என்று.



எனக்கு என்னவோ பத்தாவது வகுப்பு வரையிலாவது படிக்கவேண்டுமென்று ஆவல். ஆனால் அப்பாவின் பணக் கஷ்டத்தைக் கண்டால் என் ஆவல் குறைந்து விடுகிறது. கவலையினாலேயே அவர் மிகவும் உடல் தளர்ந்து போனார். தன் உடல் தளர்ச்சியைக்கூடக் கவனிக்காமல் தோட்டத்தில் கடுமையாக வேலை செய்கிறார். இதோடு தாயாரும் முன்னைப்போல வீட்டு வேலைகளைக் கவனிக்க முடியாமல் கஷ்டப்படுகிறாள். வீட்டில் தாயும் தகப்பனும் இத்தனை கஷ்டப்படும்போது நான்மட்டிலும் வேளாவேளைக்குச் சாப்பிட்டுவிட்டுப் பள்ளிக்கூடம் போய்வந்துகொண்டிருக்கலாமா? படிப்புச் செலவுக்குப் பணம் கொடுக்க என் தகப்பனாரால் முடியவில்லை. அதனாலேயே ஆறு வகுப்பு வரை படித்தது போதுமென்று எனக்குத் தோன்றியது. இந்தப் படிப்பை வைத்துக்கொண்டு வசதி கிடைக்கும் போது வீட்டில் வைத்தே நானாக அறிவை அபிவிருத்தி செய்துகொள்ளலாமே! நான் இம்மாதிரி யோசித்துக் கொண்டிருந்த சமயத்தில் என் தகப்பனாரே என்னிடம் பள்ளிக்கூடத்தை விட்டுவிட்டுத் தோட்டவேலையைக் கவனிக்கும்படி சொன்னார். நானும் சரியென்று உடனே சம்மதித்து விட்டேன். தோட்டவேலை செய்வது எனக்கு ஒன்றும் கஷ்டமாகவே தெரியவில்லை. தகப்பனார் மண் வெட்டியெடுத்து வெட்டுகிறார். நான் பாத்தி பிடிக்கிறேன். அவர் தண்ணீர் இறைத்து விடுகிறார். நான் அதை ஒவ்வொரு பாத்திக்கும் பாய்ச்சுகிறேன். இரண்டு பேருமாகச் சேர்ந்து செடியிலுள்ள புஷ்பங்களைப் பறிக்கிறோம். நான் புஷ்பங்களையெல்லாம் எடுத்துக்கொண்டுபோய்க் கடைகளில் போட்டுவிட்டுப் பணம் வாங்கி வருகிறேன். கடைக்காரர்கள் ரொம்ப அவசரமாகப் பூமாலைகள் தொடுக்கச்

சொன்னல் தொடுத்துக் கொடுக்கிறேன். அவர்களும் அதற்கு ஏதாவது கூலி கொடுக்கிருர்கள். நான் சுறுசுறுப் பாகப் புஷ்பம் கட்டுகிறேன் என்று அவர்கள் சொல்கிருர் கள். சிறுபையன் பெரியவர்களைவிடச் சுறுசுறுப்பாகத் தானே இருப்பான். கடைக்காரர்களைச் சந்தோஷப்படுத் திஞல்தானே அவர்கள் என்னிடம் பிரியமாக இருப் பார்கள்.

அவர்கள் சொல்வதுபோலச் செய்து அவர்களிடம் நான் கொண்டுபோகும் புஷ்பத்தின் கிரையத்தையும் என் கூலியையும் பெற்றுக்கொண்டு நேராக வீட்டுக்கு வந்தால் தாயார் சாதம் எடுத்துவைத்துக்கொண்டு எனக்காகக் காத் திருப்பாள். நான் சாப்பிட்ட பிறகுதான் அம்மா சாப்பிடு வாள். சில நாட்களில் நான் வர நேரமாகிவிடும். “ஏனம்மா நீ இன்னும் சாப்பிடாமல் இருக்கிருய்?” என்று கேட் டால் “பிள்ளை பட்டினியாக இருந்து வேலை பார்த்துவிட்டு வருகிறது. நான் வீட்டிலேயே இருந்துகொண்டு அதற்குள் சாப்பிடவேண்டுமாக்கும்!” என்று கேட்பாள். இதற் காகவே நான் கூடியவரைக்கும் சீக்கிரமாகவே வீடு திரும்பி விடுவேன்.

சாப்பிட்டானபிறகு தங்கையோடு விளையாடிக்கொண் டிருக்கவேண்டியதுதானே! சில வேளைகளில் வீட்டுக்குத் தண்ணீர் எடுத்து விடுவேன். வீட்டுச் சாமான்கள் வாங்கக் கடைக்குப் போய் வருவேன். இப்படி ஒன்றும் ஜோலி இல்லையானல் அடுத்த வீட்டு மாமாவிடம் ஏதாவது புஸ் தகம் வாங்கிப் படித்துக்கொண்டிருப்பேன். அடுத்த வீட்டு மாமாவுக்கும் அத்தைக்கும் என்மேல் ரொம்பப் பிரியம். ஒரு தின்பண்டம் செய்தால் எனக்கென்று ஒரு தனிப்பங்கு எடுத்துவைத்து விடுவார்கள். “முருகனுக்குக் கல்யாணம் பண்ணிக்கொடுக்க எங்களிடம் ஒரு பெண் இல்லையே” என்றுகூட அடிக்கடி கேலியாகச் சொல்வார் கள். எனக்குத் தெரியாத விஷயங்களையெல்லாம் அடுத்த

வீட்டு மாமாவிடம்தான் கேட்பேன். நான் எது கேட்டா லும் அவர் அதை விளக்கி விவரமாகச் சொல்வார். புஷ்பச் செடிகளை எப்படி வளர்த்தால் நல்ல பலன் கிடைக்கும், என்னென்ன உரம்போடவேண்டும்; எந்தெந்தக் காலத் தில் என்னென்ன புஷ்பச் செடிகளை நடலாம் என்பதைப் பற்றியெல்லாம் அவர் பல புஸ்தகங்களைப் பார்த்து எனக்கு எடுத்துச் சொல்வார். அவர் சொல்லியபடியெல்லாம் நான் தோட்டத்தில் பரீட்சை செய்து பார்த்தேன். அதன் படி செடிகளும் நல்ல பலனளித்தன.

கருத்தைச் செலுத்திக் கற்பதென்றால் எதையும் எளி தாகத் தெரிந்துகொள்ளலாமென்றுதான் எனக்குத் தோன் றுகிறது. பூக்கடைக்காரர்கள் கலியாண வீடுகளுக்கோ கோவில்களுக்கோ, பூ அலங்காரம் செய்யப் போகும்போது என்னையும் உதவிக்குக் கூட்டிக்கொண்டு போவார்கள். அவர்கள் பூ அலங்கார வேலை செய்கையில், நான் அவர் களுக்குப் பூமாலைகளை எடுத்துக் கொடுத்துக்கொண்டே, அவர்கள் செய்யும் வேலை நுணுக்கங்களைக் கூர்மையாகக் கவனித்து வருவேன்.

ஒரு நாள் கோவில் சப்பரம் ஜோடிப்பதற்காக ஒரு கடைக்காரருடன் போயிருந்தேன். அவர் பாதி அலங் காரம் முடித்துவிட்டுச் சாப்பிடப் போயிருந்தார். அவர் திரும்ப வருவதற்குள்ளாக மீதி அலங்காரத்தை நானே முடித்துவைத்தேன். அவர் வந்து பார்த்தவுடன் ஆச்சரிய மடைந்தார். "இவ்வளவு வேலைத் திறமையை வைத்துக் கொண்டா இதுவரை என்னிடம் சொல்லாமலிருந்திருக் கிறாய்?" என்று சிரித்துக்கொண்டே கேட்டார். அன்று தான் முதல் முதலாக அம்மாதிரி நான் பூ அலங்கார வேலை யைச் செய்ய ஆரம்பித்தேன் என்று சொன்னால் அவர் நம்பவே மாட்டேனென்கிறார்.

அது முதல் அநேக விசேஷ வீடுகளில் நானும் கடைக் காரர்களுடன் சேர்ந்து பூ அலங்காரம் செய்து வருகிறேன்.

கிடைக்கிற லாபத்தில் அவர்கள் எனக்கும் ஏதாவது பங்கு கொடுப்பார்கள். இந்த விஷயத்தையெல்லாம் என் தகப்பனாரிடம் சொன்னால் "உனக்கா இவ்வளவு சம்பளம் கொடுத்தார்கள்?" என்று அவர் ஆச்சரியப்படுகிறார். கூடிய சீக்கிரம் சொந்தமாகவே ஒரு புஷ்பக்கடை துவக்க வேண்டுமென்று அப்பா சொல்லிக் கொண்டிருக்கிறார். இந்தச் சமயத்தில் புஷ்ப வியாபாரத்தில் நல்ல லாபம் வருமென்று தோன்றுகிறது. ஆனால் கையில் கொஞ்சம் பணம் சேர்த்துக்கொண்டால் தானே கடை வைக்க முடியும்!



## 15 சாரதாம்பாள்

பொழுது விடிந்தால் சுந்தரியின் கவலை. பொழுதடைந்தாலும் சுந்தரியைப் பற்றிய கவலைதான். அந்தப் பேதைப் பெண்ணுக்கு மனசைக் கல்லாகப் படைத்து விட்டாரா கடவுள்? இன்ன இடத்தில் இருக்கிறேன் என்று ஒரு கடுதாசு போடக் கூடாதா! நான் அவ்வளவுக்குப் பாக்கியம் செய்யவில்லையா? பெற்று வளர்த்த பாவத்திற்கு எனக்கு இந்த ஆறுதலையாவது கொடுக்கக் கூடாதா? இத்தனை வருஷங்கள் ஆகிவிட்டதே! ஒருமுறையாவது என்னைவந்து பார்த்துவிட்டுப் போகக்கூடாதா? சுந்தரி, நீ எங்கு இருக்கிறுயோ?

வடிவேலு—அவன் தலையில் இடிவிழ—எப்படியோ என் பெண்ணை மயக்கிக்கொண்டுபோய் என்னை இப்படித் திண்டாடித்தெருவில் நின்று புலம்பும்படி வைத்துவிட்டானே! என் பெண்ணை எப்படி எப்படி வைத்திருக்கிறுனே தெரியவில்லை. எப்படி வைத்திருக்கப் போகிறுன்! அவளைத் தெருவில் அலைய விட்டுவிட்டு எங்கேயாவது ஓடிப்போயிருப்பான். சுந்தரி எந்தத் தெருவில் கண்ணீரும் கம்பலையுமாக நிற்கிறுளோ! பவிசோடு இருந்து அனுபவிப்பதற்கு அதிர்ஷ்டம் இருந்தும், இந்தப் பெண் இப்படிப் போய்ச் சீரழியவேண்டுமா? எல்லாம் அதனதன் விதிப்படி நடக்கும் என்று அவளைப்பற்றி நான் கவலைப்படாமல் இருக்க முடிகிறதா? பெற்றமனம் பித்து; பிள்ளை மனம் கல்லு என்பார்களே அது ரொம்பச் சரியாகத்தானிருக்கிறது. சுந்தரிக்கும் ஒரு பிள்ளை பிறந்து அது தாயைவிட்டுப் பிரிந்து ஓடிப்போனுல் அல்லவா அவளுக்கு எனக்கிருப்பது போன்ற மனக்கஷ்டம் தெரியப் போகிறது.

இந்த மாதிரி மனதுக்குள்ளாகவே நினைத்துக்கொண்டிருந்ததுபோய், என்னையறியாமலே வாய்விட்டுப் பிதற்றவும் ஆரம்பித்து விட்டேன். எனக்கே சந்தேகமாக இருந்தது, எனக்கு ஒருவேளை பைத்தியம் பிடித்துவிடுமோ என்று. கடவுளே! அந்த நிலைமை ஏற்பட்டு விடாமல் என்னைக் காப்பாற்ற வேண்டும். சுந்தரியைப் பற்றிக் கவலைப்படவேகூடாது; கோவில் குளங்களுக்குப் போய்த் தரிசனம் செய்து கொண்டேயிருக்க வேண்டும் என்று எத்தனையோ திட்டங்களெல்லாம் போட்டுப் பார்க்கிறேன். ஆனால் முடிகிறதா? அவளுடைய நினைப்புத்தான் முன்னுக்கு வந்து நிற்கிறது. அவளுடைய சேலை துணிமணிகளைப் பார்க்கும்போதெல்லாம் அவள் நினைவு. நிலைக் கண்ணாடிக்குள் இன்னும் அவள் முகம் தெரிவது போலவே எனக்கு மனப்பிரமை ஏற்படுகிறது. சடங்கு கழித்தபோது எடுத்த அவளுடைய போட்டோவைப் ப்ார்த்தால் என் உடம்பெல்லாம் புல்லரிக்கிறது. எவ்வளவு வசீகரமான முகம். லக்ஷலக்ஷமாகப் பணம் சம்பாதிக்கக்கூடிய அழகைக் கொடுத்த கடவுள் அவளுக்கு அணுவளவு மூளையை வைக்க மறந்து விட்டானே. இல்லை. சுந்தரி என்ன அறிவில்லாதவளா! அறிவில்லாத மூடமாக இருந்தால் நாட்டியத்தையும் சங்கீதத்தையும் அவள் அத்தனை லகுவாகக் கற்றுக்கொள்ள முடியுமா! எல்லா விதத்திலும் புத்திசாலிதான். ஆனால் இந்த விஷயத்தில் மட்டிலும் ஏனோ அவள் புத்தி இப்படிப் பாழாய்ப் போய் விட்டது. அவள் புத்தி அப்படிப் போயிருக்காது. அந்தப்பாவி வடிவேலுதான் ஏதோ பொடி போட்டு மயக்கி என் பெண்ணை அநியாயமாகக் கெடுத்துவிட்டான்.

இந்த நிமிஷத்தில் என் சுந்தரி வந்தாளானால் அவள் செய்த குற்றத்தையெல்லாம் நான் மன்னித்து அவள் இஷ்டப்படி இங்கேயே இருக்கும்படி சொல்வேனே. எத்தனை இடங்களுக்கு ஆள் அனுப்பி வைத்தேன். எத்தனை கோவில்களுக்கு நேர்த்திக்கடன் செய்தேன். எத்தனை

குறிகாரர்களைக் கேட்டுப் பார்த்தேன். ஒரு துப்பும் துலங்க வில்லையே! என் வாழ் நாள் முழுதும் இப்படியே புலம் பிப் புலம்பிச் சாகவேண்டியதுதானா! என் உடம்பும் ரொம்ப இளைத்துக்கொண்டே வருகிறது. சாப்பாடுகூட வேண்டியிருக்கவில்லை. தூக்கம்! நன்றாகத்தூங்கி எத் தனையோ வருஷமாயிற்று. கனவில் சுந்தரி என்னென்ன நிலைமையிலெல்லாம் காட்சியளிக்கிறாள்.

ஒரு தடவை சுந்தரி எங்கோ ஒரு கடைமுன்னால் பிச்சையெடுத்துக் கொண்டிருந்தாள். இன்னொரு சமயம் வடிவேலு அவளைக் கத்தியால் குத்தப்போகிறான். சுந்தரி அலறிக்கொண்டு என்னிடம் ஓடிவருகிறாள். இப்படியாக எத்தனையோ கனவுகள். சுந்தரியைக் கனவிலாவது அடிக் கடி கண்டு மகிழ்வோம் என்று தூங்க ஆரம்பித்தால் பாவி தூக்கம் லேசில் வரமாட்டேனென்கிறது. தனியாகவே இருந்து இருந்து இந்த வீடே பாழடைந்து விட்டது போலத்தோன்றுகிறது. நாட்டியம் சங்கீதம் இதைப்பற் றிக்கூட எனக்கு இப்பொழுது சிந்தனை இல்லாமல் போய் விட்டது. என்னிடமிருக்கும் கலையை யாருக்காவது சொல்லிவைத்து விடவேண்டுமென்று ஆத்திரமாக இருக் கிறது. குஞ்சரம் கூடச்சொன்னாள் இரண்டு குட்டிக ளுக்கு நாட்டியம் சொல்லிக் கொடுத்து வந்தால் மனசு கொஞ்சம் நிம்மதியடையும் என்று. மனதில் தாங்கமுடி யாத கவலை கிடந்து அழுத்திக்கொண்டிருக்கையில் நான் எப்படி நாட்டியம் கற்றுக்கொடுக்க முடியும்! என் உடம்பு தளர்ந்து தள்ளாடுகிறது. மனது உடம்பைவிட அதிகமாகத் தள்ளாடுகிறது. ஒருவழியும் தோன்றவில்லை.

அன்று ராமாயணப் பிரசங்கம் கேட்கலாமென்று போயிருந்தேன். ராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போகும் கட்டத்தை பாகவதர் ரொம்ப அழகாக வர்ணிக்க ஆரம்பித்துவிட்டார். என் மனம் அதிலிருந்து என் னென்னவெல்லாமோ கற்பனைப் பின்னல்களைப் போட

ஆரம்பித்து விட்டது. என் சுந்தரியை வடிவேலு இப்படித்தானே என்னிடமிருந்து அபகரித்துக்கொண்டுபோய் விட்டான். இராமனுக்கு மனைவியைப் பிரிந்த துன்பம் ஏற்பட்டது. எனக்கு மகளைப் பிரிந்த துன்பம் ஏற்பட்டிருக்கிறது. பிரிவு என்ற துன்பம் இராமனுக்கும் எனக்கும் ஒன்றுதானே! இதற்குமேல் என்னால் ராமாயண வியாக்யானத்தைக் கேட்டுக்கொண்டிருக்க முடியவில்லை. எழுந்து வந்து விட்டேன்.

ஸ்ரீராமபிரான் எவ்வளவோ கஷ்டப்பட்டுக் கடைசியாக சீதையை மீட்டுக் கொண்டு வந்தார். ஆனால் நானோ பெண்! ஆதரவற்ற கிழவி! எனக்குச் சுந்தரியைப்பற்றிய தகவல் ஒன்றுமே கிடைக்கவில்லையே. என்னதான் செய்வேன்.

ஆயிரக்கணக்காகச் சம்பாதித்தேன். எல்லோரும் மதிக்கும்படியாக இன்பவாழ்வு வாழ்ந்தேன். என் வாழ் நாள் முழுவதும் குறைவில்லாத வாழ்வு வாழ்ந்து விடக் கூடாது என்பதற்காகத்தானோ என்னவோ இப்படி ஒரு பெண்ணைக் கொடுத்து என்னைத் திண்டாடும்படி வைத்திருக்கிறார் கடவுள்.

தாய், பிள்ளை, உற்றார் உறவினர், வீடு, சொத்து எல்லாம் மாயை என்றுதானே நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். இந்த மாயை என்னை எவ்வளவு பலமாகப் பிடித்துக் கொண்டு விட்டது. இந்தப் பாச வலையை உதறித்தள்ளி விட்டு இறைவனடி ஒன்றையே தியானித்துக்கொண்டிருக்கலாம் என்றால் மனத்துணிவு வரமாட்டேனென்கிறதே. ஆசாபாசங்கள் அறிவுக்கண்ணைத் திரையிட்டு விடுகிறது. நன்றாகத் தெரிகிறது நல்ல பாதை! ஆனால் இருள் சூழ்ந்த வழியில் தட்டுத் தடுமாறி நிற்கத்தான் மனம் விரும்புகிறது. இது என்ன தப்பான ஆசை! வயது முதிர முதிர மனித பாசம் விலகும் என்பார்கள். என் விஷயத்தில் மகளின் பாசம் அதிகரித்துக்கொண்டல்லவா

இருக்கிறது. சுந்தரி இதுவரை என்னேடு இருந்திருந் தால் நான் மன நிம்மதியடைந்து இந்த உலக பாசத்தை ஓரளவு நீக்கியிருக்கலாம். பிரிவினுல் ஆசாபாசம் பல மடங்கு பெருகி வளர்கிறது. வீடு வாசல் சொத்து எல் லாவற்றையும் விட்டுவிட்டுப் போய்விடலாமா என்று சில சமயம் தோன்றினுலும், சுந்தரி ஒரு வேளை திரும்பி வர லாம் என்ற நம்பிக்கை வந்து மோதுகிறது. அன்று அந்த வைத்தியர் சொல்லியபடி எங்காவது யாத்திரை போய் விட்டு வருவதுதான் நல்லது. நாலைந்து மாதம் பிர யாணம் பண்ணிவிட்டு வந்தாலாவது மனதுக்கு ஆறுதல் கிடைக்காதா? பிரயாணம் புறப்படுவதென்ருல் லகுவாகவா இருக்கிறது! வீடு, நிலங்கள், மாடு, கன்று எல்லாவற்றை யும் யாரிடமாவது பொறுப்பாக ஒப்படைக்க வேண்டும். இந்த வயதில் தனியாகப் பிரயாணம் போவதென்ருல் கஷ்டமாகத்தானிருக்கும். கூடத் துணைக்கு யாரையேனும் அழைத்துச்செல்லவேண்டும். போகிற இடங்களில் தங்கு வதற்கு எல்லா வசதியும் கிடைக்குமோ என்னவோ! இதெல்லாவற்றிற்கும் ஏகப்பட்ட பணம் கையிலிருக்க வேண்டும்.

பணம் செலவழிந்தால்தான் என்ன! நான் தேடிய பணத்தைத்தானே செலவழிக்கப் போகிறேன். இப் படியே இருந்து சுந்தரி சுந்தரியென்று வீணுகக் கதறி உயிரை விடுவதைவிடப் பல ஸ்தலங்களைத் தரிசித்துவிட்டு வருவது நல்லதுதானே! எல்லாவித சௌகர்யங்களையும் செய்துகொண்டு ஸ்தல யாத்திரை போய் வரவேண் டியதுதான்.



# 16 சுந்தரி

இந்தப் பரம்பரை வியாதி என்னை இவ்வளவு கொடுமை பண்ணும் என்று நான் நினைக்கவேயில்லை. படுத்த படுக்கையாய் விட்டேன். வெளிப்பார்வைக்கு உடம்பில் வியாதி ஒன்றும் இல்லாததுபோலவே சமாளித்துக்கொண்டு வந்தேன். என் தேக நிலைமை மிகவும் மோசமாகி வருவதைக் கண்டு என் கணவரே டாக்டரை அழைத்துவந்தார். அதனால் எவ்வளவோ பணச்செலவு. என் கணவரின் வருமானத்தில் இதற்கெல்லாம் பணம் ஏது? டாக்டர் சொன்ன மருந்தை வாங்கிச் சாப்பிட வேண்டுமென்று அவர் வற்புறுத்தியதனால் மருந்துச்செலவுக்காக என் கைக்கொலுசைக் கழட்டிக் கொடுத்தேன். கடன் வாங்கிக்கொள்ளலாமென்றுதான் அவர் சொன்னார். கடனை வாங்கிக்கொண்டு கவலைப்படுவதைவிட கையிலிருக்கும் நகையை விற்றுச் செலவழிப்பதுதான் நலமென்று எனக்குத் தோன்றியது. இந்தத்தடவை நகை விற்பதைப் பற்றி அவர் அதிகமாக மறுத்துப் பேசவில்லை.

டாக்டர் எவ்வளவோ மருந்துகளைக் கொடுத்து வந்தார். ஆனால் உடல் சௌக்கியமடைவதாகத் தெரியவில்லை. பாவம் முருகனுக்கும், என் கணவருக்கும் ஒரு நிமிஷம் கூட ஓய்வு ஒழிவு கிடையாது. அவர் தோட்டத்திற்குப் போவதற்குள் எனக்கு வேண்டிய சிச்ருஷைகளைச் செய்துவிட்டுப் போவார். அவர் திரும்பி வரும் வரையில் முருகன் என் அருகிலேயே குழந்தை மோகனை வைத்துக்கொண்டிருப்பான். கணவர் வந்ததும் முருகன் பூக்களை எடுத்துக்கொண்டு கடைத்தெருவுக்குப் போய் விடுவான். என் கணவர் சமையல் வேலையை ஆரம்பிப்பார். அவர் அடுப்பை ஊதி ஊதிக் கண்ணெல்லாம் சிவந்து

போய்விடும். ஏதோ சாதமென்று கிளறி வைப்பார். அதைத்தான் அப்பாவும் பிள்ளையும் சாப்பிடுவார்கள். குழந்தை மோகனுவிற்கு மட்டிலும் ஏதாவது பண்டம் பலகாரம் வாங்கி வந்து கொடுப்பார்கள். குழந்தையும் முன் போலத் தாட்டிகமாக இல்லை. சரியான போஷணை இல்லாமல் மெலிந்து வந்தது. அக்கம் பக்கத்திலுள்ள வர்கள் எவ்வளவோ ஆதரவாக இருந்தார்கள். ஆனாலும் எங்கள் கஷ்டத்தை நாங்கள்தானே அனுபவித்துத் தீர வேண்டும். எனக்காக முருகனும் என் கணவரும் இவ்வளவு சிரமப்படவேண்டாமென்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் சொன்னால் கேட்கிறார்களா! "உன் உடம்பு எப்படி இருக்கிறது? என்ன வேண்டும் உனக்கு?" என்று ஓயாமல் கேட்டுக்கொண்டேயிருந்தால் அதுவே மிகவும் தொந்தரவாக இருக்கிறது. என்னதான் மருந்து சாப்பிட்டாலும், எவ்வளவுதான் இவர்கள் சிரமப்பட்டுப் பார்த்தாலும் இந்த வியாதி என்னைவிட்டு நீங்காது என்று எனக்கு நன்றாகப் பட்டுப்போய்விட்டது. ஆகையால் என் உடம்பைப்பற்றி நான் அதிகமாக யோசிப்பதே யில்லை. மோகனுவிற்கும் இப்பொழுது நாலு வயது ஆகி விட்டது. முருகனும் தன் பொறுப்பை உணரும் நிலைக்கு வந்துவிட்டான், இனி எனக்கு என்ன குறை இருக்கிறது. எனக்கு இந்தச் சீக்கு மட்டும் வராமல் இருந்தால் என் கணவர் தன் சம்பாத்தியத்திலிருந்து ஏதாவது பணம் சேர்த்துவைத்திருப்பார். அதற்கு வழியில்லாமல் எனக்கு இந்தச் சீக்கு வந்து அவரை ஏழையாக்கிவிட்டது. கணவர் தன் அலுவல்களையாவது அக்கரையோடு கவனித்து வந்தால் செலவுக்குப் போதுமான பணம் கிடைக்கும். என் வியாதியைப் போக்கும் முயற்சியிலேயே அவர் காலத்தை வீணாக்குகிறார். ஓயாது உழைத்து உழைத்து அவரும் துரும்பாய் இளைத்துவிட்டார். நான் என்னதான் செய்வது?

வேலை ஒன்றுமில்லாமல் படுக்கையிலேயே படுத்திருந்தால், மனம் எங்கெங்கேயெல்லாமோ சுற்ற ஆரம்பிக்கிறது. ஊரைப்பற்றியும் என் தாயாரைப்பற்றியும் அடிக்கடி நினைப்பு வந்து விடுகிறது. சிறுவயதில் அவள் எனக்குச் செய்த உதவிகள் கடமைகள் எல்லாம் திரைப்படம் போல முன்வந்து காட்சியளிக்கிறது. மாடி ஜன்னலில் நான் உட்கார்ந்து எண்ணமிட்டுக் கொண்டிருந்தது, தாயைப்பற்றி வருந்தியது, சமூகத்தைப் பழித்தது எல்லாம் அப்படி அப்படியே கனவுபோல நினைவுக்கு வருகிறது. ஜன சமுதாயத்தின்மீது முன்னைப்போல எனக்கு அவ்வளவு வெறுப்பு ஏற்படவில்லை. சமுதாயம்தான் என்னை வடிவேலுவின் மனைவியென்றும் மோகனுவை எங்கள் குழந்தையென்றும் ஒப்புக்கொண்டுவிட்டதே!

நேற்றுக் காளியம்மன் கோவிலில் திருநாள். எத்தனையோ தம்பதிகள் குழந்தைகளோடு எங்கள் வீட்டுவாசல் வழியாகப் போனார்கள். நானும் என் கணவர் குழந்தைகளுடன் போகவேண்டும் என்று ஆசை. ஆனால், இந்த வியாதிதான் என்னைப் படுக்கையிலேயே வைத்துவிட்டதே. இந்த ஊருக்கு வந்தது முதல் வருஷாவருஷம் நான் என் கணவரோடு காளியம்மன் கோவில் திருநாளுக்குப் போய்க் கொண்டுதானிருந்தேன். இந்த வருஷம் ஒரு கோவில் குளம் என்று அடியெடுத்து வைக்கவே இல்லை. முருகனுக்குக்கூட வேடிக்கை, விளையாட்டு, திருநாள் இதிலெல்லாம் இப்பொழுது ஆசையே இல்லை. தகப்பனாரோடு சேர்ந்து பணம் சம்பாதிக்கவேண்டுமென்று கவலை உண்டாகி விட்டது. முருகனும் குழந்தை மோகனுவும் சரியான பராமரிப்பு இல்லாமல் வாடிப்போய் விட்டார்கள்.

குழந்தைகளுக்கு நாட்டியமெல்லாம் கற்பிக்கவேண்டும், முருகனை மேல்படிப்புப் படிக்கவைக்கவேண்டும் என்றெல்லாம் மனக்கோட்டை கட்டியிருந்தேனே! என் ஆவல்களை நிறைவேற்றிவைக்க எனக்கு இப்பொழுது சக்தி

யில்லாமல் போய்விட்டதே. நான் மூன்று பேர்களுக்கும் பாரமாகவல்லவா இருந்துவருகிறேன். நடக்கக்கூட சக்தி யில்லை. சாதமென்று சாப்பிட்டு ஒரு மாதத்திற்கு மேலா கிறது. ஏதோ மாவுக்கஞ்சிதான் குடிக்கவேண்டுமென்று வைத்தியர் சொல்லியிருக்கிறார். அதுவும்கூட இப்பொழுது செல்லவில்லை. எவ்வளவு காலம் நான் இவர்களையெல்லாம் இப்படிக் கஷ்டப்படுத்தப் போகிறேனோ தெரியவில்லை.

பக்கத்து வீட்டுக்காரப் பெண்கள் எவ்வளவு நல்லவர் களாக இருக்கிறார்கள். நாம் அன்போடு பழகிக்கொண் டால் அவர்களும் அன்போடுதானே பழக முடியும். நிலைக் கண்ணாடியில் நாம் கோபமாகப் பார்த்தால் எதிரிலுள்ள பிம்பமும் கோபமாகத்தான் நம்மை நோக்கிப் பார்க்கிறது. மலர்ந்த முகத்தோடு பார்த்தால் பிம்பம் நம்மை மலர்ந்த முகத்தோடுதான் வரவேற்கிறது. உலகத்திலுள்ள மனி தர்களெல்லாம் நிலைக் கண்ணாடிகள் என்று நாம் நினைத்துக் கொண்டோமானால் பிறரைக் கோபிக்கவோ வெறுக் கவோ காரணமிருக்காதென்று நினைக்கிறேன். நான் ஒரு பங்கு அன்பு காட்டினால் அவர்கள் பத்து மடங்கு அன்பை என்னிடம் காட்டுகிறார்கள். உலகம் அன்பு மயமானது தான். வெறுப்பும் துவேஷமும் மனிதன் வீணாக சிருஷ் டித்துக்கொண்ட கெட்ட குணங்கள்.



## 17 முருகன்

தகப்பனுர் ஏனோ எப்பொழுதும் ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டு கவலையில் ஆழ்ந்திருக்கிருர். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. சிலவேளை அவர் அழுதுகொண்டிருந்ததாகத் தெரிகிறது. பணக்கஷ்டத்திற்காக இப்படி வருத்தப்பட்டிருப்பாரா? பணத்திற்காக அவர் முன்னைப்போல அவ்வளவாகக் கலங்குவதில்லை. இப்பொழுது வேறு ஏதோ கவலை அவர் மனதை அரித்துக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

அன்று டாக்டர் இவரிடம் வெகுநேரமாக ஏதோ பேசிக்கொண்டிருந்தார். அம்மாவுக்கு ஏற்பட்டிருக்கும் நோயைப் பற்றித்தான் ஏதாவது சொல்லியிருப்பார். ஆமாம். அன்றைய தினத்திலிருந்துதான் இவர் ஓயாக் கவலையில் ஆழ்ந்து விட்டார். தோட்டத்திற்கே போகவில்லை. வேளா வேளையில் குளிப்பதோ சாப்பிடுவதோ கிடையாது. தங்கையைப் பார்த்தவண்ணம் கண்கலங்குகிருர். தன் வருத்தத்தை என் முன்னுல் வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளாமல் மழுப்புகிருர்.

நானும் தாயாரின் அருகிலேயே இருந்து அவளுக்கு உதவி செய்யலாமென்று நினைத்தால் தோட்ட வேலையைப் பார்ப்பதற்கு வேறு ஆளில்லை. வீட்டில் இம்மாதிரிக் கஷ்டங்கள் இருக்கும்போது தான் எனக்கு வெளியில் அதிகமான வேலைகள் வந்து சேர்கிறது. ஊரில் கலியாணங்கள் அதிகம். கடைக்காரர்கள் என்னை இன்னும் பத்துப் பதினைந்து நாட்கள் வரை கூடவே இருந்து வேலை பார்க்க வேண்டுமென்று கெஞ்சுகிருர்கள். அவர்களிடம் மறுத்துச் சொல்லவும் முடியவில்லை. தகப்பனுரும் வீட்டில் சும்மா உட்கார்ந்துகொண்டிருக்கும்போது தினசரிச்

செலவுக்குப் பணம் வேண்டுமே! டாக்டர் ரொம்ப நல்ல மனிதர். பணத்திற்கு இப்பொழுது ஒன்றும் நெருக்க வில்லை. அடிக்கடி வந்து தாயாருக்கு மருந்துகொடுத்து வருகிறார். கடவுள் செயலால் தாயாருக்கு உடம்பு சீக்கிரம் குணமாகிவிட்டால் எங்கள் கவலைகளெல்லாம் நீங்கி விடும்.

தங்கை மோகனா எவ்வளவோ மெலிந்துபோய் விட்டது. ஓயாமல் அழுதுகொண்டேயிருக்கிறது. பக்கத்து வீட்டு அத்தை கவனித்துப் பார்க்காவிட்டால் இதை விட மெலிந்து போயிருக்கும். தாயார் மட்டும் உடம்பு சௌகரியத்தோடு இருந்திருந்தால் இதற்குள்ளாக மோகனாவைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்திருப்பாள். நான் ஒரு பக்கம் அலைய, தாயார் வியாதியினால் படுத்திருக்க, தகப்பனார் கவலையிலேயே மூழ்கியிருக்க, அவளை எப்படிப் பள்ளிக்கூடம் அனுப்புவது! எனக்குக்கூட தினமும் ஏதாவது படிக்கவேண்டுமென்று ஆசையிருக்கிறது. ஆனால் உட்காரவே நேரமில்லையே!

தாயாரைப் பார்க்கப் பார்க்க என் மனம் ஏனோ பதறுகிறது. உடம்பில் ஒரு நகை இல்லை. தலையெல்லாம் முள் செடிபோல அலங்கோலமாக இருக்கிறது. எலும்புக் கூடாக இருக்கிறாள். அவளால் பேசக்கூட முடியவில்லை. இந்த நிலையிலும் என்னைப் பார்த்து "முருகா, ரொம்பக் கஷ்டப்பட்டு வேலை செய்யாதே! உன் உடம்பு ரொம்ப இளைத்துப்போய் விட்டதடா! வேளாவேளைக்கு நல்லாச் சாப்பிடு!" என்று சொல்கிறாள். தான் எலும்புக்கூடாக இருப்பதை அவள் உணரவேயில்லை. இந்தக் கஷ்டமெல்லாம் எப்போது நீங்குமோ தெரியவில்லை.



இருளடைந்திருந்த என் வாழ்க்கையைப் பிரகாசப் படுத்தவந்த தீபம் அணைந்து விட்டது. என் வாழ்க்கையைப் பழையபடி இருள் மூடிக்கொண்டது. சுந்தரி என்னை இந்த உலகில் தவிக்க விட்டுவிட்டுப் போய்விட்டாள். இனி எனக்கு இந்த உலகில் என்ன இருக்கிறது! அவளே எனக்கு எல்லாமாக இருந்தாள். அவள் போய் விட்டதால் உலகில் எனக்கிருந்த எல்லாமே போய்விட்டது. இனி என் கதி எப்படி ஆனால் என்ன!

நான் எப்படி எப்படி இருந்தேன்? அடாடா! பயங்கரமான ஒரு கனவுபோல இருக்கிறதே. அதல பாதளத்தில் இருந்தேன். பின்பு வாழ்க்கை இன்பத்தின் சிகரத்தையே எட்டிப் பிடித்தேன். திரும்பவும் தலைகுப்புறப் பள்ளத்தில் வீழ்ந்து விட்டேன். இனி எழுந்திருக்கவே முடியாது.

சிறுவனாக, அறியாப் பிராயமாக இருந்தபோது செல்லமாக வளர்க்கப்பட்டேன். வயதுவந்தபிறகு ஒரு பெண்ணை மணந்தேன். அவளும் தங்கமான ஒரு மகனை எனக்குக் கொடுத்துவிட்டுப் பரலோகம் சென்றுவிட்டாள். தாயும் தந்தையும் இறந்தபோது பிறருடைய வஞ்சகத்தினால் வறுமைப்பட்டேன்.

குழந்தை முருகனை வைத்துக்கொண்டு நான் திண்டாடித் திகைத்து நிற்கையில் என் சகோதரியின் உதவி கிடைத்தது. எத்தனையோ கஷ்டங்களுக்கிடையே என் அக்காளும் என் குழந்தையை அருமையாகச் சீராட்டித் தான் வளர்த்தாள். எனக்கு இரண்டாவது கல்யாணம்

செய்து வைத்துவிடவேண்டுமென்று எவ்வளவோ முயற்சி செய்தாள். அப்பொழுது என் எதிர்காலம் மிகவும் கஷ்டமான தொன்ருகவே தோன்றியது. கையில் பணம் கிடையாது. வேலையும் ஒன்றும் அகப்படவில்லை. அந்த லட்சணத்தில் கல்யாணத்தையும் பண்ணிக்கொண்டு குடும்பத்தை நடத்துவதென்ருல் எவ்வளவு பணம் சம்பாதிக்க வேண்டும். அத்தனை கஷ்டங்களையும் எண்ணி எண்ணிப் பார்த்தபோது, பேசாமல் சந்நியாசியாகப் போய்விடலாமா என்றுகூட அப்பொழுது தோன்றியது.

அன்று சுந்தரி மட்டும் என்னைக் கூப்பிட்டிருக்கவில்லையாஞல் நான் ஒருவேளை சந்நியாசியாகக்கூட ஆகியிருப்பேன். அல்லது வேறு எப்படியெல்லாமோ போய்ச் சிரமிந்திருப்பேன். என்னை அந்த விதமான கஷ்டங்களுக்கெல்லாம் ஆளாக்காமல் இன்பத்திலேயே திளைக்க வைப்பதற்கென்று சுந்தரி எனக்குக் கிடைத்தாள். அவள் எனக்குக் கிடைத்தாள் என்றுகூடச் சொல்லக் கூடாது. அவளது ஆதரவும் அன்பும் எனக்குப் போன ஜென்மத்தில் செய்த புண்ணியத்திஞல் கிட்டியது. தாஞகவே என்னை அழைத்து வாழ்க்கைப் பாதையை அன்பு மலரால் அமைத்தாள். பிச்சைக்காரன் தூங்கிவிழித்தவுடன் ஒரு மகாராஜாவாக ஆகிவிட்டான் என்ருல் அவனுக்கு எப்படியிருக்குமோ அப்படித்தான் இருந்தது நான் சுந்தரியுடன் வாழ்க்கை நடத்த ஆரம்பித்த அன்று.

அன்று முதல் நான் இந்திரலோகத்திலிருந்ததாகவே எண்ணி மகிழ்ந்தேன். அந்த இந்திரலோக வாழ்வு இப்படி ஒரு கனவாக முடிந்துவிடுமென்று நான் எண்ணவே இல்லை. பணக்கஷ்டம் ஏதோ இருந்தது. அதெல்லாம் இப்பொழுது ஒன்றும் பிரமாதமாகத் தோன்றவில்லை.

எங்கள் அன்பின் உருவாகப் பிறந்தாள் மோகனு. அடாடா! அந்தப் பெண்ணின் எதிர்காலத்தை நினைத்தால் நெஞ்சம் குமுறுகிறது. சுந்தரி இறந்த அன்று அது

"அம்மா" என்று அலறியது அவள் காதில் விழவேயில்லை. இந்தத் தள்ளாத வயதில் எத்தனை பொறுப்பு என் தலையில் விழுந்துவிட்டது. முருகனைப் பார்க்கவே பரிதாபமாக இருக்கிறது. சாப்பிடவே மாட்டேனென்கிறான். இந்தச் சிறு வயதில் அவனுக்கு இத்தனை கஷ்டமும் கவலைகளும் ஏற்பட்டால் அவன் என்ன செய்வான். சுந்தரியின் அன்பினால் அல்லவா அவன் உடலும் குணமும் வளர்ந்தது.

ஒரு கெட்டிக்கார சுந்தரியினால் நாங்கள் எல்லோருமே கெட்டிக்காரர்களாக இருந்தோம். ஆனால் அவளுடைய உயர்ந்த குணங்களும் அன்பும் மறையவில்லை. என் நெஞ்சுள்ள வரையும் என்னிடம் அது நிலைத்திருக்கும். கவலை மனிதனை அரித்துவிடும் என்று சுந்தரி அடிக்கடி சொல்வாள். எவ்வளவோ கவலைகளையெல்லாம் நான் சமாளித்துக்கொண்டுதான் வந்திருக்கிறேன். ஆனால் இது தாங்கமுடியாத பேரிடியாக வந்துவிட்டதே. எப்படி மனதைத் தேற்றிக்கொள்வது! மழையைத் தாங்கலாம்; இடியைத் தாங்க முடியுமா?

என் வீட்டிற்குள் போகவே பயமாக இருக்கிறது. சுந்தரி சமையலறையில் நிற்பதுபோலவே பிரம்மைத் தோற்றம் உண்டாகிறது! என்னைப் பார்த்து "எதற்குமே கவலைப்படாதீர்கள்" என்று சொல்வதுபோல இருக்கிறது. அவளுடைய ஆடைகளையெல்லாம் பார்க்கப் பார்க்க என் மனம் வெடித்துவிடும் போலிருக்கிறது. கடவுள் எனக்கு ஏன் இப்படி ஒரு அபூர்வமான பாக்கியத்தைக் கொடுத்து விட்டுப் பழையபடி பிடுங்கிக்கொள்ளவேண்டும். எல்லாம் அவன் செயல் என்று சும்மாயிருக்க முடியாதா!

சுந்தரியினால் நான் சகல சம்பத்தையும் பெற்றேன். என்னால் அவள் கண்ட சுகம் என்ன? என்னால் கஷ்டங்களைத்தான் அவள் அனுபவித்தாள். என்னோடு வந்திருக்காவிட்டால் அவள் எத்தனை சுக போகங்களோடு வாழ்ந்திருப்பாள். இந்த வயதில் இறந்திருக்கவே மாட்டாள்.

டாக்டரே சொன்னுரே மனோவேதனை காரணமாகவே சுந்தரியின் நோய் அதிகரித்து வந்தது என்று. அவள் பணத்தையெல்லாம் காலியாக்கினேன். அவள் நகைகளை யெல்லாம் விற்று விற்றுச் செலவழித்தேன். அவள் இதைப் பற்றி ஒரு தடவைகூட வருந்தியது கிடையாது. எனக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்தாள். நான் அவளுடைய கணவன் என்று சொல்லிக்கொள்வதிலேயே அவளுக்கு இன்பமாம். எனக்கல்லவா அவள் இன்பத்தின் உருவாக இருந்தாள். சுந்தரி என் மனைவியாக இருந்ததனுலேயே நான் எவ்வளவோ பெருமையும் பூரிப்புமடைந்தேன். கோவில் குளங்களுக்கு அவளை அழைத்துக்கொண்டு போகும்போது கனவில் நடப்பது போலவே இருக்கும். அவளுடைய வேலைக்காரனுக இருக்கவே யோக்யதை உள்ள நான் அவளுடைய கணவனுக வாழ்ந்ததை நினைத் தால், அத்தகைய வாழ்வு இனி எனக்கு எந்த ஜென்மத்தி லும் கிடைக்காதென்றே தோன்றுகிறது. அக்கம் பக்கத்தி லுள்ளவர்களெல்லாம் சுந்தரியைப் பற்றிப் புகழாத நாளே கிடையாது. அவர்களெல்லாம் அவள் இறந்த அன்று அழுது புலம்பியதை நினைத்தால்! நானே அவர்களுக்கு ஆறுதல் சொல்லித் தேற்றவேண்டியதாகி விட்டது. உறவினர்கள் கூட அவ்வளவு மன வருத்தமடைந்திருக்க மாட்டார்கள்.

சுந்தரி இறந்தவுடன் எங்கள் உறவினர்கள் யாருக்கா வது தந்தியடிக்கவேண்டுமா என்று பக்கத்து வீட்டுக்கா ரர் என்னிடம் கேட்டார். என்னுல் பேசவே முடியவில்லை. துக்கம் நெஞ்சை அடைத்துக்கொண்டுவிட்டது. ஒன்றுமே வேண்டியதில்லை என்று தலையை அசைத்துவிட்டேன். என் தலை சுழன்றது. சுந்தரியின் தாயாருக்கு இந்த விஷ யம் தெரிந்தால் எப்படித் துடிப்பாளோ! சுந்தரி இறப் பதற்கு முன்னமே அவளுடைய தாயாருக்குக் கடிதம் எழுதி வரவழைக்கலாமென்று நினைத்தேன். வயதானவள் தன் மகளை இப்பொழுதாவது பார்க்கட்டும், என்று யோசித் தேன். அவளுக்கு அந்தப் பாக்கியம் கிடைக்கவில்லை. இப்

பொழுது சுந்தரி இறந்துபோன தகவலை அவளுக்குத் தெரி விப்பதால் என்ன பயன். தன் மகள் எங்கேயோ உயி ரோடு இருந்து வருகிறுள் என்றுவது அவள் எண்ணிக் கொண்டிருக்கட்டுமே!

சாரதாம்பாளுக்கு நான் துரோகம்தான் செய்திருக் கிறேன். தன் மகளோடு சுகமாக வாழ்ந்திருக்க எண்ணி யிருந்தாள் அவள். அவளுடைய எண்ணத்தில் நான்தான் மண்ணைப் போட்டேன். இப்பொழுது அவள் என்னைக் கண்டால் பார்வையினுலேயே என்னைக் கொன்றுவிடக் கூடும். சுந்தரி அன்று என்னுடன் வாழ விரும்பியபோது நான் முடியாதென்று சொல்லியிருந்தால் என்ன நடந்திருக் கும்? சுந்தரி இன்று சுகமாகத் தாயோடு வாழ்ந்துகொண் டிருப்பாள். சாரதாம்பாளுக்கும் மகளைப் பிரிந்திருக்கும் படியான துன்பம் நேர்ந்திருக்காது. ஆனுல் நான் என்ன ஆகியிருப்பேன்! எங்கோ ஒரு பூக்கடையில் சம்பள ஆளாக வறுமையுடன் போராடிக்கொண்டிருந்திருப்பேன். அப்படியாவது இருந்து தொலைந்தேனு! பிறவிக் குருட னுக்குத் திடீரென்று கண்ணைக் கொடுத்து உடனே பழைய படி பிடுங்கிக்கொண்டது போலல்லவா இருக்கிறது இப் பொழுது! குருடன் குருடனுகவே இருந்துவிட்டால் அந் தத் துன்பம் அதிகமாக உணரப்படுவதில்லை. ஆனுல் கண் பெற்று இழந்துவிட்டால் அவனுல் அதை சகிக்கவே முடி யாது. பின் சொன்ன குருட்டு நிலைமைதான் எனக்கு வந் திருக்கிறது. அமர வாழ்வு வாழ்ந்தவனை நரகில் கொண்டு தள்ளிவிட்டால் எப்படி யிருக்குமென்பதை நான் நன்ருக உணரமுடிகிறது.

எத்தனையோ நண்பர்கள் வந்து எனக்கு ஆறுதல் சொல்லிவிட்டுப் போனுர்கள். அவர்கள் சொல்வது ஆறு தலாக இருந்தாலும் என் துக்கத்தைப் பல மடங்கு பெருக் கிக்கொண்டேதான் இருக்கிறது. என் மாதிரி அனுபவ முள்ள ஒரு நண்பர் சொன்னுர் "நீங்கள் இப்படி சதா துக்

கத்தில் ஆழ்ந்திருப்பதில் பயன் ஒன்றுமில்லை. குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பு இப்பொழுது உங்களுடைய தாய்விட்டது. அவர்களை நன்ருகக் கவனித்து வாருங்கள்" என்று.

பிள்ளைகளின் கதியை நினைத்தால் நான் இனி என்ன செய்வதென்றே புரியவில்லை. முருகனைப்பற்றி எனக்கு அவ்வளவு கவலையில்லை. மோகனுவை எப்படி வளர்ப்பது! அதன் முகத்தைப் பார்க்கும் போதெல்லாம் சுந்தரியின் ஞாபகம்தான் வருகிறது. அவளை என் அக்காளிடம் அனுப்பிவிடலாமென்ருல், அதனுல் பலவித இடையூறுகள் ஏற்படலாம். இங்கேயே வைத்திருக்கவும் முடியாது. ஐந்துவயதுப் பிள்ளையை வைத்துக்கொண்டு நாங்கள் இருவரும் என்ன செய்வது! இனி முருகனேடு நானும் சேர்ந்து தோட்டவேலையைக் கவனிக்கவேண்டும். சிறு பையன் தனியாகவே எத்தனை வேலைகளைக் கவனிப்பான். நானும் அவனும் தோட்டவேலையைப் பார்க்கப் போய்விட்டால் மோகனுவை யாரிடம் விட்டுவைப்பது. ஏதோ கொஞ்ச நேரத்திற்கு என்ருல் பக்கத்து வீட்டாரிடம் விட்டுவைக்கலாம். தக்க வயதடையும்வரை அவளை எப்படி என்னுல் வளர்க்க முடியும். இதோடு நாங்களே சமையல் செய்து சாப்பிடவேண்டியிருக்கிறது. நான் சமையல் செய்வேனு, தோட்டவேலையில் முருகனுக்கு உதவி செய்வதா, மோகனுவைக் கவனித்துக்கொள்வதா!

மோகனுவைக் கூட்டிக்கொண்டுபோய் அவள் பாட்டியிடமே ஒப்படைத்துவிடலாமா என்றுகூட ஒரு சமயம் தோன்றியது. எப்படியும் குழந்தை சுகமாக வாழவேண்டியதுதானே! சாரதாம்பாளுக்கும் தன் பேத்தியோடிருப்பது ஒருவிதத்தில் ஆறுதலாக இருக்கும். இப்படியெல்லாம் நான் யோசித்துப் பார்த்தேன். ஆனுல் நான் இப்படிச் செய்வது சுந்தரியின் லட்சியத்திற்கு நேர் விரோதமாக வந்து முடிகிறது. அவளே ஒருசமயம் சொல்லியிருந்தாள் என் குழந்தை மோகனுவின் வாழ்க்கை தாசியின் வாழ்க்

கையாக இராதென்று. அதற்கு மாருக நான் மோகனு வைச் சாரதாம்பாளிடம் கொண்டு ஒப்படைத்தால் என்ன ஆகும்! எங்கள் குழந்தை அந்த வீட்டில்போய் இருப்ப தற்கே தகுதியில்லை. ஆனல் மோகனுவை நன்ருக வளர்ப் பதற்கு ஒரு வழி தேடவேண்டுமே! என்ன செய்வது? முருகன் அதைத் தன்னேடு கடைத்தெருவுக்கு அழைத்துக் கொண்டுபோய் அதற்குத் தன் தாயின் நினைப்பு உண்டா காதபடி ஏமாற்றிவருகிருன். இரவில் சுந்தரி படுத்திருந்த கட்டிலைப் பார்த்து அழுகிறது. "அம்மா எங்கே?" என்று அடிக்கடி கேட்கிறது. நான் என்ன பதில் சொல்வது? ஏதாவது கதைசொல்லித் தூங்கவைப்பதைத்தவிர வேறு வழியில்லை.

குழந்தையை வளர்ப்பது லேசான காரியமல்ல. அதி லும் மோகனுவைப்போன்ற அறிவாளியான குழந்தையை என்னுல் ஏமாற்றிச் சமாதானப்படுத்தவே முடியவில்லை. அதன் அழகிய முகம் அழுது அழுது கன்னிப்போய்விடு கிறது. மோகனுவை எப்படி வளர்க்கலாம் என்பதைப் பற்றிப் பலர் பலவித யோசனைகளைச் சொல்கிருர்கள். ஆனல் காரியத்தில் நடப்பதுமட்டும் சுலபமாகத் தெரிய வில்லை.

குழந்தையை வளர்க்கும் பொறுப்பை நானும் முருக னும் ஏற்றுக்கொள்வதானல் எங்கள் செலவுக்குப் பணம் சம்பாதிக்க முடியாது. டாக்டருக்கும் மளிகைக்கடைக்கும் பாக்கி ஏறிப்போயிருக்கிறது. நானும் முருகனும் பாடு பட்டுச் சம்பாதித்துத்தான் இந்தக் கடன்களையெல்லாம் அடைக்கவேண்டியிருக்கிறது. குழந்தையைக் கவனித்துக் கொள்ளவேண்டுமென்ருல் நாஞவது முருகனுவது வீட்டி லேயே இருந்தாகவேண்டும். நான் வீட்டில் உட்கார்ந்து கொண்டு முருகனைமட்டும் சம்பாதித்துப் பணம் கொண்டு வரும்படி சொல்வது மிகவும் தப்பு. அவன் சிறுபிள்ளை. இப்பொழுது அவன் பார்த்துவரும் வேலையை இரண்டுபேர்

இருந்தால்கூடப் பார்க்கமுடியாது. இளம் வயதில் இப்படிக் கடுமையாக வேலைசெய்தால் அவன் உடல் நறுங்கிப் போய்விடும்.

அவனை வீட்டில் இருந்து குழந்தையைப் பார்க்கச் சொல்லிவிட்டு நான்மட்டும் உழைத்துச் சம்பாதிப்பதென்றால் அதுவும் கூடாதகாரியமாக இருக்கிறது. என் உடல் மிகவும் தளர்ந்துபோய்விட்டது. முன்னைப்போல் ஓடியாடிப் பாடுபட இயலவில்லை. கடைத்தெருவுக்கு அலைய என்றால் முடியவில்லை. மேலும் முருகனைப்போல அவ்வளவு சாமர்த்தியமாகப் பேசவோ வேலை செய்யவோ எனக்குத் தெரியாது. கடைத்தெருவில் முருகனுக்குத்தான் அதிகப்பழக்கம். அவனால்தான் என் மீதிநாளைய வாழ்வு நடக்கவேண்டியிருக்கிறது. அவனுக்கு நான் உதவியாக இருந்துவந்தால் லகுவாகப் பணம் சம்பாதித்து வாழ்க்கையை நன்றாக நடத்தமுடியும். நான் தோட்டத்திலுள்ள வேலை முழுவதையும் பார்த்துக்கொள்ளவேண்டும். தோட்டத்தில் பூவை எடுத்துத் தயாராக வைத்திருந்தால் முருகன் அதைக்கொண்டுபோய்க் கடையில் போட்டுவிட்டு அங்குள்ள வேலையையும் பார்த்துவிட்டு சௌகரியமாக வீட்டுக்கு வந்துவிடலாம். இதுதான் சரியான திட்டம்.

திட்டமெல்லாம் போட்டுவிட்டேன். ஆனால் மோகனைத் தனியே விட்டுவிட்டு நாங்கள் வேலைக்குப் போவதெப்படி? தோட்டத்திற்கு ஒரு வேலையாள் போட்டுவிட்டால் சௌகரியமாக இருக்கும். நாங்களே வேலையாளாக இருக்கும்போது எப்படி வேறு வேலையாள் வைத்துச் சம்பளம் கொடுக்கமுடியும். மேலும் எங்களைப் போலப் பாடுபட்டு அந்த வரண்ட தோட்டத்தில் பலனெடுக்க யாரால் முடியும்? ஆகவே வேலையாள் வைப்பதென்பது கூடாத காரியம்.

மோகனைப் பக்கத்திலேயே வைத்துக்கொண்டிருந்தால் எங்களுக்கு வேலையும் ஓடாது. அதை அழாமல்

பார்த்துக்கொள்ள என்ருல் முடியவில்லே. மோகனுவை வளர்த்து வருவதற்கு வேறு யாரையாவது ஏற்படுத்திஞல் தான் நானும் முருகனும் நிம்மதியாக வேலேபார்த்துப் பணம் சம்பாதித்துப் பொருள்சேர்க்க முடியும். இல்லே யாஞல் அவன் எனக்குப்பின் நாதியற்றுத் தரித்திரிஞகத் தெருவில் நிற்கவேண்டியிருக்கும். இன்னும் நாலேந்து வருஷம் பாடுபட்டுப் பணம் சேர்த்து அவனுக்கு ஒரு கலி யாணத்தை முடித்து வைத்துவிட்டால் பின்பு எப்படியும் பிழைத்துக்கொள்வான். தங்கையையும் கவனித்துக்கொள் வான். நான் இப்பொழுது வீணுகக் கவலேப்பட்டுக்கொண் டேயிருந்தால், பிள்ளேகள் இரண்டும் சீரழிந்துபோய்விடும். இன்று முருகனிடமே கேட்போம் இதற்கு என்ன செய்வ தென்று.



## 19 முருகன்

வீடே அருள் மாறிப்போய் விட்டது. தாயார் இருக்கும்போது வீடு எவ்வளவு கலகலப்பாக இருந்தது. இன்று சோபையிழந்து விட்டது. எனக்கு இந்த வயதிலேயே இப்படி ஒரு துயரம் ஏற்படுமென்று எதிர்பார்க்கவில்லை.

பணக் கஷ்டத்தினுல் படிப்பை நிறுத்தினேன். கஷ்டப்பட்டு வேலையும் பார்த்து வருகிறேன். ஆனுலும் இதைப்பற்றியெல்லாம் எனக்கு வருத்தம் அவ்வளவாகத் தோன்றவில்லை. தகப்பனுருக்குப் பாரமாக இராமல் ஏதோ சம்பாதிக்கிறேம் என்ற திருப்தியிருந்தது. வேலைகளைப் பார்த்து விட்டு வீட்டுக்கு வந்தால் தாயின் ஆதரவும் தங்கையின் பேச்சும் என் களைப்பையெல்லாம் போக்கிவிடும். இப்படி மகிழ்ந்திருந்த எங்கள் வீட்டில் தாயின் ஆதரவு போய்விட்டது. தங்கை ஓயாது அழுவதைத்தான் பார்க்க முடிகிறது. தகப்பனுருக்குத் துக்கம் தாங்கவே முடியவில்லை. மனமுடைந்து போனுர். நானும் துக்கத்திலேயே மூழ்கியிருந்து விட்டால் டாக்டர் கடனையும் மளிகைக் கடைப் பாக்கியையும் எப்படித் தீர்ப்பது? தினசரிச்செலவுக்கு என்ன செய்வது? ஆகையினுல் தாய் இறந்து பத்து தினங்கள் கழிந்தவுடன் நான் ஒழுங்காக வேலையைப் பார்க்க ஆரம்பித்து விட்டேன். மனம் வேலையில் ஈடுபட்டிருந்தாலாவது துக்கத்தை ஓரளவுக்கு மறந்திருக்க முடிகிறது. முன்பெல்லாம் வீட்டுக்கு வந்தால் இன்பமாக இருக்கும். இப்பொழுது வீட்டை நினைத்தால் துன்பமாகவே இருக்கிறது. வேலை முடிந்து வீட்டுக்குப் புறப்பட்டவுடனேயே தகப்பனுர் எப்படிக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிருரோ; தங்கை அழுது கொண்டிருக்கிறதோ; தூங்குகிறதோ என்ற எண்ணங்களே மனதில் வட்டமிட்டுக் கொண்டிருக்கும்.

தகப்பனுர் தினமும் தானே சமையல் செய்து விடுகிறேன் என்றுதான் சொன்னுர். இத்தனை துக்கத்தையும் மனதில் அடக்கிக்கொண்டு சமையல் வேலையில்வேறு அவர் கஷ்டப்பட வேண்டுமா? நான் வீட்டுக்குப் போகும்போதே மூன்று பேருக்கும் கிளப்பிலிருந்து சாப்பாடு எடுத்துக் கொண்டு போய் விடுவேன். என் வற்புறுத்தலின் பேரில் தகப்பனுர் இரண்டு உருண்டை சாதம் சாப்பிடுவார். தங்கைக்குச் சாதம் கொடுப்பதற்குள் எங்களுக்குப் பெரிய தொந்தரவாகப் போய்விடும். இப்படியாகச் சாப்பாட்டு விவகாரம் பெரிய கூப்பாட்டு விவகாரமாகவே முடியும்.

தோட்டத்தில் வந்து எனக்கு உதவியாக வேலை பார்க்கிறேன் என்று தகப்பனுர் தினமும் புறப்படுகிருர். தோட்டத்தில் அவர் ஏதாவது லேசான வேலைகளைப் பார்த்து வந்தால் எனக்கு எவ்வளவோ நேரம் மிச்சப்படத்தான் செய்யும். ஆனுல் தங்கையை அடுத்த வீட்டில் விட்டு விட்டு வருவது சரியான காரியமல்ல. தாயை இழந்து ஏங்கிப்போயிருக்கிற குழந்தையின் அருகில் தகப்பனும் இல்லையென்ருல் அதற்கு எப்படி இருக்கும்! ஆகையால் என் தகப்பனுரை வீட்டிலேயே தங்கையைக் கவனித்துக் கொண்டிருக்கும்படி சொல்லியிருக்கிறேன். நான் தனியாகவே அத்தனை வேலையையும் கவனித்து வருவது அவருக்குப் பிடிக்கவில்லை.

எங்களுக்கு இந்த மாதிரியெல்லாம் துன்பங்கள் வருவதற்கு என்ன காரணம் என்றே தெரியவில்லை. நாங்கள் மனமறிய ஒருவருக்கும் கெடுதல் எண்ணவில்லையே. எல்லாம் விதி என்று சொல்லிக் கொள்கிருர்களே! அப்படித்தான் இருக்குமோ! விதியென்ருல் அது அநீதியாகவும் மனிதர்களை நடத்துமோ! இதுவும் எனக்குப் புரியவில்லை. ஆனுல் ஒன்று நிச்சயம். நமக்கு வரும் துன்பங்களுக்குக் காரணம் கண்டுபிடிக்க முடியாமல் மண்டையை உடைத்துக்கொண்டு திண்டாடுவதைவிட, எல்லாம் நம்முடைய

விதி என்று நினைத்துக் கொள்வதில் எவ்வளவோ ஆறுதல் கிடைக்கிறது. உலகத்தில் சுக செளகர்யங்கள் வந்தால் மனிதன் விதியைப்பற்றி அதிகமாகச் சிந்திப்பதில்லை. கஷ்டப்படும்போதுதான் விதியின் மீது பாரத்தைப் போடுகிறான். விதியென்பது துக்கச் சுமைகளைத் தாங்குவதற்கு ஒரு சரியான சுமைதாங்கிதான். இந்தச் சுமைதாங்கி மட்டும் இல்லாவிட்டால் மனிதன் தன் வாழ்நாள் முழுவதும் துக்கச் சுமையைச் சுமந்து கொண்டேயல்லவா கஷ்டப்படவேண்டியிருக்கும். நானும் இந்த மாதிரி ஆறுதல் அடையவேண்டியதுதான். வேறு வழியில்லை. விதி எங்களை இன்னும் எப்படியெல்லாம் நடத்தப் போகிறதோ! அதன் கைப்பொம்மைகள்தானே நாம்.

விதி எங்களுக்கு என்னவேண்டுமாயினும் செய்து விட்டுப் போகட்டும். சிறு பெண்ணான மோகனாவிற்குமா இத்தனை துன்பங்களைக் கொடுக்க வேண்டும். தாயற்ற குழந்தை எப்படி நன்றாக வளர முடியும்! நாங்கள் எவ்வளவுதான் சீராட்டிப் பாராட்டினாலும் தாய் இருந்தது போல் ஆகுமா? அதன் ஏக்கத்திற்கு உலகில் என்ன மருந்து இருக்கிறது? அது கஷ்டப்படுவதனால் எங்களுக்கும் கஷ்டமாக இருக்கிறது. பத்துப் பன்னிரண்டு வயது ஆனாலாவது ஒருவாறு தன் புத்தி கொண்டு அது ஆறுதல் அடைய முடியும். இப்பொழுது அது அம்மாவைப் பார்க்க வேண்டுமென்று பிடிவாதம் பண்ணுகையில் நாங்கள் என்ன சமாதானம் சொல்லி அதைத் தேற்றுவது!

தங்கையை வளர்ப்பதற்குத் தகப்பனார் எத்தனையோ திட்டங்களைப் போடுகிறார். ஆனால் கடைசியில் எல்லாமே சரியில்லையென்ற முடிவுக்குத்தான் வருகிறார். அவரும் நானும் சேர்ந்து பாடுபட்டு உழைத்து ஏராளமாகப் பொருள் தேடவேண்டுமென்று அவருக்கு ஆசை. பொருளில்லாத காரணத்தினாலேயே பல கஷ்டங்கள் குடும்பத்திற்கு நேரிட்டிருக்கிறதென்பது அவருடைய எண்ணம். இனியும் இப்படியிருக்காமல் நிறையப் பொருள் சம்பா

தித்து முன்னேற வேண்டுமென்று அவர் என்னிடம் எத்தனையோ தடவை சொல்லிவிட்டார்.

இதற்காகவே தங்கை மோகனுவைத் திருவனந்தபுரத்திலுள்ள அனுதாஸ்ரமத்தில் கொண்டு சேர்த்துவிட்டுக் கவலையில்லாமல் இரண்டுபேரும் உழைக்கலாமென்கிருர். இந்த ஏற்பாடுதான் எனக்குப் பிடிக்கவில்லை. இந்தத் திட்டம் அவருக்கும்தான் பிடிக்கவில்லை. இதைப்பற்றிச் சொல்லும்போதே அவர் கண்களிலிருந்து கண்ணீர் அருவியாகப் பாய்ந்தது. ஒரு விதத்தில் பார்க்கப்போனுல் அதனுல் நன்மைதான் ஏற்படுமென்று தோன்றுகிறது. அனுதாஸ்ரமத்திலுள்ள பெண்மணிகள் யாவரும் அன்பே உருவானவர்கள். மோகனுவை எவ்வளவோ பிரியமாக வைத்து வளர்ப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. மோகனுவும் அங்கு காட்டப்படும் ஆதரவினுலும், பிள்ளைகளோடு விளையாடுவதனுலும் தாயைப்பற்றி நாளடைவில் மறந்துவிடுவாள். எங்களுக்கும் எவ்வளவோ நிம்மதி கிடைக்கும். ஆனுல் சொந்த சகோதரியை எப்பொழுதுமே பிரிந்து விடுவதென்ருல் மனம் கேட்கவில்லை. அவளை அனுதாஸ்ரமத்தில் விட்டுவிட்டால் அவள் எங்கள் குடும்பத்தை விட்டுப் போய்விட்டாள் என்றுதானே அர்த்தம். எங்கேயாகிலும் அவள் சௌகரியமாக இருந்தால் சரிதானே என்று மனம் சாந்தியடைய மாட்டேனென்கிறது. இங்கே இருந்தால் அவள் மிகவும் சீரழிந்து விடுவாள் என்பதுவும் நன்ருகத் தெரிகிறது. இந்த விஷயத்தில் தகப்பனுரின் இஷ்டம் போல விட்டுவிடுவதுதான் நல்லது. தாயை மறந்து இருக்கிறேனல்லவா! தங்கையையும் மறந்துவிட வேண்டியதுதான் போலிருக்கிறது. ஆனுல் மோகனுவைப் பிரிந்திருப்பதில் ஒரு ஆறுதல் உண்டு. மோகனு இங்கிருப்பதை விட இன்னெரு இடத்தில் மிகவும் சந்தோஷமாகவே இருப்பாள் என்று மனச்சாந்தி அடையலாம்.

தகப்பனுர் இன்னும் இதைப்பற்றி என்னிடம் சொல்வார் என்று நினைக்கிறேன், அவர் இதைப்பற்றி என்னிடம்

சம்மதம் கேட்டால் என் மனதை அடக்கிக்கொண்டு சரி யென்று சொல்லிவிடவேண்டியதுதான். அவருக்கும் இது மிகவும் ஆறுதலளிக்கும். ஏதாவது வேலையில் ஈடுபட்டிருந் தால் தான் அவரும் தன் துக்கத்தைக் கொஞ்சம் கொஞ்ச மாக மறக்கமுடியும். இன்று மோகனுவிற்கு வேண்டிய தின் பண்டங்களையெல்லாம் வாங்கிக்கொண்டு போகவேண்டும்.



## 20 வடிவேலு

மோகனவை அனுதாஸ்ரமத்தில் கொண்டு விட்டு சரியாக இன்று இருபது நாளாகிறது. மக்கள் பாசம் மனதை என்ன பாடுபடுத்துகிறது. இப்பொழுது நாலு நாளாகத்தான் ஏதோ தோட்டவேலை பார்த்து வருகிறேன். எனக்கு எப்பொழுதும் மோகனவின் நினைவாகவே இருக்கிறது. அவள் அங்கு எப்படி எப்படி இருக்கிருளோ தெரியவில்லை.

தகப்பனுகிய நான் இருக்கும்போது, என் குழந்தையை அனுதாஸ்ரமத்தில் கொண்டுவிடும் நிலைமை ஏற்பட்டதென்ருல், என் வயிற்றுக் கொடுமைதானே இதற்குக் காரணம். இப்பொழுது நான் மோகனவை வளர்க்க வேண்டிய கவலையில்லாமல் வேலை பார்க்கலாம். ஆனல் பாசம் அகன்று விடுகிறதா? சில சமயங்களில் நான் மோகனவை அங்கு விட்டது சரியல்ல என்றே தோன்றுகிறது. எவ்வளவோ யோசனை செய்த பிறகுதானே இந்த முடிவுக்கு வந்து மோகனவைக் கொண்டு சேர்த்தேன். இப்பொழுது ஏன் எனக்கு இம்மாதிரி சபலம் தட்டுகிறது? மோகனவைக் கொண்டு அனுதாஸ்ரமத்தில் சேர்ப்பதை முருகன் விரும்பவே இல்லை. அவனிடம் எவ்வளவு நியாயங்கள் சொல்லிச் சமாதானம் செய்ய வேண்டியிருந்தது. இப்பொழுதுதான் என்ன? அறிவு சொல்கிறபடி பார்த்தால் நான் மோகனவைக் கொண்டு அனுதாஸ்ரமத்தில் சேர்த்ததன் மூலம் என் இரண்டு குழந்தைகளுக்கும் நன்மைதான் செய்திருக்கிறேன். இதில் சந்தேகமே இல்லை. ஏழெட்டு நாளாக முருகனுக்கு வேலையில் மிகவும் ஊக்கம் ஏற்பட்டிருக்கிறது. தோட்ட வேலையை நான் பார்த்துக் கொள்வதனல் அவன் கடைகளில் அதிகமாகப் புஷ்பங்கள் கட்டிக் கொடுத்து முன்னிலும் அதிகமாகவே பணம் கொண்டு வருகிருன்.

அவன் கொண்டு வரும் பணத்தில் எங்கள் சாப்பாட்டிற்கும் போக எவ்வளவோ மிச்சம் இருக்கிறது. தினமும் இந்த மாதிரி வரும்படி வந்து கொண்டிருந்தால், ஒரே மாதத்தில் என் கடனை அடைத்து விடலாம். இரண்டு மூன்று வருஷங்களில் எவ்வளவோ பணமும் சேர்த்து விடலாம். இதைவிட அதிகமாகப் பணம் வருவதற்கு வழிகள் தேடியிருப்பதாக முருகன் சொல்கிறான். புத்திசாலியல்லவா! எங்கள் தோட்டத்துப் பூக்களையும் அவனே மாலையாகக் கட்டி விற்பதற்குக் கடைத்தெருவில் ஒரு சிறு இடம் கிடைத்திருக்கிறதாம். பூவாக விற்பதை விட மாலையாகக் கட்டி விற்பதில் அதிக லாபம் கிடைக்கும். இதோடு பிற கடைகளுக்கும் மாலை தொடுத்துச் சம்பளம் வாங்கி வருவான்.

தோட்டமும் முன்னைப்போல இல்லாமல் இப்பொழுது அதிகமாகவே பூவைக் கொடுக்கிறது. பாடுபட்டால் பலனுண்டல்லவா! தண்ணீர் அதிகமாக எடுத்துப் பாய்ச்சுகிறேன். அங்கு இங்கு கிடைக்கும் உரங்களையும் பூச்செடிகளுக்குப் போட்டு வருகிறேன். புதுப்பதியன்களும் வாங்கி நட்டிருக்கிறேன். இந்தப்புது முயற்சிகளால் என் பொருளாதாரக் கஷ்டம் ஒருவாறு நீங்கி வருகிறது. முருகனும் சந்தோஷமாக வேலை பார்த்து வருகிறான். தினமும் காலையில் அவன் தோட்டத்திற்கு வருவதற்குள்ளாக நான் புஷ்பங்களைப் பறித்து வைத்து விடுவேன். நான் தோட்ட வேலையையும் சமையல் வேலையையும் கவனித்துக் கொள்கிறேன்.

மோகனுவிற்குத்தான் இப்பொழுது என்ன குறையிருக்கப் போகிறது. சிறு பிள்ளை தானே. அநாதாஸ்ரமத்திலுள்ள புதுமைகளைக் கண்டு நாளாவட்டத்தில் என்னைப் பற்றியும் தாயைப்பற்றியும் மறந்து விடுவாள். குழந்தையை வளர்ப்பதில் அவர்களைவிடவா நான் அதிகக் கவனம் எடுக்க முடியும்?

அந்த அனாதாஸ்ரமத்துத் தலைவி என்னிடம் எவ்வளவு அன்பாகப் பேசினார்கள்! நான் என் கதையெல்லாம் அந்த அம்மாளிடம் சொல்லியபோது என் நிலைமைக்காக எவ்வளவு வருத்தப்பட்டார்கள்! அவர்கள் எப்பொழுதும் க்ஷேமமாக இருக்க வேண்டும். மோகனாவை எவ்வளவு பிரியத்தோடு எடுத்து வைத்துக்கொண்டு கொஞ்சினார்கள். ஒரு தாய் தன் சொந்தக் குழந்தையை எடுத்து அணைத்துக் கொள்வது போலல்லவா அவளை எடுத்துச் சீராட்டினார் கள். மோகனா அவர்களிடம் போனவுடன் சாந்தமாகத் தான் இருந்தாள். அவளுக்கும்கூட அந்த அம்மாளைப் பிடித்துக் கொண்டது போலிருக்கிறது

அங்கு உத்தமமான குணங்களையும் நல்ல படிப்பையும் மோகனாவிற்குப் புகட்டுவார்கள். அன்போடு உணவு கொடுப்பார்கள். நோய் நொடியென்றால் பெற்ற தாயினும் பன்மடங்கு கவலையெடுத்துப் பார்ப்பார்கள். இவ்வளவு காரியத்தையும் நம்மால் செய்ய முடியுமா? ஆகையால் நான் மோகனாவை அனாதாஸ்ரமத்தில் கொண்டு சேர்த்து விட்டது மிகமிக நல்ல காரியமென்றே படுகிறது.

ஆனால் ஒன்று. ஆஸ்ரமத்தின் விதிகளின்படி, அங்கு சேர்க்கப்பட்ட பிள்ளைகளைத் சொந்தக்காரர்கள் திரும்ப வந்து கேட்டால் அனுப்பவே மாட்டார்களாம். இதுதான் எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. நாளை ஒரு காலத்தில் மோகனாவை வீட்டுக்கு அழைத்துவர வேண்டு மென்றால் முடியாது. இதற்காக ஆஸ்ரமத்தார்மீது நான் குறை கூறவில்லை. அவர்கள் இந்த மாதிரிச் சட்டம் போட்டிருந்தால்தான் ஆஸ்ரமத்தின் லட்சியத்தை நிறைவேற்ற முடியும் என்பதும் எனக்குத் தெரிந்ததுதான்.

அனாதைப் பிள்ளைகளை எடுத்து வளர்த்துக் கல்வியறிவு புகட்டி, ஆசிரியர்களாகவோ ஆசிரியைகளாகவோ ஆவ தற்கு பயிற்சி கொடுத்து, நாட்டில் கல்வியைப் பரப்புவதற் காக அனுப்புகிறார்கள். இது நாட்டுக்குச் செய்யும் சிறந்த

சேவைதானே. இப்படிப்பட்ட ஒரு உயர்ந்த லட்சியத்துடன் நிர்வாகம் பண்ணிவரும் ஒரு ஸ்தாபனத்தில் நமக்கு அசௌகரியப்படும்போது பிள்ளைகளை அவர்களிடம் கொண்டு விடுவது; நமக்கு சௌகரியம் ஏற்பட்டவுடன் அவர்களை வீட்டிற்கு அழைத்துக் கொள்வது என்று இருந்தால் ஆஸ்ரமத்தினுல் நாட்டுக்கு என்ன பயன் ஏற்பட முடியும்.

ஆஸ்ரமத்தலைவி இதையெல்லாம் என்னிடம் தெளிவாக எடுத்துச் சொன்னுர்கள். முன்பு இரண்டொரு பிள்ளைகளின் சொந்தக்காரர்கள் பால்ய வயதுள்ள பிள்ளைகளைக் கொண்டு வந்து விட்டார்களாம். பின்பு அந்தப் பிள்ளைகள் வாலிபப்பருவம் அடைந்தவுடன் அந்தப் பெற்றோர்கள் சண்டையிட்டுத் தங்கள் பிள்ளைகளை அழைத்துக் கொண்டுபோய் விட்டார்களாம். அதிலிருந்தே ஆஸ்ரமத்தில் இந்தச் சட்டத்தை ஏற்படுத்திப் பிள்ளைகளைக்கொண்டு வந்து விடுபவர்களிடம் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்து வாங்கி விடுகிருர்களாம். நானும் மோகனுவை அங்கு கொண்டு சேர்த்தவுடன் அந்த உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்துப் போட்டு விட்டுத்தான் வந்தேன். இனி மோகன எங்களுடையவள் அல்ல. ஆயினும் அவள் தன் தாயினுடைய லட்சியத்தைக் காப்பாற்றுவாள். நாட்டுக்கும் சேவை செய்வாள். இது நிச்சயம்! எப்படியாவது அவள் சுகமாக இருந்தால் சரிதான் என்று என்மட்டில் திருப்தி உண்டாகி விட்டது. சுந்தரி அடிக்கடி சொல்வதுபோல கவலைப்படும் நேரத்தைக் காரியத்தில் கழித்தால் எவ்வளவோ பலனுண்டு. ஒன்றுக்கு மேல் ஒன்ருகப் பல துன்பங்கள் தொடர்ந்து வந்ததனுல் துன்பங்கள் எனக்குப் பழக்கமாகி விட்டன. புதிய துன்பங்கள் பழைய துன்பங்களை அலட்சியமாக எண்ணும்படி செய்து விட்டது. மனம்மட்டும் திடமாக இருந்து விட்டால் துன்பங்களை வெகு எளிதாக எதிர்த்து நிற்கலாம். சுந்தரி செய்து வந்த உபதேசத்தின் பயனுக நான் திடமான

மனதைப் பெற்று விட்டேன். நடந்து போனவைகளைப் பற்றி இனிக்கவலைப்படவே கூடாது. நடக்க வேண்டியதைப் பற்றித்தான் சிந்தித்துக் காரியங்களைத் திறமையாக முயற்சி செய்ய வேண்டும்.

நான் மோகனுவை அனுதாஸ்ரமத்தில் கொண்டு சேர்த்து விட்டதைப் பற்றி என் நண்பர்களும், அக்கம்பக்கத்திலுள்ளவர்களும் பலவிதமாகச் சொல்கிறார்கள். சிலர் நான் செய்ததுதான் சரி என்று என் யோசனையைப் புகழ்ந்து பாராட்டுகிறார்கள். இன்னும் சிலர் அப்படிப்பட்ட அழகான குழந்தையை விட்டுப் பிரிவதற்கு எனக்கு எப்படித்தான் மனம் வந்ததோ என்று வருத்தப் படுகிறார்கள். "குழந்தையை எங்களிடம் விட்டு வைத்தால், நாங்கள் கவனித்துக் கொள்வோமே" என்று சிலர் அனுதாபப் படுகிறார்கள். என்மீதும், என் குழந்தையின் மீதும் உள்ள அன்பினுல்தான் அவர்கள் இவ்வாறெல்லாம் சொல்கிறார்கள்.

கழுதையை விற்கப் போனவர்கள் கதைபோல, எல்லோருடைய யோசனையின்படி நடப்பதென்றுல், காரியம் விபரீதமாகத்தான் முடியும். எல்லோருடைய எண்ணத்தின் படியும் நாம் நடக்க முடியாதுதானே! ஏதோ சிலருக்கு நாம் செய்யும் காரியம் சரியென்று படாமலிருக்கலாம். அதற்கு நாம் என்ன செய்வது! அவர்களையும் நாம் நம்முடைய நயமான வார்த்தைகளால் நம் யோசனை சரிதானென்று ஒப்புக் கொள்ளும்படி செய்வதுதான் நல்லது. அவர்கள் நமது யோசனையை ஒப்புக்கொள்ளாவிட்டாலும் அதற்காக நாம் வருத்தப்பட்டோ கோபப்பட்டோ என்ன பயன்! பிறருடன் பழகுவதே ஒரு கலை. விதவிதமான எண்ணங்களுடைய மனிதர்களோடு, அவர்கள் மனம் கோணுதபடி, நம் மனதிலுள்ளதைச் சொல்லிக் கொள்வதென்றுல் லேசான காரியமா? சுந்தரி இந்த வித்தையில் மகா சாமார்த்தியசாலியென்றே சொல்ல வேண்டும்.

எங்கள் தெருவிலேயே பொல்லாத பெண்கள் என்று பேர் வாங்கின இரண்டொருவர்கள் சுந்தரியிடம் மட்டும் சுமுகமாகப் பேசிப் பழகிவந்ததைக் கண்டால் எனக்கே ஆச்சரியமாக இருக்கும். தெருவில் எல்லாருடனும் சண்டையிடுவதையே தன் வாழ்க்கை லட்சியமாகக் கொண்ட அவர்கள் என் சுந்தரியிடம் மட்டிலும் ஏன் சண்டை போடாமல் அன்போடு பழகி வந்தார்கள்? இதைப்பற்றி என் மூளை ஆராய ஆரம்பித்தது. அவரவர்கள் போக்கின் படி நாமும் பேசிப் பழகக் கற்றுக்கொண்டால் எவருடைய மனதையும் நம் வசப்படுத்திவிடலாம் என்பதை அதிலிருந்து நான் தெரிந்துகொண்டேன்.

இவ்வாறு பண்பட்ட மனமுடைய என் சுந்தரியினால் வளர்க்கப்பட்ட முருகனுக்கும் இந்தக் கெட்டிக்காரத்தனம் தானாகவே அமைந்துவிட்டது. கடைத்தெருவில் அவனுக்கு எவ்வளவு மதிப்பு இருக்கிறது! முப்பது வயது மனிதன்கூட இவனை "அண்ணா" என்று அழைக்கிறான். இவனை எல்லோரும் மரியாதையாக நடத்துகிறார்கள். இவன் சொன்னபடி கேட்கவும், இவனுடைய நண்பர்கள் தயாராக இருக்கிறார்கள். இவனுடைய வேலைத் திறமையை அநேகர் மெச்சுகிறார்கள். தகப்பனுக்கு நல்ல பெயர் வாங்கிக்கொடுக்கும் இப்படிப்பட்ட பையனை மகனாகப்பெற்ற பாக்கியம் ஒன்றே எனக்குப்போதும். விதி கெடுதல்களையும் நன்மைகளையும் கலந்துதான் நமக்குக்கொடுக்கிறது. மாம்பழத்தில் பழரசமும் கொட்டையும் சேர்ந்துதானே இருக்கிறது. நாம் கொட்டையைத் தூர எறிந்துவிட்டால் மதுரமான மாம்பழ ரசத்தைமட்டும் உண்டு மகிழலாம். அதுபோல துக்கத்தை மறக்கக் கற்றுக்கொண்டுவிட்டால் இன்பத்தைமட்டிலும் நன்றாகச் சுவைக்கலாம்தானே.



## 21 மோகனா

என் அம்மா எங்கேயோ போய்விட்டாள். அப்பா என்னைக் கொண்டுவந்து இங்கே விட்டுப்போய்விட்டார். நான் இந்த ஆஸ்ரமத்திற்கு வருவதற்கு முதல் நாள் அண்ணனும் அப்பாவும் என்னவோ சொல்லிச் சொல்லி அழுது கொண்டார்கள். அவர் என்னை ஏன் இங்குகொண்டு வந்து விட்டுப்போய்விட்டார்?

இங்கேயுள்ள பெரிய அம்மா, அக்கா எல்லோரும் என்னிடம் பிரியமாகவே இருக்கிறார்கள். என் இஷ்டப் படியே எல்லாம் கொடுக்கிறார்கள். கூடவிளையாடுவதற்கும் எத்தனையோ பிள்ளைகள் இருக்கிறார்கள். ஒரு நாள் எங்கள் எல்லோரையும் மிருகக் காட்சிச்சாலைக்குக் கூட்டிக்கொண்டு போய் சிங்கம், புலி, கரடி எல்லாம் காண்பித்தார்கள். இன்னொரு நாள் நாடகம் பார்க்க அழைத்துக் கொண்டு போனார்கள். எந்தப் பிள்ளை அழுதாலும் உடனே ஒரு அக்கா ஓடிவந்து ஆறுதல் சொல்லிச் சமாதானப்படுத்துகிறாள். எங்கள் எல்லோருக்கும் ஒரே நிறமுள்ள சட்டை பாவாடை. எங்களையெல்லாம் குளிப்பாட்டிவிடுவதற்கு வேலையாட்கள். வரிசையாக உட்கார்ந்துதான் நாங்கள் சாப்பிடவேண்டும். இந்த இடம் எனக்கு ரொம்பப் பிடித்துப்போய்விட்டது.

அப்பாவையும் அண்ணனையும் பார்க்கவேண்டுமென்று சிலவேளை ஆசை தோன்றுகிறது. இதைப்பற்றி இங்குள்ள பெரிய அம்மாவிடம் சொன்னால் வேறு ஏதாவது சொல்லி என்னை ஏமாற்றிவிடுகிறார்கள்.' பல தடவை இப்படி அவர்கள் ஏமாற்றிவிட்டதனால் எனக்கு அப்பாவையும் அண்ணனையும் மறந்துவிட்டது. நான் நன்றாகப் பாடம் படிக்கிறேனென்று வாத்திச்சி அக்கா எனக்குப்

பொம்மையெல்லாம் கொடுத்திருக்கிறாள். எனக்கென்று ஒரு பெட்டிகூடக் கொடுத்திருக்கிறார்கள். அதில் என் சட்டை, பாவாடை, சிலேட்டு, புஸ்தகம், பென்சில் பொம்மை, பாசி, எல்லாம் பத்திரமாக வைத்திருக்கிறேன். சாயந்திரம் தோட்டத்தில் நாங்கள் எத்தனையோ விளையாட்டுக்கள் விளையாடுவோம். எங்களுக்காக ஊஞ்சல்கள் கட்டிவைத்திருக்கிறார்கள். வாத்தியாரம்மாகூட எங்களோடு சேர்ந்து கண்ணுமூச்சி விளையாடுவாள். மணி அடித்தவுடன் நாங்கள் எல்லோரும் ஒழுங்காக அவரவர்கள் இருப்பிடத்திற்குப் போய்விடவேண்டும். சில வேளைகளில் எங்களைப் பார்ப்பதற்கு வெளியிலிருந்து ஆட்கள் வருவார்கள். அவர்கள் எங்களுக்கு ஏதாவது தின்பண்டங்கள் வாங்கிவருவதுண்டு. வாத்திச்சி அக்காள் தின்பண்டங்களை ஒவ்வொரு பிள்ளைக்கும் சமமான பங்காக வரிசையாகக் கொண்டுவந்து கொடுப்பாள்.

இங்குள்ள எல்லோருமே என்னிடம் ரெம்பப் பிரியமாக இருக்கிறார்கள். தினமும் ராத்திரி மீனு அக்காள் எங்களுக்குக் கதை சொல்லுவாள். மீனு அக்காளுக்கு என் மேல் ரொம்பப் பிரியம். என்னை விட்டுப் பிரியவே மாட்டாள். நான்கூட அவளுக்கு கதை சொல்லியிருக்கிறேன். நான் கதை சொல்லும்போது அவள் விழுந்து விழுந்து சிரிப்பாள். நான் கையையும் காலையும் ஆட்டிப் பயங்கரமான கதைகளையெல்லாம் அழகாக அபிநயத்தோடு சொல்லுகிறேனும். அது அவளுக்கு ரொம்பப் பிடிக்கிறதாம். அதற்காகத்தான் அவள் அப்படிச் சிரிக்கிறாளாம். அடிக்கடி என்னைக் கதை சொல்லச் சொல்வாள். எனக்கும் கதை சொல்வதற்கு ரொம்ப ஆசையாக இருக்கும். இங்கு வந்த நாள் முதல் நான் அழுவதே கிடையாது. அழக்கூட மறந்துபோய்விட்டது. அப்பாவையும் அண்ணையும்பற்றி இப்பொழுது எனக்கு நினைவே இல்லை.



நான் மூன்று வருஷங்களுக்கு முன் இருந்த நிலைமையையும், இப்பொழுதிருக்கும் நிலைமையையும் யோசித்துப் பார்த்தால், எனக்கே ஆச்சர்யமாக இருக்கிறது. அப்பொழுது தாயார் இறந்த வருத்தம் பணக்கஷ்டம், தங்கையைப் பிரிந்திருக்கவேண்டியதால் ஏற்பட்ட கவலை, தந்தையின் மனக்கஷ்டம், என் வேலைக் கஷ்டம். எல்லாம் ஒரே சோக நாடகமாக இருந்தது. கடவுள் செயலால் நான் இப்பொழுது சுகவாசியாக இருக்கிறேன்.

அப்பொழுது நான் ஒரு வேலையாளாக இருந்தேன். இப்போது ஒரு பூக்கடையின் முதலாளி ஸ்தானத்தில் இருக்கிறேன். என்னிடமே நாலு வேலையாட்கள் இருக்கிறார்கள். என் தகப்பனாருக்கு இப்பொழுது தோட்டத்தில் வேலையே கிடையாது. வீட்டில் அமைதியாக இருந்து, புராணங்களை வாசித்துக்கொண்டிருக்கிறார். அவருக்கு இந்தமாதிரி ஓய்வு கொடுத்தது என் மனதுக்கு மிகவும் ஆறுதலாக இருக்கிறது. இடைவிடாத உடலுழைப்பினாலும், மனக் கஷ்டத்தினாலும் அவர் ரொம்பவும் இளைத்துப் போய்விட்டார். அதனாலேயே இருமல் நோயும் அவரைப் பிடித்துக்கொண்டுவிட்டது. ஆனாலும், அவர் மனக்கவலையில்லாமல் சந்தோஷமாக இருக்கிறார். அதுவே போதுமானது.

தங்கை மோகனா இப்பொழுது என்னோடு இல்லையே என்று எனக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது. சொந்தமாக ஒரு வீடு வாங்கிவிட்டேன். சமையலுக்கும் ஆள் வைத்திருக்கிறேன். இப்பொழுது மோகனா இங்கிருந்தால் ஒருவருக்குமே கஷ்டமிராது. உள்ளூர்ப் பள்ளிக்கூடத்தில்

படிக்க வைக்கலாம். தகப்பனுரும் இம்மாதிரி சொல்லிச் சொல்லி அடிக்கடி என் தங்கையைப்பற்றி ஏக்கமடைவார்.

ஒரு சமயம் என் தங்கையைப் பார்ப்பதற்காக அவர் திருவனந்தபுரத்திற்குப் போயிருந்தார். அனுதாஸ்ரமத்துத் தலைவி மோகனுவைப் பார்ப்பதற்கு அனுமதி கொடுக்க மறுத்துவிட்டார்களாம். மோகனு தன் பெற்ருேர்களை மறந்து சந்தோஷமாக இருந்து வருகிருளாம். இந்தச் சமயத்தில் தகப்பனுரைக் கண்டு பேசிப்பழகினுல் அவளுடைய மனம் நிலைகுலைந்துவிடுமாம். படிப்பில் புத்தியே செல்லாமல் தகப்பனையே நினைத்து வருந்திக்கொண்டிருப்பாளாம். அவள் சந்தோஷமாக இருக்கவேண்டுமானுல் அவளைச்சேர்ந்த மனிதர்கள் ஒருவருமே அங்குவந்து அவளைப் பர்க்கக்கூடாதென்றும் சொல்லி அனுப்பிவிட்டார்களாம் அந்த ஆஸ்ரமத்துத் தலைவி. என் தகப்பனுருக்கும் அந்த அம்மாள் சொன்னது சரியென்று பட்டதனுல் மோகனுவைப் பாராமலே திரும்பி வந்துவிட்டாராம். எனக்கும் கூட ஆசையாகத்தானிருக்கிறது மோகனுவைப் பார்க்க வேண்டுமென்று. ஆனுல் ஆஸ்ரமத்துத் தலைவி அனுமதிக்க மாட்டார்களே என்ன செய்வது! ஆகையால் தங்கையைப் பார்த்துவர வேண்டுமென்ற ஆசையும் நிராசையாகிவிட்டது. விதியிருந்தால் எப்பொழுதாவது சந்திப்போம். இல்லையானுல் நாங்கள் அவளை விட்டுப்பிரிந்தஅன்றே என் உலகமும் அவள் உலகமும் வேருகிவிட்டது என்று நினைத்து நான் ஆறுதல் அடையவேண்டியதுதான். நான் அவளைப் பிரிந்தபோது ஆறுவயதுக் குழந்தை. இப்போது ஒன்பது வயதுப்பெண்ணுக இருப்பாள். அதாவது எதிர் வீட்டுப் பெண் லட்சுமியின் உயரம் இருப்பாள். ஆனுல் லெட்சுமியைப்போல அசடாக இருக்கமாட்டாள் என் தங்கை! தகப்பனுர் கூடச்சொன்னுரே மோகனு மிகவும் கெட்டிக்காரியாகப் படித்து வருகிருளென்று ஆஸ்ரமத்துத் தலைவி சொன்னதாக. நன்ருகப் படித்துப் பெரியவள் ஆகி ஏதாவது ஒரு பள்ளிக்கூடத்து உபாத்தியாயினி ஆவாள்.

அப்போதாவது அவள் இருக்குமிடத்தை அறிந்து அவளைச் சந்திக்க முடியுமா என்று பார்ப்போம். அந்தச் சமயம் நான் அவளுடைய அண்ணன் என்று சொன்னாலே அவள் ஆச்சரியமடைவாள். சிறு வயதில் நடந்ததெல்லாம் அவளுக்கு நினைவிருக்கவா போகிறது. அப்பொழுது நான் அவளைச் சந்திக்கும்படியான ஒரு ஆச்சரிய சம்பவம் நடக்கிறதோ என்னவோ பார்க்கலாம்.

தகப்பனாருக்கும் என் தங்கையைப்பற்றி இப்பொழுது அவ்வளவாகக் கவலை இல்லை. அவளைப் பார்க்கமுடியாதென்று நிச்சயமாகிவிட்டபின் அதைப்பற்றிச் சிந்திப்பானேன் என்று மறந்து வருகிறார். சொல்லப்போனால் அவர் இப்பொழுது கவலையேயின்றி ஆனந்தமாகவே இருக்கிறார் என்றுதான் சொல்லவேண்டும். பூஜையெல்லாம்கூட ஆரம்பித்திருக்கிறார். காலையில் வெகு சீக்கிரமாக எழுந்து வெந்நீர் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு பூஜை செய்ய உட்கார்ந்துவிடுவார். பூஜை முடிந்த உடனே சாப்பாடு. நானும் அவரோடு உட்கார்ந்து சாப்பிட்டால்தான் அவருக்குத் திருப்தி. சாப்பிடும்போது அரசியலைப்பற்றிக்கூட அவர் ஏதாவது தமாஷாகப் பேசுவார். ஏனென்றால் இப்பொழுது அவர் மூக்குக்கண்ணாடி மாட்டிக்கொண்டு தினமும் பத்திரிகை படித்துவருகிறார். குடும்பக் கவலையை ஓரளவுக்கு மறந்தால்தானே நாட்டைப்பற்றி நினைக்க முடிகிறது.

சாப்பாடு முடிந்ததும் நான் கடைக்குப் புறப்பட்டு விடுவேன். அவர் ஈசிச்சேரில் உட்கார்ந்து பத்திரிகை படிக்க ஆரம்பித்துவிடுவார். சில நாட்களில் நான் மத்தியானச் சாப்பாட்டிற்கு வரும்போதுகூடப் பத்திரிகை அவர் கையில் இருக்கும். பத்திரிகை படிப்பதில் அவருக்கு அவ்வளவு ஆசை! ஒரு எழுத்து விடாமல் படித்து விடுவார். விளம்பரங்களைக்கூட விடுவதில்லை. பக்கத்து வீட்டுப் பிள்ளைகள் வேறு அவரிடம் வந்து தாத்தா தாத்தா

என்று பிரியமாகப்பேசி விளையாடிக்கொண்டிருப்பார்கள். பிள்ளைகளோடு விளையாட்டுப் பேச்சுக்கள் பேசுவதில் அவருக்கு எவ்வளவோ ஆனந்தம். அவர்கள் வீட்டில் அம்மா அப்பா ஏதாவது சண்டை பிடித்தால் இந்தத் தாத்தாவிடம்தான் வந்து முறையிடுவது வழக்கம். பிள்ளைகளுக்கு இவர் சொல்லும் ஆறுதல்தான் ரொம்பப் பிடித்தமாயிருக்கும். தெருவில் தின்பண்டங்கள் விற்றால் இவர் அந்தப் பிள்ளைகளுக்கு வாங்கிக்கொடுப்பார்.

மத்தியானம் சிறிது நேரம் தூங்கிவிட்டுப் புராணங்களை ராகம் போட்டு வாசிக்க ஆரம்பித்து விடுவார். சாயங்காலம் ஆனதும், வீட்டுத் தோட்டத்தில் போய் ஏதாவது செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக்கொண்டிருப்பார். உடலோடு ஒட்டிய வழக்கம். சிறு காய்கறித் தோட்டம் ஒன்று வீட்டுக்குப் பின்னால் போட்டிருக்கிறார். அதில் விளைந்த காய்கறியென்றால் அவருக்கு ரொம்பப் பிரியம்: பூப்பறிக்கும் பழைய வழக்கமும் அவரை விடவில்லை. வாசல் பக்கம் ரெண்டு மல்லிகைச்செடி, ரோஜாச் செடி இவைகளையும் வைத்து வளர்க்கிறார்.

சில நாள் மாலை வேளையில் கைத்தடியை ஊன்றிக்கொண்டு உலாத்தப்போவார். எங்கள் கடைக்கும் அடிக்கடி வருவார். தான் கஷ்டப்பட்ட அதே கடைத்தெருவில் அவர் மகனாகிய நான் பெரிய புஷ்பக்கடை வைத்து நடத்தி வருவது அவருக்கு மிகவும் பெருமையாக இருக்கிறது. அவர் அடிக்கடி சொல்வார் "இதே கடைத்தெருவில் மாதம் 20 ரூபாய்கூட சம்பாதிக்க முடியாமல் நான் திண்டாடினேன். இப்போது ஏதோ கடவுள் செயலால் நமக்கு நன்றாக வியாபாரம் நடந்து வருகிறது" என்று. நான் மூன்று பூந்தோட்டங்களைச் சொந்தமாகவே வாங்கியிருக்கிறேன். இன்னும் நான்கு தோட்டங்களைக் குத்தகைக்கு எடுத்திருக்கிறேன். இந்த ஏழு தோட்டத்துப் பூக்களும் காலை 10 மணிக்குள் வர்ணபேதமுடைய மலைகள்போல

என் கடையில் வந்து குவிந்துவிடும். தோட்டங்களுக்கு என் அனுபவத்தின் மூலமாக உரம் வைத்துப் பாதுகாப்ப தனுல் திரட்சியான பூக்கள் ஏராளமாகக் கிடைத்து வரு கிறது. வெளித்தோட்டங்களிலிருந்தும் பூக்கள் வரும். பூக்கொண்டுவந்து போடுபவர்களுக்கும் என் வேலையாட் களுக்கும் என்மேல் ரொம்பப் பிரியம். நான் அவர்க ளுடைய கூலியைக் குறைப்பதில்லை. நானும் கூலிவேலை செய்து கஷ்டப்பட்டவன்தானே. வேலைக்காரர்களுடைய கஷ்டங்கள் எனக்கு நன்ருகத் தெரியும். ஆகையால் அவர்களை என்னுல் கூடியவரை திருப்திசெய்வேன். வியா பாரத்தில் கொள்ளை லாபமடிக்கவேண்டுமென்று நான் எண்ணுவதில்லை. அதனுல் சின்ன வியாபாரிகள் வாடிக் கைக்காரர்கள் எல்லோரும் புஷ்பம் வாங்குவதற்கு என் கடையைத்தான் தேடி வருவார்கள். வெளியூர்களுக்கும் அடிக்கடி ஏராளமாகப் பூமாலைகள் கட்டி அனுப்பி வரு கிறேன். நான் முதலாளி ஸ்தானத்தில் அமர்ந்திருந்தாலும் நெருக்கடி ஏற்படும்போது நானும் வேலையாட்களுடன் உட்கார்ந்து மாலை கட்டுவேன். இதனுல் வேலைக்காரர் களுக்கு என்னிடமிருந்த மதிப்பும் பிரியமும் அதிகமாவதை நான் கண்டிருக்கிறேன்.

கோவில்களில் திருநாள் வந்துவிட்டாலோ அல்லது பெரிய வீடுகளில் கல்யாணங்கள் வந்துவிட்டாலோ இந்த முருகன் தன் வீட்டுக்குப்போகக்கூட நேரமிராது. நானே நேரில் போய் பூ ஜோடனை செய்தால்தான் அவர்களுக்குத் திருப்தி ஏற்படும். நான் என்னுடைய அசௌகரியத்தைக் கூடப் பாராமல் அவர்களைத் திருப்திப்படுத்த முயற்சிப் பேன். புஷ்பரதம், அல்லது புஷ்பப்பல்லக்கு அலங்கரித்து விட்டு எதிரே நின்று பார்த்தேனுனல் எனக்கே ஆனந்தமாக இருக்கும். நூதனமான சித்திர வேலைகளையும் அமைத்து நான் அவர்களை மகிழ்விப்பேன். வாடிக்கைக்காரர்களின் திருப்திதான் எனக்குமேலான ஆஸ்தி. அவர்கள் என் வேலைத்திறமையைப் பார்த்துவிட்டு புஷ்பவிலை, ஜோட

ளைக் கூலி இவைகளோடு சந்தோஷத்தினுல் எனக்குத் தனியாகச் சன்மானமும் கொடுப்பார்கள்.

எனக்கு வியாபாரத்தில் மாதம் சராசரி ஐந்நூறு ரூபாய்வரை கிடைத்து வந்ததென்றுல் நீங்கள் ஆச்சரியப் படுவீர்கள். வருஷ ஆதாயத்தை என் கடைக்கணக்குப் புஸ்தகத்தில் பார்த்தபோது எனக்கே ஆச்சரியமாக இருந் தது. நாகர்கோவிலில் மற்றப் புஷ்ப வியாபாரிகளைவிட எனக்குத்தான் அதிக லாபம். இதனுல் சிலருக்கு என் மேல் பொருமைகூட ஏற்படும். ஆனுல் அவர்கள் பொரு மைப் படும்படி விடுவது கிடையாது. அவர்களுக்குப் பொருமை ஏற்படுவது சகஜம். ஆகையால் அவர்களிடமே வலியச் சிநேகிதம் பண்ணிக்கொண்டு அவர்களுக்கு அதிக வருமானம் கிடைக்கும் வழிகளைச் சொல்வேன். இதனுல் அவர்களும்கூட என்னிடம் பிரியமாக இருந்தார்களே யொழிய என்னை வெறுக்கவில்லை. பிறரிடம் இனிமையாக் கப் பேசினுல், அவர்கள் நம்மீதுப் பிரியமாக இல்லாமல் வேறு எப்படி இருக்கமுடியும்? ‘அன்பின் வழியது உயிர் நிலை’ என்று வெகு அழகாகத்தான் குறளாசிரியர் கூறி யிருக்கிறுர். நல் வாழ்க்கைக்கு இன்றியமையாத வழி காட்டி, திருக்குறள்தான். குறள் மூலமாக நாம் உலகத் தையே காணமுடிகிறது. மக்களின் உள்ளங்களையே காண முடிகிறது.

அப்பாவிடம் சில அருமையான குறள்களை எடுத்துச் சொல்லுவேன். நான் திருக்குறளை இவ்வளவு கவனமாகப் படிப்பதைப்பற்றி அவருக்கு ரொம்ப திருப்தி. “மகன் தந்தைக்காற்றும் உதவி” யை நான் பரிபூர்ணமாகச் செய்து விட்டேனும். இன்னும் ஒன்றே ஒன்றுதான் பாக்கியிருக்கிறதாம். அதாவது அவர் சொற்படி நான் சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டுமாம். இருபது வயதிற்குள்ளாகவா கலியாணம்! இன்னும் நாலைந்து வருஷங்கள் கழித்துத்தான் நான் கலியாணம்

செய்துகொள்ளப் போகிறேன். இப்பொழுதே இங்கு பெண்ணைப் பெற்றிருப்பவர்கள் என்னிடம் கலியாணப் பேச்சை பேச வருகிறார்கள்.



## 23 சாரதாம்பாள்

வைத்தியர் சொல்லியபடி பல ஊர்களைச் சுற்றிப் பார்த்துவருவது மனதிற்கு எவ்வளவோ ஆறுதலாகத்தான் இருக்கிறது. புதிய புதிய காட்சிகள். புதிய புதிய மனிதர்கள்! புதிய புதிய பழக்கவழக்கங்கள்; மனோபாவங்கள். பல ஊர்களை பார்த்தாகிவிட்டது. முக்கடலும் சேர்ந்து கொந்தளிக்கும் கன்னியாகுமரியின் காட்சி என் மனதிற்குள்ளேயே நிற்கிறது. அங்கு மூன்றுநாட்கள் தங்கினேன். அங்கேயே இருந்துவிடலாமா என்றுகூடத் தோன்றுகிறது. சூர்யோதயமும் சந்திரோதயமும் அங்கு தனியழகுடன் விளங்குகிறது. அங்கு வீசும் காற்றும் கடலலைகளும் இந்தியநாட்டை ஆவலோடுவந்து தழுவுவதுபோல இருக்கிறது. கடலோரம் குமரி அன்னையின் கோவில் அமைந்திருப்பது கண்கொள்ளாக்காட்சி.

அங்கிருந்து திருவனந்தபுரத்திற்கு வந்து நான்கு நாட்கள் ஆகிறது. இங்கும் பல அதிசயங்களைப் பார்த்தேன். பெரிய மிருகக்காட்சிசாலை! அழகான கடற்கரை. எங்கும் தோப்பும் துரவுமாகப் பச்சைப் பசேலென்றிருக்கிறது. மேற்குக் கடற்கரைப் பிரதேசம் முழுவதுமே மிகவும் செழிப்பாகத்தானிருக்கிறது. மலைவளமும் கடல்வளமும் சேர்ந்துவிட்டால் கேட்பானேன்! இங்குள்ள ஜனங்களின் மனப்பாங்கும் பளிங்கு போலக் கபடமற்றதாக இருக்கிறது. எளிய வாழ்க்கை! இங்குள்ள சாதாரணப் பெண்கூட ரதிபோல அழகாயிருக்கிறாள். இந்தப் பெண்களின் தந்தம்போன்ற உடலழகைப் பளீரென்று எடுத்துக் காட்டுவதற்குக் கன்னங்கரேலென்று பள பளப்பான கூந்தலும் அமைந்திருக்கிறது. சுந்தரியின் கூந்தலும் இப்படித்தான் ரொம்ப அழகாக இருந்தது. அதைப்பற்றியெல்லாம் நான் இப்பொழுது நினைத்து என்ன பயன்?

நேற்று அந்த அனுதாஸ்ரமத்திற்குப் போய்விட்டு வந்த பிறகு எனக்கு இதைப்பற்றியே நினைப்பாக இருக்கிறது. அந்தப் பெண்ணைப் பார்த்ததுமுதல் ஆஸ்ரமத்தில் அவளை யேதான் பார்த்துக்கொண்டிருந்தேன். அவள் பெயர் மோகனுவாம். இப்படிப்பட்ட அழகான குழந்தை அனுதை யாகவா இங்குகொண்டுவந்து சேர்க்கப்படவேண்டும். யோக்யதையும் செல்வமும் உள்ள உயர்ந்த குடும்பத்தில் இருக்கவேண்டிய பெண் அனுதாஸ்ரமத்தின் ஆதரவில் வளர்கிறது. யாரோ நாகர் கோவிலிலுள்ள ஒரு பண்டா ரம், வளர்க்க வழியில்லை என்று கொண்டுவந்து விட்டானும். அவன் இந்தக் குழந்தைக்குச் சொந்தக்காரனுக இருக்க மாட்டான். எங்கேயோ பணக்காரர் வீட்டிலிருந்து நகை யோடு குழந்தையைத் திருடிக் கொண்டுவந்திருப்பான். மேலே கிடக்கும் நகையைக் கழட்டிக்கொண்டு இந்த மாதிரிப் பொய் சொல்லி அதை அனுதாஸ்ரமத்தில் தள்ளி விட்டுப் போய்விட்டான் போலிருக்கிறது. குழந்தைக்கு ஒன்றும் கெடுதல் செய்யாமல் ஆஸ்ரமத்திலாவது கொண்டு சேர்த்தானே! அந்தமட்டில் அவன் நல்லவன்தான்.

மோகனு! பெயரே மனோகரமாக இருக்கிறதே! என்ன அழகாகப் பேசுகிறது அந்தப்பெண். குரல் கணீ ரென்று இருக்கிறது. அதன் பேச்சு என் காதுகளில் ஒலித் துக்கொண்டே இருக்கிறது. எல்லாவற்றையும்விட அதன் முகமும், கைகளும், கைவிரல்களும் நாட்டியத்திற்கு ஏற்ற மாதிரி மிருதுவாகவும் துடி துடிப்புடனும் அமைந்திருக் கின்றன. விரல்களெல்லாம் தந்தக் குச்சிகள்போல ஒன்றுசேர்ந்து உணர்ச்சியோடு துவளுகின்றன. அவள் என்ன பேசினுலும் அத்தனை பாவத்தையும் காட்டியல் லவா பேசுகிருள். அவள் பேசுவதையும் ஓடி விளையாடு வதையும் பார்த்துக்கொண்டே சாயங்காலம் வெகுநேரம் வரை ஆஸ்ரமத்திலேயே இருந்துவிட்டேன். மோகனு தன் வாத்திச்சியம்மாளிடம் கதைசொன்னபோது, பயங் கரம், கோபம், சாந்தம், ஏளனம் இந்த மாதிரி உணர்ச்சி

களையெல்லாம் எவ்வளவு சரளமாக வெளியிடுகிருள்! பூர்வ ஞானம் இருந்தாலொழிய ஒருபெண் இவ்வளவு கெட்டிக் காரத்தனமாக இருக்கமுடியாது.

ஆஸ்ரமத்திலுள்ள ஆசிரியைகள் தலைவி எல்லோருமே மோகனுவிடம் ரொம்பப் பிரியமாகத்தான் இருக்கிருர்கள். நான் திரும்பத் திரும்ப அந்தப் பெண் மோகனுவைப் பற்றியே ஏதாவது சொல்லிக்கொண்டிருந்ததைக்கண்டு ஆஸ்ரமத்தலைவி ரொம்ப ஆச்சரியப்பட்டாள். கடைசியில் அந்த அம்மாளே கேட்டுவிட்டாள் "நீங்கள் அந்தப் பெண்ணினுடைய அபிநயங்களைப்பற்றியே பேசிக் கொண்டிருக்கிறீர்களே. உங்களுக்கு அபிநயத்தில் ஆவல் அதிகமோ?" என்று. நான் என் கதையைச் சுருக்கமாகச் சொன்னேன். சுந்தரி என்னைப் பரிதவிக்க விட்டுவிட்டு ஓடிப்போனதையெல்லாம் நயமாக மறைத்து "அவள் ஒரு கணவனை மணந்துகொண்டு நாட்டியக் கலையையே விட்டு விட்டாள். அதனுல் என் நாட்டியக் கலையை ஒரு பெண் ணுக்குக் கற்றுக்கொடுத்துவிடவேண்டும் என்று ஆவல்" என்று என் உள்ளத்தில் உள்ளதை அப்படியே சொல்லி விட்டேன். ஆஸ்ரமத் தலைவிக்கும் நாட்டியக் கலையில் ரொம்ப ஆர்வம் உண்டென்று தெரிந்தது. நான் என் பெயரைச் சொன்னவுடனேயே "அந்தக்காலத்தில் உங்கள் நாட்டியத்தைப்பற்றி நான் ரொம்பக் கேள்விப்பட்டிருக் கிறேன்" என்று சந்தோஷப்பட்டு என்னை மிகவும் உப சரித்தாள். நாளை வருவதாகச் சொல்லிவிட்டு வந்திருக் கிறேன். இன்று சீக்கிரமாகவே அங்கு போகவேண்டும்.

நேற்று நான் சொல்லியதிலிருந்து மோகனுவை நான் நாட்டியக்கலை பயிற்றுவிப்பதற்காக விரும்பி வேண்டு கிறேன் என்பதை ஆஸ்ரமத்துத் தலைவி நன்ருகப் புரிந்து கொண்டிருப்பாள். ஆஸ்ரமத்திலுள்ள பிள்ளைகளை மற் றவர்கள் எடுத்துக்கொண்டுபோய் வளர்த்துக்கொள்வ தற்கு அனுமதி உண்டா என்றெல்லாம் பொதுப்படை யாகவே நான் விஷயங்களைக் கிரகித்தேன்.

குழந்தையே இல்லாதவர்கள் எத்தனையோபேர் வளர்ப்பதற்குக் குழந்தைகள் வேண்டுமென்று கேட்ப துண்டாம். அவர்களுக்கெல்லாம் கொடுக்க முடியா தென்று கண்டிப்பாகவே சொல்லிவிடுவார்களாம். செல் லப்பிள்ளைகளாக வளர்த்து அவர்களைக் கல்வியறிவற்ற மூடமாக்கி விடுவார்கள் என்பது ஆஸ்ரமத்திலுள்ளவர் களின் எண்ணம்.

ரொம்ப அபூர்வமாக, தகுந்த முகாந்திரத்தின்மேல், அவர்களுக்குச் சரியென்று தோன்றும் பட்சத்தில், ஆஸ்ர மத்திலுள்ள பிள்ளைகளை மற்றவர்களிடம் கொடுப்பதும் உண்டு என்று அந்த அம்மாள் சொன்னது எனக்கு ஒரு நம்பிக்கையைக் கொடுத்தது. அதுபோல ஒன்றிரண்டு குழந்தைகளை ஆஸ்ரமத்திலிருந்து அனுப்பியும் இருக்கிறார் களாம். யாரோ ஒரு ஜமீன்தார் தனக்குப்பின் வாரீசு இல்லையென்று ஆஸ்ரமத்தாரிடம் அனுமதிபெற்று இங் குள்ள ஒரு பிள்ளையை ஸ்வீகாரமாக எடுத்துக்கொண்டு போய் வளர்த்து வருகிறாராம். அந்த ஜமீன்தார் ஏற்கனவே ஆஸ்ரமத்திற்கு ஏராளமான நன்கொடை கொடுத்திருந்தா ராம். இதை உத்தேசித்தே தங்கள் ஆஸ்ரமத்திலுள்ள ஒரு பிள்ளையை ஜமீன்தாருக்குக் கொடுத்தார்களாம் அவர்கள்.

ஒரு குழந்தையை ஆஸ்ரமத்திலிருந்து மற்றவர்களி டம் கொடுக்கவேண்டுமானால் அவர்கள் பல தடவை கூடி ஆலோசிப்பார்களாம். ஆஸ்ரமத்தைச்சேர்ந்த யாவரும் சம்மதித்தால்தான் குழந்தையை அனுப்புவார்களாம். இதெல்லாம் ஆஸ்ரமத்தின் சட்டங்கள் என்று அந்த அம் மாள் பொதுப்படையாகவே எடுத்துச்சொன்னாள்.

நாளைக்கு ஒரு முக்கியமான விஷயத்தைப்பற்றி உங்க ளோடு வெகு நேரம் பேசவேண்டுமென்று சொல்லிவிட்டு வந்திருக்கிறேனல்லவா! என் குறைகளையெல்லாம் இன்றும் அந்த அம்மாளிடம் எடுத்துச்சொல்லி எப்படியாவது

மோகனவை இங்கிருந்து வாங்கிக்கொண்டுபோய் வளர்க்க வேண்டும். இதற்காக நான் எத்தனை நாள் தங்கவேண்டியிருந்தாலும் பரவாயில்லை. ஆஸ்ரமத்திற்கு நான் ஐயாயிரம் ரூபாய் நன்கொடையளித்தாலாவது என் ஆவலை அவர்கள் தெரிந்துகொள்ளமாட்டார்களா! தலைவி மிகவும் கருணையுள்ளவளாக இருக்கிருள். நான் நாட்டியக் கலையைப் பயிற்றுவிப்பதற்காகத்தானே மோகனவைக் கேட்கிறேன். நாட்டியக்கலைக்கென்றே அந்தப் பெண்ணின் உடல்கட்டு அமைந்திருக்கிறது. புத்திசாலியாகவும் இருக்கிருள். சுந்தரியைவிட விரைவாகவே இந்தப்பெண் நாட்டியத்தில் பயிற்சிபெறுவாள் என்று தெரிகிறது. நான் எவ்வளவு காலம் நாட்டியம் ஆடியிருக்கிறேன். எவ்வளவு காலம் நாட்டியத்தைக் கற்றுக்கொடுத்திருக்கிறேன்! இந்த அனுபவங்களின் மூலம்தான் நான் இவ்வளவு துணிவாகச் சொல்கிறேன் என் நாட்டியத் திறமையைப் போதிக்க மோகனவைப்போல வேறுபெண் கிடைப்பது அரிது என்று. அந்தப்பெண் என்னேடு எவ்வளவு பிரியமாகப் பேசினுள். கிளி கொஞ்சுவதுபோல இருக்கிறது அவள் பேச்சு! இப்பொழுது பத்துப்பதினெரு வயதுதான் இருக்கும். இன்னும் இரண்டு மூன்று வருஷத்திற்குள் நன்ருக நாட்டியமும் சங்கீதமும் கற்றுக் கொண்டுவிடுவாள். அப்புறம் எனக்குக் கவலையே இல்லை. சுந்தரியைப் பற்றி எனக்கு நினைப்பு வராது. நான் தலையைக் கீழே போடும்வரை நிம்மதியாக வாழலாம். என் கலையை வரப்போகும் தலைமுறையிலுள்ள ஒரு தகுந்த பாத்திரத்தினிடம் ஒப்படைத்துவிட்டேன் என்ற ஆத்மதிருப்தியும் ஏற்பட்டுவிடும்.

மோகனவை எண்ணிக்கொண்டு நான் என்னவெல்லாமோ மனக்கோட்டை கட்டுகிறேன். ஒரு வேளை ஆஸ்ரமத்துத் தலைவி அவளை எனக்குக் கொடுக்க முடியாதென்று மறுத்துவிட்டால்! மறுப்பதற்குக் காரணமே இல்லை. அவர்கள் சொன்ன நிபந்தனையின்படி ஒரு

கலையைக் கற்றுக்கொடுப்பதற்காகத்தானே அந்தப் பெண்ணைக் கேட்கிறேன். ஆஸ்ரமத்திற்குத் தாராளமாக நன்கொடையும் கொடுக்க உத்தேசித்திருக்கிறேன். அந்த அம்மாளும் என் நடனத்தைப்பற்றி முன்னமே நன்றாகக் கேள்விப்பட்டிருக்கிறார்கள். "நாளை அவசியம் வரவேண்டும். உங்கள் அபிப்பிராயங்களை என்னிடம் தாராளமாகச் சொல்லலாம்" என்றெல்லாம் கூடச் சொன்னார்களே. என்னோடு வந்து வசிப்பதற்கு அந்தப் பெண்ணுக்கும் இஷ்டம் இருக்கலாம். சிறுபெண்தானே! ஆஸ்ரமத்திலேயே இருப்பதைவிட வெளியுலகத்தில் சேர்ந்திருக்க ஆசைப்படத்தான் செய்யும். நான் காட்டப்போகும் அன்பிலிருந்து அதுவும் என்னுடன் பிரியமாக இருக்கும். இப்பொழுது சொந்தக்காரர்களை மறந்துவிட்டுத்தானே ஆஸ்ரமத்தில் இருக்கிறது. இதுபோல் ஆஸ்ரமத்தை மறந்துவிட்டு என்னுடன் சந்தோஷமாக இருக்காதா?

*　　　　*　　　　*

என் நம்பிக்கை வீண்போகவில்லை. நான் இன்று ஆஸ்ரமத்திற்குள் போனவுடனேயே தலைவி என்னைப் பிரமாதமாக வரவேற்று உபசரித்தார்கள். மோகனாவும் என் பக்கத்திலேயே உட்கார்ந்துகொண்டாள். நான் தயங்கித் தயங்கித்தான் பேச முடிந்தது. "மோகனாவை நான் வளர்ப்புக் குழந்தையாக எடுத்துக்கொள்ள விரும்புகிறேன்" என்று ஆரம்பிப்பதற்குள்ளேயே "அம்மா, இன்று இதற்காகவே நீங்கள் வருவீர்கள் என்று எங்களுக்குத் தெரியும். நான் இங்குள்ள ஆசிரியைகளிடமெல்லாம் இதைப்பற்றித் தனியாக அபிப்பிராயம் கேட்டேன். மோகனாவைத் தங்களுக்குக் கொடுப்பதுபற்றி ஒருவருமே ஆக்ஷேபிக்கவில்லை" என்று தலைவி சொன்னார்கள். உடனே என் உடம்பு ஆனந்தத்தால் சிலிர்த்தது. மோகனாவிடம்கூட இதைப்பற்றிக் கேட்டார்களாம். தலைவியின் சொல்படி கேட்பதாகச் சொன்னாளாம் அவள். சிறு வயதிலேயே எவ்வளவு அருமையான குணம். நான் போய் உட்கார்ந்தவுடன் மோகனா

என்னையே உற்று உற்றுப் பார்த்துக்கொண்டிருந்ததன் காரணம் இப்பொழுதுதான் புரிந்தது. அவள் இந்தமாதிரி பதில் சொன்னாள் என்று கேட்டதும் அவளை வாரியெடுத்து முத்தமிட்டேன். ஏழைக்குப் புதையல் கிடைத்ததுபோல இருந்தது நான் மோகனாவைப்பெற்றது. என்ன பேசுவது, அவர்களுக்கு எப்படி நன்றி செலுத்துவது என்றே எனக்கு விளங்கவில்லை. "என் ஆவலைப் பூர்த்திசெய்த தாங்கள் நீடுழிகாலம் வாழவேண்டும். இந்த ஆஸ்ரமம் பெருகித் தழைத்து வளரவேண்டும். ஊருக்குப்போன மறுநாளே ஆஸ்ரமத்திற்கு நன்கொடையாக நான் ஐயாயிரம் ரூபாய்க் குச்செக் அனுப்பப் போகிறேன்." என்று படபடவென்று சொன்னேன். அவ்வளவு சந்தோஷ ஆவேசத்தை நான் ஒருபோதுமே காட்டியது கிடையாது. நான் இந்த உலகத்தில் இருப்பதாகவே உணரவில்லை. மோகனாவைப் பெறுவதன் மூலம் என் லட்சியமே கைகூடிவிட்டதென்று சொல்லலாம். என் சொத்துக்களையெல்லாம் மோகனாவின் பேருக்கே எழுதிவைக்கப் போகிறேன். மோகனா நாட்டியம் கற்றுப் பெரியவளாகி ஒரு அரங்கில் நாட்டியமாடுவதை என் கண்களால் பார்க்கவேண்டும். அவ்வளவுதான் நான் இந்த ஜென்மத்தில் விரும்புவது. இதை மோகனா நிச்சயமாக நிறைவேற்றி வைப்பாள்.

மூன்று நாளில் மோகனாவை என்னோடு அனுப்பி விடுவார்களாம். நான் அதுவரை ஆஸ்ரமத்திலேயே இருக்கப் போகிறேன்.



பணக்காரன் ஆனால், கஷ்டங்களும் அதிகமாகத்தான் வரும்போலிருக்கிறது. இந்த வருஷம் எனக்குக் கல்யாணம் நடத்திவிட வேண்டுமென்று பெண் வீட்டுக்காரர்கள் என்மீது வலை வீசி நெருக்கிக் கொண்டிருக்கிறார்கள். யூனியன் போர்டுக்கு நானே தலைவனாக வேண்டுமென்று ஊராரின் ஏகோபித்த வேண்டுதல். பெரிய இடங்களில் தங்களுக்குக் காரியம் ஆகவேண்டுமென்று என்னிடம் சிபார்சுக்காக வருகிறவர்களின் தொல்லை வேறு. என் கடையைப்பற்றி விளம்பரப்படுத்த வேண்டுமென்று வரும் பத்திரிகாசிரியர்களின் கோஷ்டி வேறு. பூக்கடைக்கு விளம்பரம் எதற்கு?

என்னுடைய நல்ல குணம் கூடக் கொஞ்சம் கொஞ்சமாகக் கெட்டு வருவதாகத் தோன்றுகிறது. இல்லையென்றால் நான் இரண்டொரு நண்பர்களை அப்படிக் கோபித்திருப்பேனா! முதலில் கோபித்து விட்டு அப்புறம் வருந்தினேன். கோபப்படாமலே இருந்திருந்தால் இந்த வருத்தம் எதற்கு?

என் தகப்பனார் மரணப் படுக்கையில் படுத்திருக்கும் போது பெண் வீட்டார்கள் என்னிடம் வந்து கல்யாணப் பேச்சைப் பேசினதால் எனக்குக் கோபம் வரத்தான் செய்தது. என் கல்யாணத்தைப் பாராமலே தகப்பனார் காலமாகி விட்டார். எனக்குப் போன வருஷமே கல்யாணம் செய்து வைத்துவிட வேண்டுமென்று அவர் துடிதுடித்தார். இவ்வளவு சீக்கிரமாக அவர் இறந்து விடுவார் என்று முன்னமே தெரிந்திருந்தால், அவரைத் திருப்திப் படுத்துவதற்காகவாவது இதற்குள் நான் கல்யாணம் செய்து கொண்டிருப்பேன். இருமல் வியாதி திடீரென்று

அவர் தொண்டையைப் பிடித்து இப்படிக் கொன்று விடு மென்று நான் எதிர்பார்க்கவில்லை. வைத்தியரும் எவ்வ ளவோ முயற்சி செய்துதான் பார்த்தார். போகிற உயி ரைத் தடுத்து நிறுத்த முடியுமா? இறப்பதற்கு நாலு நாட்களுக்கு முன்பு தான் கடைக்குக்கூட வந்திருந்தார். ஏதோ தொண்டையை அடைக்கிறதென்று படுத்தார். மூச்சுவிட முடியாமல் திணறினர். அவ்வளவுதான். அந்த மூச்சடைப்பே அவருடைய கடைசி வியாதியாக அமைந்து விட்டது.

தன் உயிர் போய்விடுமென்று அவருக்கு நன்றுகத் தெரியும் போலிருக்கிறது. கடைசி நாளன்று தழதழத்த குரலில் என்னேடு ஒரு மணி நேரம் பேசினர். அவ ருடைய மனம் திருப்தியடைந்து விட்டதாம். அடுத்த வருஷமாவது நான் கட்டாயம் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமாம். நான் எந்தப் பெண்ணை மணந்து கொள்ள வேண்டுமென்பதைக்கூடச் சொல்லி விட்டார்.

கடைசியில் என் தங்கை மோகனுவைப்பற்றி அவ ருக்கு எண்ணமுண்டாயிற்று. கூடுமானவரை முயற்சி செய்து நான் அவளை அனுதாஸ்ரமத்திலிருந்து அழைத்து வந்து தகுந்த புருஷனைப் பார்த்து மணம் செய்விக்க வேண்டுமாம். ஆஸ்ரமத் தலைவி அவளை அனுப்பச் சம்ம திக்காவிட்டால் அதற்காக வருத்தப்பட வேண்டாம் என்றும் சொன்னர்.

தகப்பனர் இறந்த அன்று பழையகால நினைவுகள் ஒன்றன்பின் ஒன்ருக என் மனதில் தோன்ற ஆரம்பித்தது. நான் சிறுவனுகப் பள்ளிக்கூடம் போக ஆரம்பித்தது. மோகனு பிறந்தது. தந்தை பணக்கஷ்டத்தினல் படாத கஷ்டம் பட்டது. தாயார் இறந்தது. தங்கையைக் கொண்டு அனுதாஸ்ரமத்தில் சேர்த்தது. பின்பு நானும் தந்தையும் கஷ்டப்பட்டு உழைத்துப் பணம் சேர்த்துக்

கடன் அடைத்துக் கடை வைத்து வீடு தோட்டங்கள் வாங்கினது. இப்பொழுது நான் உழைக்காமலே ஏராள மாகப் பணம் சம்பாதிப்பது. எல்லாம் கோர்வையாக என் மனத்திரையில் தோன்றி மறைந்தன. ஊரார் என் தகப்ப னுக்குச் செய்ய வேண்டிய கிரியைகளையெல்லாம் விமரி சையாகச் செய்ய வேண்டுமென்றார்கள். வயதான கிழவ ரானதால் அவருடைய சாவை ஒரு கொண்டாட்டம்போல நடத்த வேண்டுமென்பது அவர்களுடைய விருப்பம்.

என் மனம் அவரைக் கிழவராக எண்ணவில்லை. எத் தனையோ வருஷகாலம் வறுமையோடும் கவலைகளோடும் போரிட்ட மனிதர் இன்னும் சில காலத்துக்காவது சுக வாழ்க்கையில் இருந்து அனுபவிக்காமல் போய் விட்டாரே என்று எனக்கு மிகவும் வருத்தம். நான் கடை வைத்து ஐந்தாறு வருஷமாகிறது. இந்த ஐந்தாறு வருஷமாகத் தான் அவருக்கும் வாழ்க்கையில் ஒரு அமைதி கிடைத்தது. இன்னும் நாலைந்து வருஷம் இப்படியே அவர் சுகமாக இருந்தாரானால் எனக்கு எவ்வளவோ திருப்தியாக இருக் கும். ஆனால் விதியென்று ஒன்றிருக்கிறதே!

அன்று இந்த மாதிரி நான் பல விதமாக வருத்தப் பட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பதற்குள் என் தகப்பனார் சாவைக் கொண்டாடுவதற்காக வீட்டுக்கு வெளியே மேள தாளங்களும் கும்மாளங்களும் சேர்ந்து ஏகப்பட்ட இரைச் சலாக ஆகிவிட்டது.

நண்பர்களுடைய இஷ்டத்திற்கு மாறாக நடக்க நான் விரும்புவதே இல்லை. "உங்கள் தகப்பனாருடைய சாவைப் பிரமாதமாகக் கொண்டாடவேண்டும். நான் அதற்கு ஏற் பாடு செய்யட்டுமா?" என்று ஒரு நண்பர் கேட்டார். "உங்கள் இஷ்டம்போல் செய்யுங்கள்" என்று சொல்லி விட்டேன். அவ்வளவுதான். அவர் இழவு வீட்டைக் கல்யாண வீடு மாதிரி ஆக்கிவிட்டார். நான் பணக்கார

ஞன பிறகு என் வீட்டில் இதுதானே முதல் விசேஷம். என் நண்பர்களையெல்லாம் என் வீட்டிற்குமுன் பார்த்த போதுதான் அவர்கள் என்மீது வைத்திருந்த அன்பு நன்ருகத் தெரியவந்தது. என் நண்பர்கள் விரும்பியபடியே என் தகப்பஞரின் சவத்தைச் சிறப்பாகவே அடக்கம் செய்தேன்.

இப்பொழுது என் வீட்டைப் பார்த்தால் வெறிச் சென்றிருக்கிறது. எனது ஒரே உறவான தந்தையும் காலமாகிவிட்டார். தற்சமயம் நான் ஒரு அஞதை. என் தங்கையும் ஒரு அஞதையாக அஞதாஸ்ரமத்தில் வளர்கிருள். தந்தை இறந்ததைப்பற்றி அவளுக்கு ஒன்றுமே தெரியாது. இப்பொழுது எங்களைப்பற்றிய நினைப்பே அவளுக்கு இராது. அவள் உலகம் வேருகிவிட்டது. ஐந்து வயதில் பிரிந்தவளுக்கு எங்களைப்பற்றி என்ன நினைப்பு இருக்கும். தங்கையின் பாசம் எனக்கு நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. இங்கு அழைத்துவரவேண்டுமென்று ஆவலாக இருக்கிறது. தந்தையின் கடைசி விருப்பமும் அதுதானே! "மோகஞவை அஞதாஸ்ரமத்திலிருந்து அழைத்துவந்து அவளுக்குக் கல்யாணம் செய்துவைக்க முயற்சிசெய்" என்ருர்.

கடை திறந்து பதினைந்து நாளாகிறது. கடை விஷயமான கணக்குகள் எல்லாம் குழம்பிப்போயிருக்கிறது. யூனியன் போர்டு தேர்தல் வேலை வேறு இருக்கிறது. ஊரைச் சீர்படுத்துவதற்கு என்னைப் போன்ற யோக்கியன்தான் போர்டு தலைவராக இருக்கவேண்டுமாம்.. இதற்காக என் நண்பர்களெல்லாம் சேர்ந்து என்னை வற்புறுத்திஞர்கள். பொதுஜனப் பணிசெய்யவேண்டுமென்பதற்காகவே நான் அவர்களுடைய வேண்டுகோளை ஏற்றுக்கொண்டிருக்கிறேன். இந்தத் தேர்தல் வேலைகளெல்லாம் தீர்ந்தவுடன் ஆஸ்ரமத்துத் தலைவியிடம் கேட்டு என் தங்கையை மீட்டுவர முயற்சிக்கவேண்டும். இப்பொழுது இந்த முரு

கன் பணக்கார முருகனல்லவா. எவ்வளவோ கௌரவம் வேறு. இதைக்கொண்டாவது என் தங்கையை மீட்க முடியுமா என்று பார்ப்போம்.



## 25 சாரதாம்பாள்

மோகனுவை அனுதாஸ்ரமத்திலிருந்து ஸ்வீகாரமாக எடுத்துக்கொண்டு வந்தது முதல் அவளை என் சொந்த மகளாகவே பாவிக்கிறேன். அவளும் தன் சொந்த அம்மாவைப்போல் என்னிடம் ஒட்டி உறவாடுகிருள். வந்து இரண்டு வருஷமாயிற்றே. அவள் என்னிடம் ஒரு பொய் சொன்னதுண்டா! என் வார்த்தையை ஒரு தடவையாவது தட்டிப் பேசியதுண்டா! இவ்வளவு நற்குணங்கள் இவளுக்கு இயற்கையாகவே அமைந்திருக்கிறதா அல்லது அனுதாஸ்ரமத்தின் பயிற்சியினுல் ஏற்பட்டதா என்று தெரியவில்லை. இரண்டுமே சேர்ந்திருக்க வேண்டும்.

இரண்டு வருஷத்தில் இவள் நாட்டியம் நன்ருகப் பயின்று கொள்வாள் என்று நான் நினைத்திருந்தேன். இந்தப்பெண் ஒரே வருஷத்திற்குள் நான் கற்று வைத்த நாட்டிய வித்தைகளையெல்லாம் கற்றுக்கொண்டு விட்டாளே! கண்ணன் குழலூதுவதை இவள் அபிநயம் பிடிக்கும் போது, நான் மோகனுவைக் கண்ணன் உருவத்தில் அல்லவா காண்கிறேன்! அபிநயத்தில் வெகு நுணுக்கமான பாவத்தையெல்லாம் எவ்வளவு அநாயாசமாகக் காட்டுகிருள். இது மனிதப் பெண்ணுகவே தெரியவில்லை. போன ஜென்மத்தில் நாட்டியத்தில் விட்ட குறை தொட்ட குறையோடு பிறந்திருக்கிறதோ என்னவோ! இதையெல்லாம் நினைத்துப் பூரிப்படைவதிலேயே என் நேரம் கழிகிறது.

நாட்டியத்தில் என்னைவிட மோகனு அதிக ஆர்வம் காட்டுகிருளென்ருல் என் மனம் எப்படி இருக்கும்! ஒரே ஆனந்த மயம்தான். புதுப்பதங்களுக்கு இவள் தானுகவே நவீன முறையில் அபிநயம் பிடித்துப் பார்த்துக்

கொண்டு, என்னிடம் வந்து "அம்மா இந்தப் பதத்திற்கு இப்படி அபிநயம் பிடிக்கலாமா?" என்று கேட்பாள். எனக்கு ஒரே ஆச்சரியமாக இருக்கும்! இத்தனை அபூர்வ மான அபிநயம் சொல்லிக் கொடுத்து வருவதில்லையென்று எனக்கு நன்ருகத் தெரியும்.

போன சித்திரையில்தான் நாகேஸ்வரர் சந்நிதியில் மோகனுவின் நடனத்தை அரங்கேற்றம் செய்து வைத் தேன். அப்பொழுது ஜனங்கள் மெய்ம்மறந்து நாட்டியத் தில் லயித்திருந்ததை நன்ருக நான் கவனித்தேன். சுந்தரி யின் நடன அரங்கேற்றத்தன்று இருந்த கூட்டத்தைவிட இந்தக் கூட்டம் பெரிதாக இருந்தது. நாட்டியக் கலையில் பரிச்சயமுள்ள சிலர் என் வீடு தேடிவந்து நான் என் அபி மானப் புத்திரியாகிய இந்தப் பெண்ணுக்கு நாட்டியம் கற்பித்த திறமையைப் பாராட்டினுர்கள். நானு இவ்வள வையும் அவளுக்குச் சொல்லிக் கொடுத்தேன்? நான் எனக்குத் தெரிந்த அளவு கொஞ்சம் சொல்லி வைத்தேன். அவளல்லவா தன் சொந்த யுக்திகொண்டு இப்படி அபூர்வ மான பாவங்களையெல்லாம் நாட்டியத்தில் சரளமாகக் காண்பிக்கக் கற்றுக் கொண்டாள். அவள் தானுகக் கற்றுக்கொண்ட வித்தைக்காக எனக்கும் வீணை புகழ்! அவளுடைய அழகைப் பற்றிச் சொல்லாதவர்களே கிடை யாது. பதினைந்து வயது. மங்கைப் பருவம். மலரும் ரோஜா போலிருக்கிருள். ஆண்களெல்லாம் அன்று சபை யில் இவள் அழகில் சொக்கி மறந்திருந்தார்கள். பெண்க ளெல்லாம் பொருமைப் பட்டுக் கொண்டிருந்தார்கள். அன்று பெரிய பெரிய மைனர்களெல்லாம் நாட்டியம் முடிந்ததும் எங்களுடன் பேசிக்கொண்டே வீட்டுக்கு வந் தார்கள். ஆனுல் மோகனு அவர்களிடம் பேசவே விரும்ப வில்லையே! ஏன்? சுந்தரியைப்போல இவளுக்கும் ஆண் களையே பிடிக்காதோ? என் பழைய பழக்கத்தினுல் என் வீட்டுக்கு அடிக்கடி வரும் கிழவர் சுந்தரபட்டரைக்கூட இவள் வெறுப்போடல்லவா பார்க்கிருள்.

மோகனு விஷயத்தில் நான் மிகவும் ஜாக்ரதையாக இருக்க வேண்டும். ஆஸ்ரமத்திலேயே வளர்க்கப்பட்ட பெண். அதனுல் ஒழுங்கு, நல்நடத்தை, கற்பு என்று எப்படியெப்படியெல்லாமோ பாடம் சொல்லிக் கொடுத்திருப்பார்கள். ஆஸ்ரமத்தின் தலைவி, உபாத்தியாயினிகள் எல்லோருடைய பரிசுத்தமான வாழ்க்கையையே கவனித்து வந்திருக்கிருள். மேலும் மோகனுவின் தேஜஸைப் பார்த்தால் அவள் உயர்ந்த குடும்பத்தில் பிறந்த பெண் என்றே தோன்றுகிறது. அன்றுகூடச் சொன்னுளே தான் அனுதாஸ்ரமத்திற்கு வருவதற்குமுன் எங்கோ ஒரு வீட்டில் தன் பெற்றோர்களோடு வாழ்ந்ததாகச் சிறிது ஞாபகமிருக்கிறதென்று. நல்ல குடும்பத்தில் பிறந்த பெண்களுக்கு அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற குணங்கள் எங்கள் குலப்பெண்களைவிட இயற்கையில் அதிகமாகவே அமைந்திருக்கும். ஆண்களைக் கண்டால் மோகனு அவ்வளவு சங்கோஜப் படுவது இயற்கை தான்.

இங்கு வந்து பழகியவுடன் நான் ஒரு தாசி என்பதையும் தாசித்தொழில் என்றுல் என்ன என்பதையும் மோகனு ஒருவாறு கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கிருள். அவள் பேசும் முறையிலிருந்து தாசித்தொழில் அவளுக்குப் பிடிக்காதென்றுதான் தெரிகிறது. இப்படிப்பட்ட அழகும், குணமும், அறிவும் உள்ள பெண் மனம் வைத்துவிட்டால் ஆயிரக்கணக்காகப் பணம் தேடிவிடலாம். எல்லாம் அவள் நன்மைக்காகத்தான் நினைக்கிறேன். ஆடம்பரமாக வாழ்க்கை நடத்தலாம். எத்தனையோ பணக்கார வாலிபர்கள் தாசானு தாசனுக அவளுடைய ஏவல்களைச் செய்யத் தயாராகக் காத்திருப்பார்கள். அவளுடைய நாட்டியக் கலையின் புகழைப் பரப்புவதற்கும் எத்தனையோ பேர் முன்வருவார்கள். நான் வாழ்ந்ததைவிட அதிகமான பெரும் புகழும் பெற்று செல்வச் சீமாட்டியாக வாழலாம். ஆனுல் அவளுடைய எண்ணம் எப்படி இருக்கிறதோ!

என்னதான் இருந்தாலும், இந்த வயதில் உடலின் இன்ப உணர்ச்சிகள் தலை தூக்கி நிற்குமல்லவா! சந்நியாசினி போல இன்பங்களையெல்லாம் இந்த வயதில் தள்ளிவிட முடியுமா? வண்டுகளைத் தன்னிடம் இழுப்பதற்காகத் தானே மலர் கவர்ச்சிகரமான அழகையும் மதுரமான தேனையும் பெற்றிருக்கிறது. மலர், வண்டைக் கண்டவுடனேயே மயங்கி இன்ப விருந்தளிக்கிறதே! இதுதானே இயற்கை! ஆனால் இந்த மோகன புஷ்பம் வண்டுகளை வெறுக்கிறதே! இயற்கையை எதிர்த்துப் போராடுகிறாளா? செல்வம் சேர்க்கவேண்டுமென்று இவளுக்கு ஆசையில்லையா! தன் கலையின் மகிமையை நாடெங்கும் பரப்ப இவளுக்கு ஆர்வமில்லையா? ஆண்களை அடிமைப் படுத்த இவளுடைய பெண்மை உணர்ச்சி துடிதுடிக்க வில்லையா! இந்த மோகனாவின் குணமும் விபரீதமாகத் தான் இருக்கிறது.

தாசியாகவே வாழ்ந்து விட்ட எனக்குக் குடும்பப் பெண்களின் மனோ உறுதி நன்றாகப் புலப்படாதுதான். மோகனாவின் மனம் உறுதியுள்ளதாக இருந்தால் அவளுடைய போக்கின்படியே விட்டுவிட வேண்டியதுதான். சுந்தரியை இழந்து தவித்த அனுபவம் ஒன்று போதாதா எனக்கு. இனி மோகனாவிடம் ஆண்களைப் பற்றியே அதிகமாகப் பேசக்கூடாது. யாராவது அவளை விரும்பி வந்தாலும் அவர்களை நானே வெளியில் அனுப்பிவிட வேண்டும். அந்தப் பெண்ணிற்கு விருப்பமில்லாத ஒன்றை நான் வற்புறுத்த முயற்சிப்பானேன். அவளுக்காக என்னதோன்றுகிறதோ அதன்படி செய்யட்டும். என்னிடமுள்ள சொத்தை வைத்துக்கொண்டே அவள் சுகமாக வாழட்டும். அவள் தெரிந்து கொண்டிருக்கும் நாட்டியக்கலையே அவளுக்கு இன்பமளிக்கும். ஆனால் வாழ்க்கையின் இன்பம் அதோடு முடிந்து விடுகிறதா? 'அவள் எதிர்காலத்தில் எப்

படிப்பட்ட வாழ்க்கை நடத்த விரும்புகிறாள் என்பதை யாவது அறியவேண்டுமல்லவா! ரொம்ப ஜாக்ரதையாகப் பேச்சுக்கொடுத்து இது விஷயமாக அவள் மனதை அறியவேண்டும்.



என் நாட்டியத்தை மிகவும் விமரிசையாக நாகேஸ்வரர் கோவிலில் அரங்கேற்றி வைத்தார்கள். அன்றைய தினத்திலிருந்து என் மனம் ஏனோ நிம்மதியில்லாமலிருந்து வருகிறது. இதற்குக் காரணம் அன்று என்னை ஆடவர்கள் சுற்றிச்சுற்றி வந்துகொண்டிருந்ததுதான். அதிலிருந்து எத்தனையோ பேர் எங்கள் வீட்டிற்கும் வந்து அடிக்கடி என்னோடு பேச முயற்சிக்கிறார்கள். ஒரு பைத்தியக்காரன் என் பக்கத்திலேயே நெருங்கி உட்கார வருகிறான். வேறு எந்த வீட்டுப் பெண் அருகிலாவது இவ்வளவு தைரியமாக நெருங்குவானா அவன்? என்னிடம் மட்டும் இப்படி நெருங்குவதற்கு அவனுக்கு என்ன உரிமை! அவன் என்னிடம் நெருங்குவதை ஆட்சேபிக்க என்னைத் தவிர வேறு யாருமில்லை. என் தாயார் கூட இதைத் தடுக்கவில்லையே ஏன்! இனம் தெரியாத ஆண்கள் என்னிடம் இம்மாதிரி அயோக்கியத்தனமாக நடப்பது இவளுக்கும் பிடித்திருக்கிறதா?

நான் அனுதாஸ்ரமத்திலிருந்து இங்கு வந்தவுடனேயே என்னைப்பற்றிப் பலர் என் புதுத் தாயாரிடம் விசாரித்தார்கள். இரண்டொரு தாசிகள் "சரியான குட்டியைத்தான் பிடித்துக்கொண்டு வந்திருக்கிறாய். ஊரிலுள்ள மைனர்களையெல்லாம் மயக்கி அவர்கள் பணத்தையெல்லாம் சுரண்டிவிடுவாள்" என்று சொன்னார்கள். அப்புறம் நான் கொஞ்சம் கொஞ்சமாக தாசிகள் என்றால் யார்; அவர்களுடைய தொழில் என்னென்ன என்று எனக்குத் தெரிந்த இரண்டொரு நல்ல பெண்களிடம் கேட்டறிந்தேன். நான் அவர்களிடம் இதைப்பற்றிக் கேட்டதே அவர்களுக்கு விபரீதமாக இருந்தது. தாசிகளைப்பற்றி அவர்கள் சொல்லியபோதே எனக்குத் தாசிக் குலத்தைப்

பற்றி வெறுப்பு உண்டாயிற்று. அவர்கள் சொல்லிய வார்த்தைகளின் உண்மையை அனுபவப்பூர்வமாக உணர ஆரம்பிக்கும்போது மனம் துடிதுடித்து அலறுகிறது. என் தாயிடம் இதைப்பற்றி முறையிடலாமென்ருல் பயமாக இருக்கிறது. அவளே ஒரு தாசி. இன்னும் தாசி மனப் பான்மையுடனேயே இருக்கிருள். அவளிடமே தாசித் தொழிலைப்பற்றி இழிவாகப் பேசினுல் அவள் என்ன நினைப்பாளோ தெரியவில்லை.

நான் இரண்டொரு குடும்பப் பெண்களிடம் ரொம்பப் பிரியமாகப் பழகுவதைக்கூட என் தாய் விரும்பவில்லை. அதையும் ஜாடைமாடையாகத் தெரிவிக்கிருள். இதற்கு என்னைக் கண்டிக்காமல் அவர்களைப்போய்ச் சண்டை பிடித்தாளாம். "நான், பெற்று வளர்த்த பிள்ளையைப் பறிகொடுத்துவிட்டு, இந்தப்பெண்ணை எடுத்து வளர்க் கிறேன். நீங்கள் இவளிடம் ஏதாவது சொல்லிவைத்து அதனுல் இவள் மனம்திரும்பி எங்காவது ஓடிவிடாமல் இருக்கவேண்டும். தயவுசெய்து ஒன்றும் போதனை செய் யாதீர்கள்." என்று அவர்களிடம் சொன்னுளாம்.

இவளுடைய மகள் சுந்தரி பிறருடைய பேச்சைக் கேட்டுத் தன் பெற்றதாயை மறந்து புத்தியில்லாமல் ஓடினுல், நானும் அப்படிச் செய்துவிடுவேனென்று நினைக் கிருள்போலிருக்கிறது. நான் அப்படியெல்லாம் இவளுக் குத் துரோகம் செய்யமாட்டேனென்று ஒருநாள் பேச்சு வாக்கில் நன்ருக உறுதி கொடுத்துவிட்டேன். அருமை யான கலையை எனக்குக்கொடுத்துப் பிரியமாக வளர்த்த அன்னையைப்பிரிந்து ஓடுவதா? என் வாக்குறுதியைக் கேட்டு என் தாய் சாரதாம்பாள் எவ்வளவு ஆனந்தமடைந் தாள். என் வளர்ப்புத்தாயின் மகள் சுந்தரி எதனுல், எப் படி, எதற்காக ஓடினுள் என்றெல்லாம் விசாரிக்க வேண்டு மென்று ஆவல். ஆனுல் எவரும் அதைப்பற்றிச் சொல்ல மறுத்துவிட்டார்கள். சாரதாம்பாள் நாட்டியத்தில் எவ்

வளவு திறமைசாலியோ அவ்வளவுக்குப் பிறரிடம் சண்டை யிடுவதிலும் சாமர்த்தியசாலியென்று அக்கம் பக்கத்தி லுள்ளவர்கள் சொன்னார்கள். ஆனால் எனக்குத் தெரிந்த வரை இவள் சண்டைபோடுவதையே நான் பார்த்ததில்லை. எவ்வளவோ பிரியமாகத்தான் எல்லோரிடமும் நடந்து கொள்கிறாள். யாராவது எனக்குப் போதனைசெய்து, நான் இந்த வீட்டைவிட்டு ஓடும்படி செய்துவிடுவார்களோ என்றுமட்டும் இவளுக்குப் பயமிருக்கிறது. நான் இவளை விட்டுப் பிரிந்துவிடக் கூடாது என்ற பாசத்தினால் வருகிற பயம்தான் இப்பொழுது கோபமாக மாறியிருக்கிறது. மற்றப்படி அவளுக்கு என்னைப்பற்றியவரையில் மிகவும் திருப்தி. ஆடவர்கள் என்னோடு பேசுவதையும் நெருங்கிப் பழகுவதையும் நான் விரும்பவில்லையென்பதை இவள் நன் றாகத் தெரிந்துகொண்டாள். இப்பொழுதெல்லாம் எங்கள் வீட்டுக்கு வருகிற வாலிபர்களிடம் இவளே ஏதாவது சொல்லி உடனே வெளியே அனுப்பிவிடுகிறாள்.

நடனக்கச்சேரி செய்யவேண்டுமென்று பல இடங் களிலிருந்து வரவேற்புகள் வரும். அப்பொழுதெல்லாம் என் தாய் "மோகனா,இந்த ஊரில்போய் நாட்டிக்கச்சேரி செய்யவேண்டும். உனக்கு இஷ்டமிருக்கிறதா? இல்லையா? இஷ்டமில்லையானால் போகவேண்டாம்." என்று பயந்து கொண்டேதான் கேட்பாள்.

என் நாட்டியத் திறமையைப் பிறருக்குக் காட்டுவதில் எனக்கு இஷ்டமில்லாமலா இருக்கும். அபூர்வமான கலையைப் பழகியது எதற்காக? வீட்டிலேயே அடைத்து வைத்திருப்பதற்காகவா? ஜனங்களின் மனதை மகிழ்விப் பதற்காகத்தானே கலைகள் தோன்றின! நாட்டியக் கலையை நான் என் தாய் சாரதாம்பாளிடம் நன்றாகக் கற்றிருக்கிறேன். இந்தக் கலையைப் பிறர் அனுபவிக்கும் படி செய்வது என் கடமைதானே! ஆடவர்கள் இதையே வியாஜமாக வைத்துக்கொண்டு என் விருப்பத்திற்கு

மாருக என்னிடம் நெருங்கிப் பழக முயற்சிக்கிறார்களல்லவா! அதனால் நான் வெளியில் போய் நாட்டியம் ஆடுவதையே வெறுக்கிறேன் என்று அவள் சந்தேகப்படுகிறாள். ஆடவர்களைப்பற்றி எனக்கு அக்கரையே இல்லை. அவர்களுடைய அற்ப ஆசைகளுக்கெல்லாம் இடம் கொடாதபடி நான் பார்த்துக்கொள்வேன். அதற்கு வேண்டிய மனவுறுதி எனக்கு உண்டு. ரோஜாச்செடியை வளர்த்து அதன் அழகிய மலரை அடையவேண்டுமானால் முட்கள் நம்மைக் குத்திவிடாமல் சமாளித்துக் கொள்ள யூகம் வேண்டும். செடியிலுள்ள முள் குத்திவிடுமேயென்று ரோஜா மலரைப் பறித்து அனுபவிக்காமல் விட்டுவிடுவதா! ஜனங்கள் புனிதத்தன்மையோடு நாட்டியக் கலையை மட்டும் அனுபவிக்கும்படி செய்ய எனக்குத் திறமையுண்டு. அநேக தாசிப்பெண்கள் பணம் சேர்க்கும் ஆசையுடனும், மிருக உணர்ச்சியைக் கிளறிவிடும் நோக்கத்துடனும் நாட்டியத்தை ஆடி வந்திருப்பதனால்தான் நடன மேடையில் கலை மனப்பான்மை மறைந்து காம விகாரங்கள் மிகுந்து விட்டன. தேவியினுடைய சிலையைப் பக்தி மனப்பான்மையோடு பார்ப்பதற்குப் பழகியிருக்கிறார்களல்லவா இந்த ஆடவர்கள். அதே போல ஜனங்கள் என் உருவத்தைக் கலையின் பீடமாக நினைத்து மகிழ்ந்தால் காமவிகாரத்திற்கு இடமேது!

ஓவியத்திற்குத் திரைச்சீலையும், வர்ணங்களும் சாதனமாக இருப்பது போல நாட்டியக் கலையை வெளிப்படுத்துவதற்கு என் அழகிய உருவம் ஒரு சாதனம். அற்புதமான ஓவியத்தின் அழகை வியந்து அனுபவிக்காமல் அது வரையப்பட்டிருக்கும் துணியை, முண்டாசாகக் கட்டிக்கொள்ள ஒருவன் விரும்பினால் அவனை எவ்வளவு பெரிய மூடன் என்று உலகம் சொல்லும். ஜனங்கள் உடலை மறந்துவிட்டுக் கலையைமட்டும் அனுபவித்து மகிழும்படி செய்ய எனக்கு வழி தெரியும். ஆகையால் நட்டுவக்காரருடன் சென்று பல இடங்களில் என் நாட்டியத் திறமையைக்

காட்டி வருகிறேன். ஜனங்கள் நாட்டியக் கச்சேரியில் நாட்டியத்தை மட்டிலும் அனுபவிக்கப் பழகி வருகிருர்கள்.

என் எதிர்கால வாழ்க்கையை எப்படி நடத்த விரும்புகிறேனென்று அறிய என் தாய் முயற்சிக்கிருள். அதைப் பற்றி நான் திட்டம் போட்டுக்கொண்டுதானிருக்கிறேன்.



## 27 முருகன்

எத்தனையோ தடவை அனுதாஸ்ரமத்துக்கு அலைந்த பின்புதான் ஆஸ்ரமத்தின் தலைவியைக் காணமுடிந்தது. மோகனாவைப்பற்றி அவர்களிடம் விசாரித்தறிந்தேன். நாலைந்து வருஷங்களுக்கு முன்பே, நாகப்பட்டணத்தி லிருந்து வந்திருந்த சாரதாம்பாள் என்ற ஒரு அம்மணிக்கு என் தங்கை மோகனாவை ஸ்வீகாரமாகக் கொடுத்து விட்டார்களாம். இதைக் கேட்டவுடன் என் மனம் துடி துடித்தது. நாங்கள் அவர்களிடம் அடைக்கலமென்று ஒப்படைத்த ஒரு பெண்ணை இவ்வாறு இன்னொருவரிடம் கொடுத்துவிடுவது நீதியாகுமா என்று அந்த ஆஸ்ரமத் தலைவியிடம் சண்டைபோட நினைத்தேன். ஆனால் ஒன்றுமே பேசவில்லை. என் கோபத்தையெல்லாம் அடக்கிக்கொண்டு "ஏனம்மா இம்மாதிரி ஒப்படைத்தீர்கள்?" என்று கெஞ் சிக் கேட்டேன். கல்வியறிவையும் கலையறிவையும் பரப்பு வதுதான் ஆஸ்ரமத்தின் நோக்கமாம். அங்கு வளர்க்கப் படும் பிள்ளைகளை இந்த நோக்கத்துடனேதான் வளர்க்கிறார் களாம். மோகனாவிற்கு நாட்டியக்கலையில் ஆர்வமிருந்ததா லும், நாட்டியக்கலையைப் பயிற்றுவிக்கும் நோக்கத்துட னேயே சாரதம்பாள் அவளை ஸ்வீகாரமாகக் கேட்டதா லும், பலத்த ஆலோசனையின் பின்னர் அவளைச் சாரதாம் பாளோடு அனுப்பிவிட்டதாக அந்த அம்மாள் விளக்கி னார்கள்.

அந்த அம்மாவைச் சொல்வதில் என்ன குற்றமிருக் கிறது. மோகனாவை வளர்க்கமுடியாத நிலைமையில் நாங் கள் இருந்தபோது என் தகப்பனார் "ஆஸ்ரமத்திற்கே இவள் சொந்தம்" என்று கொடுத்துவிட்டாரே. ஆகையி னால் அவர்கள் தங்கள் இஷ்டப்படி செய்தது நியாயம் தானே! மோகனா நாட்டியக் கலையைப் பயில்வதே நல்லது

என்று அவர்களுக்குப் பட்டிருக்கலாம். அது அவர்களுடைய குற்றமாகுமா?

நாட்டியக்கலை பயிற்றுவிக்கும் சாரதாம்பாள் என்றால் அவள் ஒரு தாசியாகத்தான் இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. என் தங்கை மோகனா ஒரு தாசியின் வீட்டில் ஸ்வீகார புத்திரியாக இருந்து நாட்டியம் பழகுவதா? என் தங்கை ஒரு நாட்டியக்காரி! தான் இன்னாருடைய தங்கை; இன்னாருடைய மகள் என்று அவளுக்கு இப்பொழுது தெரியவா போகிறது. சிறு வயதில் பிரிந்தது. அதேரூபத்தில்தான் இன்றும் அவள் என் மனக்கண்ணில் நிற்கிறாள். எப்பொழுதாவது நாட்டியக்காரி மோகனா என்று நான் கேள்விப்பட்டால் என் மனம் என்ன பாடு படும். இந்த அவமானத்தை என் செல்வத்தினால் நிவர்த்திக்க முடியுமா?

மோகனாவிற்கு நாட்டியத்தில் விருப்பமிருந்ததாக ஆஸ்ரமத்துத் தலைவி சொன்னார்கள். சிறு பெண். தெரியாமல் ஏதோ சொல்லியிருப்பாள், நாட்டியம் பழக விரும்புகிறேன் என்று. தாசிக் குலத்தைப்பற்றியெல்லாம் அவளுக்கு அப்பொழுது என்ன தெரிந்திருக்கும்! பொல்லாத தாசிகள் இம்மாதிரிச் சிறு பெண்களை ஏமாற்றிக்கொண்டு போய் வளர்த்து, வயது வந்தவுடன் அவர்களை ஆடவர்களின் அக்கிரமங்களுக்கு ஆளாக்கிவைத்துப் பணம் சேர்க்கிறார்கள். இதை ஆஸ்ரமத்தின் தலைவி ஏன் உணராமல் போய்விட்டாள்! என் தங்கை மோகனா தாசித்தொழில் நடத்திக்கொண்டிருக்கிறாள் என்பதை நான் என்றைக்காவது கேள்விப்பட்டுத்தான் ஆகவேண்டுமா! இந்த எண்ணம் என் மனதைச் சுரீரென்று குத்துகிறது.

எனக்கு மோகனா என்றொரு தங்கை உண்டென்பதையும், அவள் நாகப்பட்டணத்திலுள்ள ஒரு தாசி வீட்டில் வளர்ந்துவருகிறாள் என்பதையும் எவருமே அறியமாட்டார்கள். ஆனால் என் மனதை நான் ஏமாற்ற முடியுமா?

மோகனுவைப்பற்றி எப்பொழுது நினைத்தாலும் அவள் தாசி வீட்டுப் பெண் என்றல்லவா நினைக்கவேண்டிவரும். இதைப்பற்றி எண்ண எண்ண என் மனம் குழம்புகிறது. வேறு வேலையே ஓடவில்லை. நாகப்பட்டணத்தில் அந்தத் தாசி சாரதாம்பாளின் விலாசத்தை ஆஸ்ரமத்திலிருந்து கேட்டு எழுதி வைத்திருக்கிறேன். கூடிய சீக்கிரம் அங்கு போய் என் தங்கையிடமே அவளுடைய பிறப்பு வளர்ப்பை யெல்லாம் எடுத்துச் சொல்லவேண்டும். சாரதாம்பாளிடம் கெஞ்சிக்கேட்டு, அவளை என்னோடு அனுப்பிவிடும்படி சொல்லவேண்டும். அவள் சம்மதிக்கவில்லையானுல் வேண்டிய பணம் கொடுத்தாவது அந்தத் தாசிக்குடும்பத்தி லிருந்து என் தங்கை மோகனுவை மீட்டு வரவேண்டும். மோகனு தனது உண்மை வரலாறுகளை என்மூலம் தெரிந்து கொண்டால் உடனே என்னிடம் ஓடிவந்து விடுவாளென் பதில் சந்தேகமே இல்லை. இது விஷயமாக நாகப் பட்டிணத்திற்குப்போய்த் தீவிர முயற்சி செய்வதுதான் சரி யான வழி.

* * *

நாகப்பட்டிணத்திற்குப்போய் சாரதாம்பாளைப்பற்றி விசாரித்தேன். நான் யாரிடம் விசாரித்தேனே அந்த ஆட் கள் என்னைப்பற்றியே விசாரிக்க ஆரம்பித்தார்கள். மோக னுவைக் ‘காதலி’க்க விரும்பும் ஒருவனுக என்னை அவர்கள் சந்தேகித்துவிட்டார்கள். அந்தநோக்கத்துடன் நான் அந்த வீட்டிற்குள் போகமுடியாது என்று எனக்குச் சொல்வதற் காகத்தான் அவர்கள் என்னைப்பற்றி இப்படி விசாரித்தார் களாம். இதிலிருந்து மோகனு இன்னும் பரிசுத்தமான பெண்ணுகவே இருக்கிறுள் என்பதை உணர்ந்து மகிழ்ந் தேன். நான் என்தங்கை மோகனுவின் வரலாற்றையும் என்னுடைய இப்பொழுதைய நிலைமையையும் தங்கையின் மீதுள்ள பாசத்தையும் அவர்களுக்கு எடுத்து விளக்கி னேன். அதன்மேல் அவர்களுக்கு என்மீது இரக்கம் ஏற்பட்டது. நான் நேரடியாக சாரதாம்பாளிடம் போய் எவ்வளவு கெஞ்சிக் கூத்தாடினுலும் அவள் தன் உயிருக்

குயிராக வைத்திருக்கும் மோகனுவை விடமாட்டாளென்று திட்டமாகத் தெரிவித்தார்கள். நான் மோகனுவைத் தனியாக அழைத்துக்கொண்டுபோய் எல்லா உண்மைகளை யும் தெளிவாகக்கூறிஞல் ஒருசமயம் அவள் சகோதர பாசத்திஞல் தன் தாய்க்குத்தெரியாமல் என்னுடன் இருந்துவிடச் சம்மதிக்கலாம் என்ருர்கள். மோகனுவைத் தனிமையில்கண்டு பேசுவதற்கும் அவர்களே ஒரு வழி சொன்ஞர்கள்.

நான் சாரதாம்பாளின் வீட்டுக்குப்போய் ஏதாவது ஒரு விசேஷத்தைச்சொல்லி, மோகனுவை நாகர்கோவிலில் ஒரு நாட்டியக்கச்சேரி செய்வதற்கு அமர்த்தவேண்டும். அதன்படி நட்டுவக்கிழவனுடன் மோகனு நாகர்கோவி லுக்கு வருவாள். அப்பொழுது அவளிடம் எல்லா விபரத்தையும் தெரிவித்து அவளை அங்கேயே வைத்துக் கொண்டு விடவேண்டும். இதுதான் அவர்கள் சொன்ன வழி.

அவர்கள் சொன்ன யோசனையின்படியே சாரதாம் பாளின் வீட்டுக்குப்போனேன். மோகனுவை நான் கண் டேன். இளமை ததும்பும் மகா ரூபவதியாகக் கண்டேன் அவளை. அழுத முகத்துடன் சிறுவயதில் பிரிந்தவளை ஆனந் தப் புன்னகையுடன் மங்கைப் பருவத்தில் கண்டேன். அதே முகம். நான் சிறுவயதில் கண்டமுகம் அப்படியே இருக்கிறது. நேற்றுப் பிரிந்து இன்று காண்பதுபோல் இருந்தது. அவளைக்கண்டவுடனேயே "தங்கை" என்று சொல்லிக் கட்டிக்கொண்டு கோவென்று அழவேண்டும் போலவிருந்தது. அத்தனை ரூபவதியான என் தங்கையை அந்தக்ஷணமே தாசிக்குலம் என்ற மடுவிலிருந்து கரை யேற்றவேண்டுமென்று துடிதுடித்தேன். அத்தனை ஆத்தி ரத்தையும் அடக்கிக்கொண்டு சாரதாம்பாளிடம், நாகர் கோவிலில் யூனியன் போர்டு தேர்தலில் நான் அடைந்த வெற்றியைக் கொண்டாட என்வீட்டில் ஒரு தேநீர்க்

கச்சேரி வைக்கவேண்டுமென்றும் அதற்கு மோகனவின் நாட்டியம் வைக்கவேண்டுமென்றும் சொன்னேன். என் தங்கையென்று தெரிந்தும் நான் அவளை நாட்டியக் கச்சேரிக்காக அழைக்கும்படி நேர்ந்ததே என்று எனக்கு வருத்தம். அவள் நாட்டியமாட வரவேண்டுமென்பது என்நோக்கம் அல்லவே. இந்த உபாயத்தின் மூலம்தான் எங்கள் உறவை நான் அவளிடம் நிதானமாக எடுத்துச் சொல்ல ஒரு வழி ஏற்படும்.

மோகனவின் நாட்டியக் கச்சேரிக்கு ஐநூறு ரூபாய் கேட்டாள் சாரதாம்பாள். அவள் கேட்ட பணத்தை நான் உடனே எண்ணிக்கொடுத்தேன். சாரதாம்பாளுக்கு ரொம்ப சந்தோஷமுண்டாய்விட்டது. மோகனவைக் கூப்பிட்டுப் பணத்தை எடுத்துக்கொண்டுபோய் வைக்கச் சொன்னாள். அப்பொழுதுதான் நான் என் தங்கை மோகனவை நன்றாகப் பார்த்தேன். மோகன என்னை உற்று நோக்கினாள். "காப்பி போடுகிறேன், அண்ணா. சாப்பிட்டுவிட்டுப் போகலாம்" என்று மோகனவே சொன்னாள். எனக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை. "அண்ணா" என்று தன்னை அறியாமலே அன்பாகக் கூப்பிட்டாள். அந்த 'அண்ணா' என்ற சொல் என் இதயத்தையே குளிரச்செய்துவிட்டது. கள்ளமற்ற உள்ளத்துடன் அவள் என்னோடு பேசியதைக் கேட்டவுடன் அவளுடைய இயற்கையான நற்குணங்களை நான் நன்றாக உணரமுடிந்தது. தாசிகளுக்குரிய விஷத்தன்மை அவள் வார்த்தைகளில் தொனிக்கவேயில்லை. சாரதாம்பாளின் தொழில் போதனை இன்னும் மோகனம்பாளிடம் பாடமாகவில்லை என்பதையும் இதன்மூலம் நான் உணர்ந்தேன்.

தாசியின் வீட்டில் காப்பி சாப்பிடுவதா என்று தயங்கினேன். என் தங்கையல்லவா அருமையாகக் கேட்கிறாள் காப்பி வேண்டுமா என்று. அவள் கையினால் போட்ட

காப்பி சாப்பிடவேண்டுமென்று நினைத்து. "சரி போட்டுக்கொடு, சாப்பிடுகிறேன்" என்றேன்.

இதற்கு முன் மோகனு அங்கு வரும் ஆடவர்களுக்கு எதிரில் வருவதேயில்லையாம். அப்படி இருந்த மோகனு இன்று என்னை இப்படி உபசரிப்பது சாரதாம்பாளுக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்ததாம். மோகனு உள்ளே காப்பி போடப்போயிருந்த சமயத்தில் இதை சாரதாம்பாளே என்னிடம் சொன்னுள். பெரிய பணக்காரனுன என்மீது மோகனுவிற்குக் 'காதல்' விழுந்துவிட்டது என்று தான் அந்தக் கிழட்டுத் தாசியின் மனம் மகிழ்ந்துகொண்டிருந்தது. என் தங்கை மோகனுவைத் தாசித்தொழிலில் இறக்கிவிட அவள் வெகு காலமாகப் பிரயத்தனம் செய்ததாகவும் மோகனு அதற்கெல்லாம் இணங்காமலிருந்ததாகவும் நான் முன்னமே கேள்விப்பட்டிருந்தேனல்லவா! ஆகையால்தான் மோகனு என்னுடன் இயற்கையான சகோதர வாஞ்சையுடன் பிரியமாக நடந்துகொண்டதை சாரதாம்பாள் தவருக எண்ணி மகிழ்ந்தாள். எனக்கு இன்னும் பலத்த உபசாரங்கள் செய்யும்படி அவள் மோகனுவைத் தூண்டினுள்.

நான் மோகனுவிடம் நெருங்கிக் 'காதல்' வார்த்தைகளைப் பேசவில்லையே என்று சாரதாம்பாளுக்கு வருத்தம். பைத்தியக்காரப் பெண் மோகனு இப்படிப்பட்ட ஒரு பணக்கார மைனரை விட்டுவிடக்கூடாதே என்றெல்லாம் அவள் ஏங்கியிருக்கவேண்டும். பின்பு நான் என் தங்கையிடம் விடை பெற்றுக்கொண்டு எழுந்தபோது சாரதாம்பாள் மிகவும் ஏமாற்றமடைந்திருக்கவேண்டும். மோகனு என்னிடம் மட்டிலும் அவ்வளவு தாராளமாகப் பேசியது சாரதாம்பாளுக்குத் திகைப்பை உண்டாக்கியிருக்குமென்பதை நான் உணர்ந்துகொண்டேன். மோகனு திடீரென்று ஒரேநாளில் தன் தொழிலுக்குத் தயாராகி வருகிருள் என்று மகிழ்ந்திருந்தாள். ஆனல் எதிர்பாராதவிதமாக நாங்கள் பிரிந்ததைக்கண்டால் அவளுக்கு ஏமாற்றம்தானே!

மோகனா நாகர்கோவிலுக்கு வந்து என்னைத் திரும்பவும் மயக்கக்கூடும் என்றும் அவளுக்கு ஒரு நம்பிக்கை இருந்திருக்கலாம். இயற்கையாக எழும் சகோதர சகோதரி பாசத்தை, தாசித்தனத்திலேயே தன் மனதை அழுகவிட்டிருந்த சாரதாம்பாளால் எப்படி உணர முடியும்!

* * *

குறிப்பிட்ட தினத்தன்று மோகனா ஒரு நட்டுவக் கிழவனுடன் வந்து சேர்ந்தாள். வந்தவுடன் முறைப்படி அவள் என் க்ஷேமத்தை விசாரித்தாள். பின்பு, தான் எந்த இடத்தில் எப்படி நாட்டியமாடவேண்டுமென்பதையெல்லாம் என்னிடம் கேட்டாள். நாட்டியமாடுவதில் அவளுக்கு இத்தனை ஆவல் ஏன் உண்டாயிற்று என்றே என்னால் அறியமுடியவில்லை. ஏதோ பழகிவிட்ட தோஷம் போலிருக்கிறது.

"நீ நாட்டியம் ஆடுவது இருக்கட்டும். அதற்குமுன் உன்னிடம் தனியாகப் பேசவேண்டும்" என்றேன். அவள் முகம் சட்டென்று சிவந்தது. "மோகனா, என் துயரக் கதையை உன்னிடம் சொல்லவேண்டும். வேறொன்றுமில்லை." என்று சமாதானப்படுத்தி அவளை மட்டிலும் அழைத்துக் கொண்டு வீட்டு ஹாலில்போய் உட்கார்ந்தோம்.

தன் பூர்வோத்தரத்தை அவளே சொல்லட்டுமென்பதற்காக, அவள் சாரதாம்பாள் வீட்டுக்குப் போவதற்கு முன் எங்கிருந்தாள் என்பதையெல்லாம் படிப்படியாக அவளிடம் விசாரித்தேன். தான் அனாதாஸ்ரமத்தில் வாழ்ந்ததையெல்லாம் மலர்ந்த முகத்துடன் எடுத்துச் சொல்லி, அந்த ஆஸ்ரமத்துத் தலைவியையும் இப்பொழுது பார்த்துவிட்டுப் போகவேண்டுமென்றாள். ஆஸ்ரமத்தில் சேர்க்கப்படுவதற்கு முன்னுள்ள தன் வாழ்க்கையை மோகனா அடியோடு மறந்தே விட்டாள். நான் சில இடங்களையும் ஆட்களையும் ஞாபகமூட்டவே அவளுக்கு, ஒரு அண்ணனைப்பற்றியும் தன் தகப்பனாரைப்பற்றியும் வீட்

டைப்பற்றியும் லேசாக ஞாபகம் வந்தது. நான்தான் அவளுடைய சொந்த அண்ணன் என்று நாக்குக் குழறத் தெரிவித்தவுடன் அவள் ஓடிவந்து என்னைக்கட்டிக் கொண்டு கதறிவிட்டாள். தான் வந்திருந்த காரியத்தையே மறந்துவிட்டாள்.

நாங்கள் இருவரும் பழைய கதைகளையெல்லாம் எவ்வளவோ நேரம் பேசினோம். அன்று அவளே சமையல் செய்தாள். அண்ணனும் தங்கையும் ஒன்ருக உட்கார்ந்து சாப்பிட்டோம். அவளை நாகர்கோவிலுக்கு வரவழைப்பதற்காக நான் செய்த சூழ்ச்சிகளையெல்லாம் சொன்னேன். அவள் விழுந்து விழுந்து சிரித்தாள். நான் அவளைக் கண்டுபிடிக்க இவ்வளவு முயற்சியெடுத்ததைக்கேட்டு அவள் உள்ளம் உருகியது. தந்தையின் மரணத்தை நான் சொல்லியபோது நாங்கள் இருவருமே துக்கப்பட்டோம். அவ்வளவு கஷ்டதசையிலிருந்து நான் இவ்வளவு தூரம் பிரபலமடைந்திருந்தது அவளுக்கு அளவிலாத பெருமையைக்கொடுத்தது. "அன்பிலும், செல்வத்திலும், குணத்திலும், கௌரவத்திலும் உயர்ந்த ஒருவரை என் சொந்த அண்ணனுக அடைந்திருக்கும் நான் யாரோ அனுதையென்றல்லவா இவ்வளவு நாளாக எண்ணி எண்ணி ஏங்கிக்கொண்டிருந்தேன், அண்ணு!" என்று உணர்ச்சிப் பிரவாகத்தில் குமுறினுள்.

நாலைந்து நாட்கள் இங்கேயே தங்கியிருக்கப்போவதாக சாரதாம்பாளுக்கு உடனே கடிதம் எழுதிவிட்டாள். எங்கள் பழையவீடு, என் கடை, தோட்டம், அவள் வசித்த அனுதாஸ்ரமம் எல்லாவற்றையும் சுற்றிப்பார்த்தோம். இரண்டொரு நாட்களில் என் வீடு தோட்டம் ஊர் எல்லாம் அவளுக்கு மிகவும் பழக்கப்பட்ட இடம்போலவே ஆகிவிட்டது.

இனி அவள் என்னுடனேயே இருக்கவேண்டுமென்றேன். அவளும் அதையேதான் சொன்னுள். தன்னை

மிகவும் அன்புடன் வளர்த்த சாரதாம்பாளிடம் எல்லாவற்றையும் சொல்லி அவளுடைய அனுமதியைப் பெற்றுக் கொண்டு நிச்சயமாகத் திரும்பிவிடுவதாகச் சொன்னாள். அவள் உறுதி கூறியதிலிருந்து நிச்சயமாக அவள் திரும்பி விடுவாள் என்று எனக்கு நம்பிக்கை ஏற்பட்டது.

"மோகனா, திரும்பிவரும்போது உன் கால் சலங்கைகளையெல்லாம் அங்கேயே போட்டுவிட்டு வந்துவிடு. நீ நாட்டியமாடுவதெல்லாம் அந்த வீட்டோடு நின்றுவிடட்டும்" என்றேன்.

"ஏன் அண்ணா, நாட்டியத்தை விடச்சொல்கிறாய்? அதுதானே எனக்கு உயிர்நாடி. அதை என்னால் விடமுடியாது. நாடெங்கும் என் நாட்டியத் திறமையைக் காட்ட வேண்டும்" என்றாள் மோகனா.

அவள் இப்படிச் சொன்னது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நாட்டியம் தாசிகளுக்குரிய தொழில். குடும்பத்தில் வாழக்கூடிய பெண்களுக்கு அது ஏற்றதல்ல என்று நான் எவ்வளவோ எடுத்துச்சொல்லியும் அவள் காதுகள் நான் சொன்னவற்றை ஏற்கவேயில்லை. ஆத்மதிருப்தியாம். புனிதமான கலையாம். அதற்கும் தாசித்தொழிலுக்கும் சம்பந்தமில்லையாம். என்னென்னவோ பயங்கரமான வார்த்தைகளைக்கொண்டு என்னோடு விவாதம் செய்தாள். முடிவில் "அண்ணா, நீ என்ன சொன்னாலும் நாட்டியத்தை நான் விடப்போவதில்லை" என்றாள் அவள்.

"அப்படியானால் நீ இங்கு வரவேண்டியதில்லை" என்றேன் நான். நான் இப்படிக் கேவலமாகச் சொன்னது எனக்கே வருத்தமாக இருக்கிறது. "நான் உன் தங்கை என்ற பெருமை ஒன்றே எனக்குப் போதுமானது. குடும்ப ஸ்திரீயென்ற கௌரவம் எனக்கு வேண்டியதில்லை. தாசி வீட்டிலிருந்தே கலைப்பணி செய்துவருவேன். அடிக்கடி நான் உன்னைப் பார்த்துப்போகமட்டும் வருவேன், அண்ணா" என்று சொல்லிவிட்டு அவள் போய்விட்டாள்.

மோகனுவின் அழகும், அன்பும், உறுதியும், ஊக்கமும், நற்குணங்களும் நாட்டியத்திற்கா பயன்படவேண்டும்! நல்ல குடும்பத்திற்கல்லவா இவை தேவை. மோகனுவுக்கிருக்கும் நாட்டியப்பைத்தியம் ஒன்றுதான் இப்பொழுது அவளை என்னிடமிருந்து பிரித்துவிட்டது. இதிலிருந்து நாட்டியத்தையே ஒரு மோசமான கூத்தாட்டம் என்று வெறுத்தேன். வீட்டிலிருக்கவேண்டிய என் தங்கை ஊரூராக நாட்டியமாடுகிருள் என்பதைக்கேட்டு நான் சகிக்கமுடியுமா! கலைக்காகவே அவள் நாட்டியமாடுகிருளாம். எங்கள் சந்திப்பு இப்படியா முறியவேண்டும்! மோகனு இப்படிப் பிடிவாதம்செய்வாளென்று நான் எதிர்பார்க்கவேயில்லை. மற்றப்படி என்மீது எவ்வளவு வாத்சல்யம் கொண்டிருக்கிருள்! இனி என் தங்கையை மறந்துவிடவேண்டியதுதான். அவள் நாட்டியத்திற்கு அர்ப்பணமாகிவிட்டாள். ஆனல் அவள் தன்வாழ்க்கையை எப்படி அமைத்துக்கொள்ளப்போகிருளோ தெரியவில்லை. தாசியாக வாழமாட்டாளென்று அவளுடைய உறுதிமொழிகள் நன்ருகத் தெரிவிக்கின்றன. அடிக்கடி அவளைப்போய்ப் பார்த்துவரவேண்டும்.



முருகன் என் சொந்த அண்ணன். இதை அறிந்தவுடன் என்மனத்தில் ஒரே கொந்தளிப்பல்லவா ஏற்பட்டது. எவ்வளவு உயர்ந்தகுணம். ஊரில் அவருக்கு எவ்வளவு மரியாதை! இடைவிடாது உழைத்து வியாபாரத்தின் மூலம் ஏராளமாகப் பொருளும் தேடியிருக்கிறார். ஏழை யாக இருந்து சுய முயற்சியால் இவ்வளவு மேன்மை யடைந்திருக்கிறார் என் அண்ணன். அவருக்கு என்மீது எவ்வளவு வாஞ்சை! ஆனால்! ஆனல்........! அவருக்கு நாட்டியக்கலையின்மேல் ஏன் அவ்வளவு வெறுப்பு? நான் எவ்வளவோ எடுத்துச் சொன்னேனே, புனிதத்தன்மை யோடு கலைப்பணிசெய்யக்கூடிய உறுதி என்னிடம் உண்டு என்று. நான் சலங்கை கட்டிக்கொண்டு நாட்டியமாடு வது அவருக்குப் பிடிக்கவில்லை. இதற்காக நாட்டியத்தை விட்டுவிட நான் விரும்பவில்லை. பிற சமூகங்கள் என்னைத் தாசி, வேசி, பரத்தை என்றழைத்தாலும் நான் அதைப் பற்றிக் கவலைப்படப் போவதில்லை.

பெறுதற்கரிய நாட்டியத்திறமை என்னிடம் அமைந் திருக்கிறது. அதைப் பயன்படுத்தாவிட்டால் கலைக்கே நான் துரோகம் செய்ததுபோலல்லவா ஆகும். குடும்பத் தில் வாழ்வது என்ற இன்பத்திற்காகக் கலையின்பத்தைத் தள்ளி விடுவதா? நாட்டியக்கலை என்உயிர். என் ஜீவ னைத் தள்ளிவிட்டு நான் எப்படி வாழமுடியும். முருகன் என் அண்ணன். இந்த உலகில் நான் ஒரு அனாதையில்லை. இந்த மகிழ்ச்சியே போதுமானது. அண்ணனோடு கூடவே இருந்தால்தான் மகிழ்ச்சியடையமுடியுமா? இவ்வளவு காலம் இன்னாரென்று அறியாமலே பிரிந்திருந்தோம். இனி அறிந்தே பிரிந்திருப்போம். அண்ணனைக் காண வேண்டும் என்று ஆசை ஏற்படும்போதெல்லாம் நாகர்

கோவிலுக்குப் போய்ப் பார்த்துக்கொள்வது. நாட்டி யக்கலைக்காக இப்படியெல்லாம் நான் என்மனதைத் தேற்றிக்கொண்டேன். ஆனாலும் அண்ணன்மீதுள்ள பாசம் உள்ளூரப் பொங்கிக்கொண்டிருந்தது.

நாகர்கோவிலிலிருந்து திரும்பிவந்ததும் என்தாய் சார தாம்பாளிடம் நடந்ததையெல்லாம் ஒன்றுவிடாமல் சொன் னேன். நான் நாட்டியக்கலைக்குப் பணிசெய்வதற்கென்றே சகோதரபாசத்தைத் தியாகம் செய்ததைக்குறித்து அவ ளுக்கு எல்லையற்ற மகிழ்ச்சி. அவளுடைய உணர்ச்சி வேகத்தில் "என் மோகனக் கண்ணே, நான் மறுத்துச் சொல்வேனென்று பயப்படாதே. உனக்கு இஷ்டமிருந் தால், நாட்டியத்தை விட்டுவிட்டு உன் அண்ணனுடன் போய் சுகமாக வாழ்ந்திரு. அவர் சொல்லுகிறபடி உங்கள் குலத்திலுள்ள ஒரு கணவனை மணந்துகொள்" என்று முழுமனதுடனேதான் சொன்னாள். அண்ணனுக் கும் எனக்கும் ஏற்பட்டுள்ள பாசத்தைக் கண்டுதான் அவள் கூட இவ்வளவுதாரம் தாராளமாகச் சொன்னாள். ஆனால் இதனாலும் கலைப்பணியின் மீதுள்ள என் உறுதி தளர வில்லை. நாட்டியத்திற்காகவே உயிர் வாழவேண்டுமென்ற உறுதி என் மனதில் இன்னும் பலமாகவே வேரூன்றியது.

நாட்டியத்தோடு வாழ்வதற்கு என் அண்ணன் வீட் டில் இடமில்லை. ஆகவே சாரதாம்பாள் வீடுதான் எனக் குரியது. நான் பிறந்தது பண்டாரக்குலத்தில். இருப்பது தாசிக்குலத்தவரிடையில். ஈனத்தொழில் புரிவதனால் தாசிக்குலம் அவமானமடைந்திருக்கிறது. இந்த அவமா னத்தைப் போக்குவதற்குச் சில சீர்திருத்தங்கள் செய்ய வேண்டும். பண்டாரக்குலம் பூக்கட்டுவதைத் தொழிலா கக் கொண்டிருப்பதுபோல தாசிக்குலம் நாட்டியத்தையும் சங்கீதத்தையும் மட்டும் தொழிலாகக்கொண்டு உலகில் வாழமுடியாதா? தாசிக்குலத்தினர் இந்த முடிவுக்கு வந்து

விட்டால் இவர்களும் ஏன் மற்ற சமூகத்தினரைப்போல உலகத்தில் கௌரவமாக வாழமுடியாது?

தாசிக் குலத்தினரின்மேல் ஏற்பட்டிருக்கும் அவமானம் ஒழிவதற்கு, இந்தக்குலத்திலுள்ள ஆண்களும் பெண்களும் விவாக முறையை ஏற்படுத்திக்கொண்டு விபசாரத்தை ஒழிக்கப் பாடுபடவேண்டும். இதற்கு நானே வழிகாட்டியாக இருக்கப்போகிறேன். என் வீட்டுக்கு நான்கு வீடுகளுக்கு அப்பால் இருக்கும் வேலாயுதம், தான் தாசிக்குலத்தில் பிறந்துவிட்டதற்காக மிகவும் அவமானப்பட்டுத் தன்னையே நொந்துகொள்கிறாராம். இது தவறு. பிறந்தது குற்றமல்ல. தன் சமூகத்தின்மீது ஏற்பட்டிருக்கும் அவமானத்தை ஒழிக்க அவர் முன்வர வேண்டும்.

வேலாயுதம் பி. ஏ. வரை படித்திருக்கிறார். நல்ல அழகன். உயர்ந்த குணமுடையவர். தான் தாசியின் மகன் என்பதனால் யாரோடும் அதிகமாகப் பேசுவதேயில்லை. வீட்டு மாடியிலேயே உட்கார்ந்து கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறார். படிப்பு முடியும்வரை தன் வீட்டிற்கே அவர் அதிகமாக வந்ததில்லை. வந்தாலும் இரண்டொருநாள் தங்கிவிட்டுப் பழையபடி சென்னைக்குப் போய்விடுவார். படிப்பு முடிந்து இங்கு வந்த பிறகு அவருடைய கவலை மிகவும் அதிகரித்துவிட்டது. கவலை எல்லாம் தன் பிறப்பைப் பற்றித்தான். அவர் ஏன் அவ்வாறு வீணுகக் கவலைப்பட்டுக்கொண்டிருக்க வேண்டும்? அதனால் பயன் ஏதும் உண்டா? தன்குடும்பத்தையும் சமூகத்தையும் சீர்திருத்த அவர் பாடுபட்டால் என்ன?

என் யோசனைகளை அவருக்கு எடுத்துச் சொன்னால் அதன்படி அவர் முயற்சி செய்வாரென்று நம்புகிறேன். அவருடைய முயற்சிக்கு நானும் உதவி செய்யலாம். எங்கள் இருவருடைய ஒத்துழைப்பினால், இந்தச் சமூகத்திற்கு ஓரளவு முன்னேற்றம் ஏற்படுமென்பது நிச்சயம். இதை

நன்ருகத் தெரிந்துகொண்டு நான் சும்மாயிருப்பானேன்! நல்ல காரியத்தைச் செய்வதில் தாமதமே கூடாது. மனத் துணிவுதான் வெற்றிப்பாதையின் கைகாட்டி.

எனக்கு இன்னும் ஒரு யோசனை தோன்றுகிறது. நான் வேலாயுதத்தைக் கல்யாணம் செய்துகொண்டால் என்ன! இதனுல் எவ்வளவோ நன்மைகள் உண்டாகும். ஒரு கணவனை மணந்துகொண்டு நான் நாட்டியம் ஆடப் போனுல், வேறு எந்த ஆடவனுவது என்னைப்பற்றி இப்போது நினைப்பதுபோல இழிவாக நினைக்க முடியுமா? எனக்குக் கணவன் என்று ஒருவர் இருந்துவிட்டால், பிறர் என்னிடம் நெருங்கிப்பழக வருவார்களா?

என் வாழ்க்கைக்கு இம்மாதிரி ஒரு வழி வகுத்துக் கொண்டால் நான் சமூக ஊழல்களைப்பற்றிக் கவலைப் படாமல் என் கலையைமட்டிலும் பிரகாசிக்கச்செய்யலாம். நான் அவரை மணந்துகொள்வதனுல் எனது கலைப்பணி இன்னும் நன்ருக சோபிக்கும். குடும்ப வாழ்க்கையின் இன்பத்தையும் நான் பெறமுடியும். வேலாயுதமும், பிற சமூகத்தினரைப்போல் ஒரு குடும்பத்தின் தலைவராக விளங்கலாம். இதனுல் அவருடைய மனக்கஷ்டமும் நீங்கி விடும். மேலும் எங்கள் கல்யாணத்தின்மூலமாக நாங்கள் சமூகத்திற்கு ஒரு சேவை செய்தவர்கள் ஆவோம். இந்தச் சமூகத்திலுள்ள ஆண் பெண்கள் எங்களைப்போலவே கல் யாணம் செய்துகொண்டு வாழ விரும்பலாம் அல்லவா!

சமூக முன்னேற்றத்திற்காகவும், கலைப்பணிக்காகவும் பல திட்டங்கள் போட்டு, வாழ்நாள் முழுதும் பாடுபட வேண்டுமானுல், நாங்கள் இருவரும் கல்யாணம் செய்து கொள்வதுதான் சிறந்தவழி. என்னை மணந்துகொள்ள அவர் மறுக்கமாட்டாரென்று நினைக்கிறேன். என் தாயார் சாரதாம்பாளும் இந்த ஏற்பாட்டிற்குச் சம்மதித்து விடுவாள். எனது நல்வாழ்வும், கலைப்பணியும்தானே அவளுடைய வாழ்க்கையின் லட்சியம். நான் தாசித் தொழிலை

யும் நடத்தி ஏராளமாகப் பணம் சேர்க்கவில்லையே என்று அவளுக்கு வருத்தமிருக்கலாம். அதற்கு நான் என்ன செய்வது! கலைப்பணி ஒன்றுதான் எனது லட்சியம். தாயார் எனது நோக்கத்தை நன்ருகப் புரிந்துகொண்டத ஞல் என்னிடம் தாசித்தொழிலைப்பற்றிப் பேசுவதில்லை. என்னை என் போக்கின்படி கலைப்பணிமட்டும் செய்யும்படி விட்டுவிட்டாள். இந்தக்கல்யாண யோசனைக்கு அவள் என்ன சொல்கிருளென்று பார்க்கலாம்.

இந்தக் கல்யாண ஏற்பாடு வெற்றிகரமாக நிறைவேறி விட்டால், நாட்டியக்கலையைக் கைக்கொள்வதே அவ மானம் என்று நினைக்கும் என் அண்ணனைப் போன்றவர்க ளது மனப்பான்மை மாறிவிடும். அவமானச் சின்னத் தோடு இணைக்கப்பட்டிருக்கும் கலை, அதிலிருந்து விடுதலை யடைந்துவிட்டால் கலையை யார்தான் வெறுப்பார்கள்? இதை நிறைவேற்ற மனத்துணிவுதான் வேண்டும். இப் பொழுதே நான் வேலாயுதத்தைப் போய்ப் பார்த்து இதைப்பற்றிச் சொல்கிறேன்.



# 29 வேலாயுதம்

ஆஹா! மோகனு என்ன அழகாகப் பேசினுள். பைத்தியக்காரத்தனமாக என் குலத்தின் இழிவைப்பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டேயிருந்தேனே. நான் பி. ஏ. வரை படித்திருந்து என்ன பயன். மோகனு சொல்லியது போல பல திட்டங்கள் வகுத்துக்கொண்டு சமூகசேவை செய்யலாம். ஆனுல் குலத்தைப்பற்றி ஒரு சபையில் நின்று எப்படிப் பேசுவது!

மோகனு! பெயருக்கேற்றபடி மோகனமான ரூபம்! எவ்வளவு அழகாக, ஆணித்தரமாக, புத்திசாலித்தனமாகப் பேசுகிறுள். முன்னமே அவளைப்பற்றி லேசாகக் கேள்விப் பட்டிருந்தேன். சாரதாம்பாள் தனக்கு வாரிசாக இவளை ஒரு அனுதாஸ்ரமத்திலிருந்து கூட்டிக்கொண்டுவந்து நாட்டியமெல்லாம் கற்பித்திருக்கிறுளாம். ஆனுல் இவ்வளவு காலமாக தாசிக்குடும்பத்திலேயே இருந்திருந்தும் தாசித் தொழிலில் அவள் மனம் ஈடுபட வில்லையாம். ஆச்சரியமான பெண்தான். அனுதாஸ்ரமத்தில் வளர்ந்ததனுல் ஒழுக்கம், கற்பு என்பதைப்பற்றியெல்லாம் நன்றுகத்தெரிந்துகொண்டிருக்கிறுள். அதுமட்டுமல்ல! சீர்திருத்தத்தைப்பற்றி எவ்வளவு ஆத்திரத்தோடு பேசினுள். சிறந்த அறிவாளியாகவும் இருக்கிறுள். இப்படிப்பட்ட பெண்களால்தான் தாசிக்குலம் முன்னேற்றம் அடையமுடியும். எவ்வளவு துணிவுடன் சொன்னுள் "நாம் இருவரும் கல்யாணம் செய்துகொண்டு சமூகசேவையும், கலைப்பணியும் செய்ய வேண்டும்" என்று. தாசிக்குலத்தினர் எல்லாரும் கல்யாணம் செய்துகொண்டு குடும்பவாழ்க்கை நடத்த வேண்டுமென்பதே ஒரு சிறந்த சீர்திருத்தம்தான். பிற சமூகத்தினர்களைப்போல ஒழுங்கான குடும்பவாழ்க்கை

நடத்திவருவதென்ற வழக்கம் ஏற்பட்டுவிட்டால் இந்தக் குலத்தைப்பற்றி யார் இழிவாகப் பேசமுடியும்?

மோகனுவின் திட்டம் சரியான திட்டம்தான். மேலும் மோகனுவைப்போல ஒரு மனைவியை அடைவது என் பாக்யமென்றே சொல்லவேண்டும். சீக்கிரமே எனக்கு ஒரு உத்தியோகம் கிடைத்துவிட்டால், மோகனுவுடன் எங்காவதுபோய் கௌரவமாக வாழ்க்கை நடத்தலாம். மனதிற்கு மிகவும் ஆறுதல் கிடைக்கும்.



என் தீர்மானங்கள் சாரதாம்பாளுக்கும் வேலாயுதத்திற்கும் மிகவும் பிடித்திருந்தது. எங்கள் திருமணம் வெகு சிறப்பாக நடந்தது. என் அண்ணனும் வந்திருந்தார். இப்பொழுது என் சீர்திருத்தத்தைக் கேட்டு அவருக்கும் ஒருவாறு திருப்தி ஏற்பட்டது. நான் இவ்வாறு துணிந்து மணம் செய்துகொண்டு வாழ்வதைப்பற்றி வேலாயுதத்திற்கு ரொம்பப் பெருமை. எங்கள் முயற்சியினுல் தாசிக் குலத்தில் இதுபோல அநேக விவாகங்கள் நடக்க ஏற்பாடாகிறது. விபசாரிகளாக வாழ்வதன் வெட்கக்கேட்டை ஆற அமர யோசித்துப்பார்த்தால் அவர்கள் எப்படி விபசாரிகளாக இருக்க முடியும்? இந்த உணர்ச்சியைக் கிளப்பி விடுவதற்குச் சிலர் தோன்ருமல் இருந்த காரணத்தினுல் தான் தாசிக்குலம் வெகுகாலமாகத் தன் பழைய வழியிலேயே சென்று அவமானத்தையே மதிப்பாக எண்ணி வாழ்ந்துவந்தது. இனி அப்படி அல்ல. தாசிக்குலம்தான் தன் கொள்கையை மாற்றிக்கொள்ள ஆரம்பித்துவிட்டதே. இந்த மாறுதலுக்கு நானும் ஒரு சிறு தொண்டு செய்திருப்பதைப்பற்றி மகிழ்ச்சியடைகிறேன்.

நாகேஸ்வரர் சந்நிதியில் எங்கள் திருமணம் நடந்தபோது எவ்வளவு கும்பல்! பலர் பலவிதமாகப் பேசிக்கொண்டார்கள். "தாசிகள் கல்யாணம் செய்துகொள்வதாமே!" என்ருன் ஒரு பழமை வாதி! "இந்த முறை நல்லதுதான்!" என்று மேல்போக்காகச் சொன்ஞன் ஒரு சந்தர்ப்பவாதி! "இன்னும் என்னென்ன விபரீதமெல்லாம் நடக்கப்போகிறதோ" என்று ஒரு கிழத்தாசி என் தாய் சாரதாம்பாளிடம் ஆச்சரியப்பட்டாள். வளர்ப்புத் தாய்க்கு நான் இதுபோன்ற வாழ்க்கை வாழச் சம்மத

மில்லாவிடினும் புரட்சிக்கு இடம் கொடுத்துத்தானே ஆக வேண்டுமென்று விட்டுக்கொடுத்துவிட்டாள்.

என் கணவருக்குத் திருநெல்வேலியில் வேலையாகி இருக்கிறது. அவர் அங்கே போயிருக்கிறார். இன்னும் ஒருவாரத்தில் நானும் கணவரும் அங்கு குடும்பம் நடத்த வேண்டும். என் தாயாரும் எங்களுடனேயே வந்து வசிக்க விரும்புகிறாள். கணவர் திருநெல்வேலியில் நல்ல இடத்தில் வீடு அமர்த்திவிட்டாராம். சீக்கிரமே புறப்பட்டுவந்து எங்களை அழைத்துக்கொண்டு போவதாக அவரிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது.



## 31 வேலாயுதம்

மோகனவுடன் இங்கு வாழ்க்கை நடத்திவருவது மனதிற்கு உல்லாசமாக இருக்கிறது. திருநெல்வேலி எங்களுக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. ஊரைச்சுற்றிலும் பசுமையான வயல்கள். பொருனை நதி நகருக்கருகில் தங்கச்சரடுபோல வளைந்து செல்கிறது. பால் நிலவு பொழி கையில் நதியின் மணற்பரப்பில் நானும் மோகனவும் உட்கார்ந்து இன்பமாகப் பேசிக்கொண்டிருப்போம்.

நாங்கள் தாசிக் குலத்துத் தம்பதிகள் என்பதை அடியோடு மறைத்து விட்டோம். ஏன்? நாங்களே அதை மறந்துவிட்டோம். குலத்தைப்பற்றி யோசிப்பதற்கே எங்கள் இன்ப வாழ்வில் நேரமில்லை. மோகன வெகு சாமர்த்தியமாக வீட்டு வேலைகளைக் கவனித்து வருவதனல் எனக்குக் குடும்பப் பொறுப்புகள் அதிகமாக இல்லை. காலையில் நான் எழுந்திருப்பதற்குள் காபி தயாராகிவிடும். நான் ஆற்றுக்குப் போய்க் குளித்துவிட்டுத் திரும்பி வருவ தற்குள் மணி எட்டாகிவிடும். பின்பு பத்திரிகை பார்த்துக் கொண்டிருப்பேன். ஒன்பது மணிக்குள் மோகன சமையல் செய்து விடுவாள். சாப்பிட்டுவிட்டுச் சிறிது நேரம் தமாஷாகப் பேசிக்கொண்டிருப்போம். எனக்கு ஆபீசுக்கு நேரமாகிவிடும். சைக்கிளை எடுத்துக்கொண்டு புறப்பட்டு விடுவேன்.

மாலையில் ஆபீஸ் வேலை முடிந்ததும் நேராக வீட்டுக்கு வந்துவிடுவேன். மாலை நேரம்தான் மகிழ்ச்சிக்குரிய நேரம். நானும் மோகனவும் மாலை நேரத்தைப் பலவிதத்தில் இன்பமாகக் கழிப்போம். சில நாள் மோகன வீணையுடன் பாடுவாள். நானும் என் மாமியார் சாரதாம்பாளும் மெய்ம்மறந்து அவளுடைய கீத வெள்ளத்தில் மூழ்கியிருப்

போம். சில வேளைகளில் ரேடியோப் பெட்டியைத் திருப்பிக் கிராமப்பேச்சுக்களையும், நாடகங்களையும் கேட்டு ரசிப்போம். அடிக்கடி நாங்கள் இருவரும் ஒன்ருக வெளியே உலாவச் செல்வோம்.

நகரில் ஏதாவது நல்ல சங்கீதக் கச்சேரிகள், அறிவாளிகளின் பிரசங்கங்கள் இருந்தால் நாங்கள் போகத் தவறுவதில்லை. ஒரு நாள் நாங்களிருவரும் சாரதாம்பாளுடன் முதல்முதலாக ஒரு நாட்டியக் கச்சேரியைப் பார்க்கச் சென்றிருந்தோம். அன்று ஏன் தான் அங்கு போனேம் என்று பின்பு நான் கவலைப்படும்படி ஆயிற்று.

நாட்டியமாடிய பெண் சுசீலா, பரத நாட்டியம், மணிபுரி நடனம், மயில் நடனம், என்று பலவித நவீன நாட்டிய வகைகளை மிகவும் திறமையோடுதான் ஆடினுள். ஜனக்கூட்டம் நாட்டியக்காரியைப்பற்றிய பூர்வோத்திரங்களையெல்லாம் கிண்டலாகப் பேசிக்கொண்டே ஆட்டபாட்டத்தின் அழகைக்கண்டு களித்தார்கள். அப்பொழுது மோகனு எரிச்சல் பட்டுக்கொண்டேதான் நாட்டியத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். சாரதாம்பாள் தன் பொக்கை வாயைத் திறந்து அடிக்கடி கேவலமாகச் சிரித்தாள். நாட்டியமாடும் பெண் பாவங்களை நன்ருகவே வெளியிடாமல் ஆட்டபாட்டத்தையே பிரதானமாகக் காட்டுகிருள் என்பது இவர்களுடைய வருத்தம். மோகனுவின் கட்டாயத்தின்பேரில் நாங்கள் பாதி நேரத்திலேயே எழுந்து வீட்டுக்கு வந்துவிட்டோம்.

அதுமுதல் மோகனுவிற்கு நாட்டியப் பைத்தியம் பலமாகப் பிடித்துக்கொண்டது. அதே மேடையில் தனது நடனத்திறமையைக் காட்டுவதற்கு ஒரு சபையின் மூலம் ஏற்பாடு செய்யவேண்டுமென்று என்னை வற்புறுத்தினுள். எனக்கு இது பிடிக்கவேயில்லை. சாரதாம்பாளும் மோகனுவின் வேண்டுதலுக்குச் சிபார்சு செய்தாள்.

கலை கலை என்று இருவரும் புலம்புகிறார்களே ஒழிய சபையின் முன்னால் நின்று ஆடுவதனால் குடும்ப கௌரவம் எப்படி ஆகிவிடும் என்பதை அவர்களிருவரும் யோசிக்க வில்லை. இன்னார் மனைவி சபையில் போய் நாட்டியமாடு கிறாள் என்றால் எனக்கல்லவா அவமானம். மோகனா கற்ற கலை வீணாகிவிடுமே என்று சாரதாம்பாளுக்கு ரொம்ப வருத்தம். அதற்கென்ன செய்வது? குடும்ப வாழ்க்கை என்று ஏற்பட்டுவிட்டால் கலைப் பணி செய்வது கஷ் டம்தான். தலையில் பாரத்தைச் சுமந்துகொண்டு போகி றவன் அண்ணாந்து ஆகாயக் கப்பலைப் பார்க்க முடியாது தான். கலைப் பணி சிறந்ததுதான். ஆனால் மோகனா குடும்ப பாரத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறாளே! ஆத்ம திருப்திக்காக வேண்டுமானால் வீட்டில் வைத்து நாட்டியம் ஆடிக்கொள்ளட்டுமே. யார் வேண்டாமென்கிறார்கள். கற்ற கலையைப் பிறருக்குச் சொல்லிக்கொடுக்காமலிருந்தால் வீணாகிவிடுமேயென்று சாரதாம்பாள் கவலைப்படுகிறாள். இப்பொழுது நாட்டியம் பழகுவதற்கு அநேக பெண்கள் ஆசைப்படுகிறார்கள். மோகனா அவர்களுக்கு நாட்டியம் சொல்லிக் கொடுக்கட்டுமே. அதைப்பற்றியும் எனக்கு ஆக்ஷேபணையில்லை. நானே அதற்கு ஏற்பாடு செய்து வைப்பேன்.

மோகனாவிடம் கண்டிப்பாகச் சொல்லிவிட்டேன் "சபையில் போய் நாட்டியமாடுவது நமக்கு அழகல்ல. இதற்கு நான் அனுமதி கொடுக்கமாட்டேன்" என்று; இதனால் மோகனாவிற்கு என்மீது மிகவும் வருத்தம். இரண்டு நாட்களாக என்னோடு சரியாகப் பேசவே இல்லை. என்ன ஆகிறது என்று பார்ப்போம்.



நான் என்னென்னவோ நினைத்தேன். எப்படியெல்லாமோ முடிந்தது. எனது கலைப்பணிக்கு ஒரு பாதுகாப்பாக இருக்குமென்று கல்யாண வாழ்க்கையை நாடினேன். ஐயோ! இந்த வாழ்க்கை என் கலையைச் சிறையிட்டு விட்டதே. சபையில்போய் நாட்டியம் ஆடக்கூடாதென்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார் என் கணவர். புருஷன் மனது கோணுமல் நடந்துகொள்ளவேண்டுமென்று இப்பொழுது என் தாயாரும் புத்திசொல்கிருள். எனக்கும் அது சரியென்றுதான் படுகிறது. குடும்பத்திலிருந்தால் கணவருடைய இஷ்டப்படி நடக்கவேண்டியதுதானே மனைவியாகிய என் கடமை. ஆனுல் என்னுள்ளே குமுறிக் கொண்டிருக்கும் கலையார்வம், இந்த வாழ்க்கையையே வெறுத்துவிட்டு, நடனமேடைக்கு ஓடிவிடும்படி தூண்டுகிறது. நாட்டில் கலையைப் பரப்புவதற்கே என் வாழ்நாளைச் செலவிட்டால் என்ன!

சேச்சே! நான் அவ்வாறு போய்விட்டால் என் கணவரின் மனம் என்னபாடுபடும்! இந்த ஒரு விஷயத்தைத் தவிர வேறு ஒரு விதத்திலும் எங்களுக்குள் அபிப்பிராயபேதமே கிடையாது. நான் அவருக்காக என் கலையை விட்டுவிடுவதா என்பதுதான் பிரச்னை. மேடையில் போய் நான் நாட்டியமாடினுல், அவருக்கு அவமானமாக இருக்குமென்று சொல்லுகிருர். அவருடைய ஸ்தானத்தில் நான் இருந்தால் எனக்கெப்படியிருக்கும்!

தான் தாசிக்குலத்தில் பிறந்ததைப்பற்றியே சதா வருத்தப்பட்டுக்கொண்டிருந்தவர். தன் ஊரைவிட்டு இங்குவந்து கௌரவமான ஒரு அரசாங்க உத்தியோகத்திலிருக்கிருர். கவலையற்ற குடும்பவாழ்க்கை. மற்றக் குடும்ப ஸ்திரீகளைப்போலவே நானும் குடும்பப் பொறுப்பைமட்

டும் நிர்வகித்துக்கொண்டிருந்தால் போதுமென்று அவர் விரும்புகிருர்.

நான் சபைகளில்போய் நாட்டியமாடினுல் ஜனங்கள் என்னைப்பற்றியும், என் கணவரைப்பற்றியும் ஏதாவது தங்கள் மனம்போனவாறு பேசிக்கொள்ளத்தான் செய்வார்கள். எங்கள் மனது புண்படும்படியாகவும் அவர்கள் பேசக்கூடும். அதனுல்தான் என் கணவர் என் வேண்டுகோளை மறுக்கிருர். நான் தனியாக இருந்திருந்தால் இதையெல்லாம் கொஞ்சம்கூடப் பொருட்படுத்தமாட்டேன். என்னைப்பற்றிக் கேவலமாக யாராவது சொல்லிவிட்டால் அவருக்கும் சேர்ந்தல்லவா அவமானம் ஏற்படுகிறது. என் மனதிற்குகந்த கணவருக்கு நான் இவ்விதமான மனக்கஷ்டத்தைக் கொடுப்பானேன். கலையுணர்ச்சி மனதைப் பீறிக்கொண்டு வரும்போது அவர் சொல்வதுபோல வீட்டிலுள்ள நடராஜ விக்ரகத்தின் முன்னிலையிலேயே நடனமாடி என் ஆவலைத் தீர்த்துக்கொள்கிறேன். நாலைந்து சிறு பெண்களுக்கு நாட்டியம் கற்பித்துக் கொடுக்க வேண்டும். இதற்கு என் கணவரே ஏற்பாடு செய்வதாகச் சொல்லுகிருர். சரி. மேடையில் நடனமாடவேண்டுமென்ற ஆசையை ஒழித்துவிட நிச்சயித்துவிட்டேன். இந்தத் தீர்மானம் என் கணவருக்கு மிகவும் திருப்தியளிக்கும். குடும்பரதமும் முட்டுக்கட்டையின்றி முன்போல இன்பப்பாதையில் சரளமாக ஓடும்.

கணவரின் கௌரவத்திற்காக, குடும்ப வாழ்க்கையின் நலத்திற்காகக் கலைப்பணியைத் தியாகம் செய்துவிட்டேன். என் கல்யாண வாழ்க்கை கலையை விழுங்கிவிட்டது. இயற்கை நியதி அப்படி இருக்கிறது. நான் என்ன செய்வது! தாயார் சாரதாம்பாளும் இந்தப் புரட்சிக்கு இடம் கொடுத்துவிட்டாள். எங்கள் குலத்தில் கலைப்பணி மங்கியது. கல்யாண வாழ்க்கை மிஞ்சியது. இது விபரீதமான மாறுதல்தான்.

முற்றிற்று.

# அபூர்வப் பிறவிகள்

(ஆசிரியர் "மாறன்" எழுதிய ஹாஸ்யக் கதைத் தொகுதி)

"அபூர்வப் பிறவிகள்" என்ற தொகுதியில் ஆசிரியர் பல அபூர்வ கதா பாத்திரங்களைச் சிருஷ்டித்திருக்கிறார். விசித்திர மான கற்பனைச் சம்பவங்களில் இந்த அபூர்வப் பிறவிகள் தோன்றி வாசகர்களுக்கு உண்மையான ஹாஸ்யச் சுவையை ஊட்டுகின்றன. "மாறன்" எழுதும் ஹாஸ்யங்கள் வெறும் சிரிப்பை மட்டும் உண்டாக்குபவை அல்ல. வாசகர்களின் சிந்தையையும் உள்ளத்தையும் களிக்கச்செய்கின்றன.

இந்த ஹாஸ்யக் கதைகள் பத்திரிகைகளில் வெளிவந்த போது பல நேயர்கள் இவற்றை வியந்து பாராட்டி எழுதியிருக் கிறார்கள். "நகைச் சுவை மணி "மாறன்" இக்கதைகளில் அலைமோதும் ஹாஸ்யக்கடலின் கொந்தளிப்பை நம் கண்முன் நிறுத்துகிறார்" என்று ஒரு பத்திராதிபர் இவருடைய கதை களைப் புகழ்கிறார். ஒவ்வொருவரும் அவசியம் வாங்கிப்படித்து இன்புறவேண்டிய ஹாஸ்யப் பொக்கிஷம்.

விலை ரூ. 2—8—0

கார்த்திகேயினி பிரசுரம்,

ராமச்சந்திரபுரம் :: புதுக்கோட்டை ஸ்டேட்.

*விரைவில் வெளிவரும்*

௳

# பிள்ளையார் சுழி

'சாவேரி'

(உயர்ந்த பண்புடைய அரிய கட்டுரைகள்)

*நமது தமிழர் நாகரிகம் பழமையானது. பெருமை யானது. நமது பழமையும், பெருமையும் புதிய தமிழில், புதிய முறையில் எப்படி மிளிர்கின்றன என்பதை இத்தொகுதியில் தெளிவுறக் காணலாம்*

**கார்த்திகேயினி பிரசுரம்,**

**ராமச்சந்திரபுரம், :: புதுக்கோட்டை ஸ்டேட்.**

# NAMASKARAM

is the maiden publication of Messrs. Karthikeyini Prachuram. But the production is as competent as that of any other publication company which has its existence for decades.

"SUKHI" the author of this book is one of the best humourous writers of Tamilnad. He commands an appealing and flowing style fully studded with punching humours, which reminds us of the great English author Charles Dickens.

"SUKHI" is developing the art of humour for the past so many years and his frequent writings in Tamil Magazines are swallowed very eagerly by readers. The secret of his success lies in his choice of topics. He never selects his 'plot' outside our social life. He has no mania for imaginory stunts.

"SUKHI" has managed to capture a coveted position in the hearts of Tamil knowing public.

The entire book which contains 21 Short Stories fully plunged in satire, offers the readers a very good intellectual feast.

"President"

## எமது பொங்கல் வெளியீடு

# ★ வன மல்லிகை ★

(சிறுகதைகள்)

ஆசிரியர் 'சோமு'வின் கவிதைகளும் கதைகளும் தமிழ் வாசகரை மிகவும் மகிழ்வித்துள்ளன. எமது பொங்கல் வெளியீடாக வரும் இந்தப் புதுத் தொகுதியில், 'சோமு'வின் இரண்டு குயில்கள், மரப்பாலம், ஷாஃஹுமா, கைகேயி முதலிய அற்புதமான கதைகள் சேர்ந்துள்ளன.

**விலை மூன்று ரூபாய்.**


கார்த்திகேயினி பிரசுரம்,

ராமச்சந்திரபுரம் :: புதுக்கோட்டை ஸ்டேட்.

## வெளி வருகின்றன



பிள்ளையார் சுழி 'சாவேரி'
(கட்டுரைகள்)

அபூர்வப் பிறவிகள் 'மாறன்'
(சிறுகதைகள்)

பிரிவு 'சோன்யா டின்'



கார்த்திகேயினி பிரசுரம்

# கார்த்திகேயினி பிரசுரம்



| | | |
|---|---|---|
| நமஸ்காரம் (கதைகள்) | 'சுகி' | 2 8 0 |
| சிப்பாய் ஹிருதயம் (நாவல்) | 'சுகி' | 1 8 0 |
| வன மல்லிகை (கதைகள்) | 'சோமு' | (அச்சில்) |
| யாழ் ஒலி (கதைகள்) | 'சோமு' | ,, |
| வாழப் பிறந்தோம் (கட்டுரைகள்) | சுப. நா. | ,, |



## கார்த்திகேயினி பிரசுரம்

ராமச்சந்திரபுரம் : புதுக்கோட்டை ஸ்டேட்

Shakti Press Ltd., Madras 14, P.I.C. No. MS. 23, Copies 1,000—21-1-47.